உ

சிவமயம்



# திருக்கூவப் புராணம்

[ மூலம் ]

சருக்க உரையாக்கம் :

திருப்புகழ் சதுரர்

**சே. த. இராமலிங்கம் பிள்ளை, B.A., B.T.**

சென்னை.



வெளியிட்டோர் :

வெ. சுப்பராய முதலியார்,

குமாரச்சேரி

உ

சிவமயம்



# திருக்கூவப் புராணம்

[ மூலம் ]

சருக்க உரையாக்கம் :

திருப்புகழ் சதுரர்

**சே. த. இராமலிங்கம் பிள்ளை, B.A., B.T.**

**சென்னை.**



வெளியிட்டோர் :

வெ. சுப்பராய முதலியார்,

— **குமாரச்சேரி** —

**விசுவாவசு, வைகாசி]** : :

# முகவுரை

மாண்புறு மக்களாய்ப் பிறந்த நாம் எல்லாம் வல்ல இறைவனடி போற்றி அவனது திருவருள் பெறுவதே பெரும் பேருகும். அந்தத் திருவருள் குருவருளின்றி வராது.

"மூர்த்தி தலம் தீர்த்தம்
முறையாய்த் தொடங்கினர்க்கோர்
வார்த்தை சொலச் சற்குருவும்
வாய்க்கும் பராபரமே"

என்றபடி குருவருள் பெறுதற்கு மூர்த்தி, தலம், தீர்த்த வழிபாடு அவசியமாகும். இம் மூன்றும் சிறப்பாக அமைந்த தலம், நற்றொண்டை நாட்டில் நலமுறத் தேவாரம் பெற்ற முப்பத்திரண்டு தலங்களில் ஒன்ருன திருவிற்கோலம் என்னும் திருக்கூவமாகும். இது திருவாலங்காட்டிற்குத் தென் திசையிலுள்ளது. இத் தலத்தின் வடக்கில் காஞ்சியும் மேற்கில் இலம்பையங் கோட்டூரும் அமைந்துள்ளன.

இத் தலத்தின் சிறப்பு, புராண ரத்தினம் எனப் புகழப் படும் காந்தமா புராணத்தில் சனற் குமார சங்கிதையில் உள்ள காளிகா காண்டத்தில் பேசப்பட்டுள்ளது. இதனைப் புராணமாகச் செந்தமிழில் ஆக்கித் தந்தவர் கற்பனைக் களஞ்சியம் என்றும், சைவக் கண்மணிகளிரண்டினில் ஒவ்

றெனவும் போற்றப்படும் ஸ்ரீமத் துறைமங்கலம் சிவப் பிரகாச சுவாமிகளாவர். இவர்கள் இற்றைக்குச் சுமார் எண்ணூறு ஆண்டுகட்கு முன்னிருந்தவர் என்ப.

இவர்கள் இந் நூலில் கையாளும் கற்பனைகள் உவமைகள், சொற் செறிவுகள், பொருள் பொலிவுகள், ஞான சாத்திரக் கருத்துக்கள் முதலியவை செந்தமிழ் நலம் நுகரும் சிவநேயச் செல்வர்கட்குப் பெருவிருந்தாயமைந்து இம்மை மறுமை நலங்களையும் எளிதிற் கூட்டும்.

இந் நூல். செய்யுள் வடிவில் பெரும்பாலும் வெளி வந்துள்ளது. இதனை உரைநடையில் கொண்டு வருவது மிக்க நலம் பயக்கும். எனினும், இந் நூலைத் திருவிற்கோல நாதர் பெருவிழாவிற்குள் வெளியிட வேண்டுமென்று அவாக் கொண்டவர் குமாரச்சேரிவாசியான உயர் சைவத் திருவினர் வெ. சுப்பராய முதலியார் அவர்கள் ஆவர். புத்திரப் பேறின்றி அவர் திருவிற்கோல நாதர் வழிபாட்டினாலேயே நன்மகப் பேறு வாய்க்கப் .பெற்றவர். கண்கண்ட தெய்வமாக விளங்கும் திருவிற்கோலநாதர் திருவருள் எல்லோருக்கும் பயனளிக்க வேண்டுமென்ற விருப்பால் விரைவில் இந் நூலை வெளியிட எண்ணினர். பலவேறு பணிகளில் ஈடுபட்டுழலும் எளியேனுக்கு அறிவும் நேரமும் இடங் கொடாமையால், நூற்போக்கில் செய்யுட்களைப் பெரும்பாலும் தழுவிப் புராணத்தில் உள்ள சருக்கங்களின் சுருக்கமும், கடவுள் வாழ்த்தின் பொழிப்பும் ஒருவாறு எழுதப்பெற்றன.

இந்நூல் வெளிவர அநுமதியருளிய திருக்கயிலாய பரம்பரை, பொம்மைய பாளையம் பெரிய மடம், திருமயிலம் தேவஸ்தான பரம்பரை ஆதீன கர்த்தரும் தமிழ்ப் பெரும் புரவலருமான 18வது பட்டம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் திருவடிக்கு எளியேனது பணிவார்ந்த வணக்கங்களைச் செலுத்துகின்றேன்.

இந் நூலை வெளியிடுவதில் அயரா அன்புடன் சலியாது உழைத்த விரிவுரை வித்தகி திருமதி கஜலட்சுமி அம்மையாரவர்கட்கும் திருவாளர் வெ. சுப்பராய முதலியார் (குமாரச்சேரி) அவர்கட்கும் எளியேனை ஈர்த்துப் பணிகொண்ட திருவருளுக்கும் நன்றி மிக்க வணக்கங்கள் என்றும் உரியன. இதனை வெளியிட்டாரும் கற்றாரும் பிறரும் திருவிற்கோல நாதன் திருவருளால் நீண்ட ஆயுள், நிறைந்த செல்வம் முதலியவை பெற்று வாழ்கவென இறைவன் திருவடிகளை இறைஞ்சுகின்றேன்.

ஞானவேலகம்,
சென்னை-2

திருப்புகழ் சதுரர்
**சே. த. இராமலிங்கம் பிள்ளை, B.A., B.T.**



# பொருளடக்கம்

# திருவிற்கோலம்

## மூன்றாம் திருமுறை

பண் — காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

உருவினார் உமையொடும் ஒன்றி நின்றதோர்
திருவினான் வளாசடைத் திங்கள் கங்கையான்
வெருவி வானவர்தொழ வெகுண்டு நோக்கிய
செருவினான் உறைவிடந் திருவிற் கோலமே. 1

சிற்றிடை யுமை பொரு பங்கன் அங்கையில்
உற்றதோர் எரியினன் ஒரு சரத்தினால்
வெற்றிகொள் அவுணர்கள் புரங்கள் வெந்தறச்
செற்றவன் உறைவிடந் திருவிற்கோலமே. 2

ஐயன்நல் அதிசயன் அயன் விண்ணோர்தொழும்
மையணி கண்டனார் வண்ண வண்ணம் வான்
பையரவல் குலாள்பாக மாகவும்
செய்யவன் உறைவிடந் திருவிற்கோலமே. 3

விதைத்தவன் முனிவருக் கறமுன் காலனை
உதைத்தவன் உயிரிழந்துருண்டு வீழ்தரப்
புதைத்தவன் நெடுநகர்ப் புரங்கள் மூன்றையும்
சிதைத்தவன் உறைவிடந் திருவிற்கோலமே. 4

முந்தினான் மூவருள் முதல்வனாயினான்
கொந்துலா மலர்ப்பொழிற் கூகம் மேவினான்
அந்திவான் பிறையினான் அடியர்மேல்வினை
சிந்துவான் உறைவிடந் திருவிற் கோலமே. 5

தொகுத்தவன் அருமறை யங்கம் ஆகமம்
வகுத்தவன் வளர்பொழிற் கூகம்மேவினன்
மிகுத்தவன் மிகுத்தவர் புரங்கள் வெந்தறச்
செகுத்தவன் உறைவிடந் திருவிற் கோலமே. 6

விரித்தவன் அருமறை விரிசடை வெள்ளம்
தரித்தவன் தரியலர் புரங்கள் ஆசற
எரித்தவன் இலங்கையர் கோனிடர்படச்
சிரித்தவன் உறைவிடந் திருவிற்கோலமே. 7

திரிதருபுரமெரி செய்த சேவன்
வரியர வொடுமதி சடையில் வைத்தவன்
அரியொடு பிரமன் தாற்றலால்உருத்
தெரியலன் உறைவிடந் திருவிற்கோலமே. 8

சீர்மையில் சமணொடு சீவரக்கையர்
நீர்மையில் உரைகள் கொள்ளாத நேசர்க்குப்
பார்மலி பெருஞ் செல்வம் பரிந்து நல்கிடும்
சீர்மையினனிடந் திருவிற்கோலமே. 9

கோடல் வெண்பிறையனைக் கூகம்மேவிய
சேடனை செழுமதில் திருவிற்கோலத்தை
நாடவல்ல தமிழ் ஞானசம்பந்தன்
பாடல் வல்லார்களுக்கில்லை பாவமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி—திரிபுராந்தகர், தீண்டாத் திருமேனி
தேவி—திரிபுராந்தகி

---

உ

கணபதி துணை

ஸ்ரீ சிவஞான பாலைய தேசிகர் திருவடி வாழ்க!



திருச்சிற்றம்பலம்

# திருக்கூவப் புராணம்

## பாயிரம்

### காப்பு

குவளத் தந்தக் குளிர்விண் வளத்துறக்
கவளத் தந்தக் கரண மிருத்திய
பவளத் தந்தப் படிவ நிகர்த்தொளிர்
தவளத் தந்தத் தலைவனை வாழ்த்துவாம். 1

பவள வண்ண வடிவும் வெள்ளைக் கொம்பும் உடைய விநாயகப் பெருமான் தமது அன்பர்களை இந்த மண்ணுலக வளத்திலும் அந்த விண்ணுலக வளத்திலும் செலுத்துதற் கென்றே, அவர்கள் படைக்கும் கவளத்தினை அன்புடன் ஏற்றருளுவர் என்பதாம்.

கு - பூமி; கவளம் - யானைக்கிடும் ஒரு வாயளவு உணவு. அந்தக் கரணமிருத்தல் - விரும்பியேற்றல்.

நச்சி றுத்த நயனக் குவிமுலைப்
பொச்சி றுத்த நுசுப்பினர்ப் போற்றிவாய்
மிச்சி றுத்த விரகிலிக் காங்கொலோ
வச்சி றுத்த வடிக ளடிகளே. 2

அச்சிறுத்த விநாயகரது திருவடிகள், இளம்பெண்டிர் இதழுறல் விரும்பும் அறிவிலியாகிய அடியேனுக்கு அடையக்கிடைக்குமோ ? கிடைக்காது என்றபடி.

நச்சு - நஞ்சு; நயனம் - கண்; இறுத்தல் - தங்குதல்; வாய் மிச்சில் துத்த - வாயூறிய தம்பலத்தைப் புசித்த. அச்சிறுத்த விநாயகர் - கூவத்தல விநாயகர் பெயர்.

## திரிபுராந்தக நாதர்

நீர்கொண்ட சடையொடுநம் பெருங்காமத்
தழலவிப்ப நிற்கின் றானைக்
கூர்கொண்ட கனன்மழுமா னாண்மையும்பெண்
மையுமாய கூற்றிற் கேற்பச்
சீர்கொண்ட வலனிடங்கொ ளுயகனைப்
புகலியிறைச் செந்த மிழ்ப்பூந்
தார்கொண்ட திருவிற்கோ லப்பெருமான்
றனையிதயத் தவிசின் வைப்பாம். 1

நம்முடைய பெரிய காமத் தீயை அவிக்கச் சடையில் கங்கையொடு நிற்கின்றார். ஆணும் பெண்ணுமான கூறுகளைக் காட்டுதற்கேற்ப வலக்கரத்தில் கனல் மழுவும் இடக்கரத்தில் மானையும் ஏந்தியுளார். காழிவேந்தான சம்பந்தரது செந்தமிழ்த் தேவாரப் பாமாலைகொண்ட திருவிற்கோலப் பெருமானை இதயத்தவிசிலிருத்தி வணங்குவோம்.

கூறு - பாகம், புகலியிறை - காழிவேந்தாகிய சம்பந்தர். செந்தமிழ்த்தார்-தேவாரப் பாமாலை. தவிசு-உயர்ந்த அணை.

## திரிபுராந்தக நாயகி

பைத்தசிறு மணியரவந் தாழ்ந்துமதி
கவர்கின்ற பரிச தென்ன
மெய்த்தவிரும் புகழ்த்திருவிற் கோலநா
யகன்மகிழ விற்கோ லத்தை
யொத்தநறு நுதலிடைப்பொற் சுட்டியின்கீழ்
வெண்டிலக மொளிரத் தீட்டி
வைத்தருளு மெழிலுடைப்பை யரவல்கு
லம்மைபதம் வணக்கஞ் செய்வாம். 2

திருவிற்கோலப் பெருமான் மகிழுமாறு அழகிய வில்லை ஒத்த புருவங்களிடையிற் கட்டிய பொற் சுட்டியின் கீழ் வெண்திலகமிட்டிருப்பது, பாம்பு சந்திரனைக் கவர்வது போன்றுள்ளது. அந்தப் பொங்கிய அழகுடைய பையரவல்குலம்மையின் திருவடிகளை வணங்குவோமாக.

பைத்த - படத்தை உடைய ; பரிசு - தன்மை ; அவிரும்- விளங்கும் ; கோலம் - அழகு ; நுதல் - நெற்றி; பையரவல் குலம்மை - இஃது இத்தலத்துத் தேவி திருநாமம்.

## சபா நாதர்

சீர்கொண்ட மலைமாதின் றிருநுதல்கண்
டராப்பகைவெண் டிங்க ணீக்கி
யார்கொண்ட சடையரவ மல்குலைக்கண்
டடற்கையுழைப் பகைய யர்த்து
நேர்கொண்ட வுழைவிழிகண் டருகுறுமெய்ப்
புலிப்பகைநீத் திருப்ப நின்றே
யேர்கொண்ட தனித்தில்லை நடம்புரியெம்
பெருமானை யிறைஞ்சல் செய்வாம். 3

தேவியின் அழகிய நெற்றிப் பிறையின் துணையால் முடிப்பிறைப் பாம்பு பகையையும், அல்குலரவத் றுணையால் கையிலேந்திய மான்பகையையும், விழியான மான் துணையால் வியாக்கிரபாதர் என்ற புலியின் பகையையும் நீங்கச் செய்து அழகிய நடம்புரியும் பெருமானை வணங்குவோம்,

மலைமாது - மலையரசன் மகள் (சிவகாமி) ஆர் - ஆத்தி. மான் பாம்பையுண்ணும் என்பது மரபு.

### சிவகாமியம்மை

வன்னிகரம் வளர்வுறநற் பணிபயில
வருவார்க்குச் சுவர்க்க மீந்து
பன்னுநுதன் மதியடியார் பரிபுரங்கொண்
டெழிற்கனிமெல் லிதழி யாரப்
பொன்னணுகு மலரவைசேர்ந் திசைகொளரி
மறையோதி புரிந்து தாழத்
தன்னையிட்த் திருத்துபரம் பொருளாங்க
ருமையம்மை சரணிற் ருழ்வாம். 4

இப் பாடல் கூத்தபிரானுக்கும் சிவகாமிக்கும் சிலேடை.

கூத்தப்பிரான் :—

கையில் அனல் ஏந்தித் தொண்டுபுரிய வருவார்க்குச் சுவர்க்கமீந்து, போற்றும் ஞான நெஞ்சினரான தொண்டர் தாங்கிய உடலையே கோயிலாகக்கொண்டு அழகொழுகும் கொன்றைசூடி, திருமகள் சார்ந்துள்ள தாமரைத் தொகுதி யைத் தன் உறுப்பாகக் கொண்டு புகழ்பெற்ற திருமாலும், வேத மோதும் வேதாவும் விரும்பி வணங்கும்படி நிற்கும் பரம்பொருள்.

திருக்கரத்தில், கிளியிருக்க அழகிய வேலைப்பாடு அமைந்த வாரணிந்த கொங்கையும், வியக்கும் மதிபோன்ற

நெற்றியும், திருவடிச் சிலம்பும் கொண்டு மெல்லியயில் கொவ்வைக்கனிபோலும் இதழையுடையவளாய், விசால மான பொன்னம்பலத்தில் கூடிப் பாடும் வண்டுகள் மறைந் துள்ள கூந்தல் சுருண்டு கீழே விழ நிற்கும் தன்னை இடப் பக்கத்தில் இருந்து கூத்தபிரானுக்கு நிகரான உமையம்மை யாரின் திருவடிகளை வணங்குவோம்.

வன்னி - அனல், கிளி; பணி - தொண்டு, சித்திர வேலைப்பாடு; பயிலவருவார் - செய்யவருவார்கள், அமைய நிற்கும் வார் (கச்சு); சுவர்க்கம் - பொன்னுலகம்; தனம், பன்னுதல் - துதித்தல், வியத்தல்; நுதல் - நெற்றி, நுதலு தல்; பரிபுரம் – சிலம்பு, - (பரி+புரம் - தாங்கு முடல்), இதழி, கொன்றை - இதழ்களையுடையவாய்; பொன் - இலக்குமி- மலர், பொன். அவை - விசாலமான பொன்னம்பலம் என்க; அரி - மால், வண்டு; மறை ஓதி - வேதம் ஓதி - மறைந்த கூந்தல்.

## விநாயகக் கடவுள்

கற்றைநெடுஞ் சடாமவுலிப் பிறையுமொரு
தன்கோடுங் கரத்திற் சேர்த்தி
மற்றைநிறை மதியாக்கி மறுவிகந்து
வல்லபைதன் வடிவு பூத்த
நெற்றிநிகர்த் தமையன்றி யழகொழுகு
திருமுகத்தை நிகர்ப்ப நேயம்
பெற்றமழ களிற்றைமனச் சேவகத்தி
னிறுவியிடர்ப் பிறவி தீர்ப்பாம். 5

பெரிய சடைக்கற்றையில் உள்ள பிறைச் சந்திரனைத் தனது வளைந்த கொம்போடு இணைத்து முழு மதியாக்கித் தன் (மனைவியான) வல்லபையின் நெற்றிக்குமட்டும் ஒரு பிறை ஒப்பாயிருந்த தன்றி, அழகொழுகும் திருமுகத்துக்கும்

(முழுமதி)யாகி ஒப்பாகும்படி விரும்பிச் செய்த இளைய வேழமுகனை மனத்தகத்திருத்திப் பிறவித துயரைத் தீர்ப்போம்.

கோடு - கொம்பு; மறுவிகந்து - குற்றம் நீங்கி; மழ களிறு - இளமையான யானை, "மழவும் குழவும் இளமைப் பொருள" என்பது சூத்திரமாகலின்.

## சுப்பிரமணியக் கடவுள்

நான்குமுகன் றொழுமைந்து முகனீன்ற
வாறுமுக நாதன் றன்னை
வானுலவு மொருகடவுள் யானையின்பா
கனைப்புனத்து வடிவு கூர்ந்த
மான்குறுக வேங்கையுரு வெடுத்தானை
யசுரர்குல மாய்த்துப் பேய்கட்
கூன்குருதி யொடுமளவிப் புதுவிருந்திட்
டானைநம துளத்துள் வைப்பாம். 6

நான்கு முகனுன பிரமன் தொழும் ஐந்துமுக சிவனர் தந்தருளிய ஆறுமுக நாதனை, விண்(ணவர்) உலகத்தில் விளங்கும் ஒரு தெய்வயானை (இடப்பாகங் கொண்டவனை. யின் பாகனை, தினைப்புனத்து அழகிய (வள்ளி) மான் வரவும் (அதுகண்டு) வேங்கை (மரத்தின்) உருவமானவனை அசுரர் குலத்தை அழித்துப் பேய்களுக்கு (அசுரருடைய) மாமிசம், இரத்தத்தொடுங் கலந்து புதுவிருந்து அளித்த முருகப்பிரானை நம் உள்ளத்துள் வைத்துத் தியானிப்போம்.

ஐராவதம் என்ற தெய்வயானையால் வளர்க்கப்பட்ட வளாதலின் தெய்வ யானை எனப் பெற்றுளாதலின் 'கடவுள் யானை' என்றார். யானை என்றதற்கேற்பப் பாகனை என்றும், மான் என்றதற்கேற்ப வேங்கை யுரு எடுத்தானை என்றும் முருகனை விளிக்கும் நயம் எண்ணி மகிழ்தற்குரியது.

பாகன்- பாகமாக உடையவன, செலுத்துபவன். வேங்கை - வேங்கை மரம், பெரும்புலி.

### திருநந்திதேவர்—வேறு

பாக்கு லங்கள் பழிச்சுமை நெஞ்சமும்
வாக்கு மங்கை வடிவு நிகர்த்தொளி
தேக்கும் வெள்ளிச் சிலம்புட னெம்மையுங்
காக்கு நந்தி கழறெழு தேத்துவாம். 7

பாடல் தொகைகள் போற்றுகின்ற உமாதேவியாரது நெஞ்சமும், சொல்லின் செல்வி (சரசுவதி)யின் வெள்ளிய திருமேனியும் போன்ற ஒளி நிறைந்துள்ள வெள்ளி (கயிலை) மலையையும், எம்மையும் காவல் புரிந்தருளும் நந்தியெம் பெருமான் திருவடிகளை வாழ்த்துவோம்.

பழிச்சுதல் - தோத்தரித்தல்; வாக்கு மங்கை - சரசுவதி.

### காரைக்காலம்மையார்

கிடந்து கண்களிற் கேட்கு மவன்புக
லடைந்த கைகொ டுயிர்ப்பவ னத்தன்வாழ்
வடந்த யங்கு வனத்திற் றலையினு
னடந்த வம்மை பதமலர் நண்ணுவாம். 8

கண்ணே செவியாக உடைய கார்க்கோடகன் தஞ்சம புகுந்ததும், விநாயகப் பெருமானின் (தந்தையான)சிவனுரும் உள்ள திருவாலங்காட்டில் தலையினுல் நடந்து சென்ற (பேயுருவினரான) காரைக்காலம்மையாரது திருவடிமலரைச் சேர்வோம்.

கண்களிற் கேட்குமவன் - கட்செவியான பாம்பு (இங்கு திருவாலங்காட்டைப் புகலிடமாயடைந்த கார்க்கோடகன்). கைகொடு உயிர்ப்பவன் - துதிக்கையே மூச்சுவிடும் மூக்காகக் கொண்ட யானை (விநாயகர்). வடவனம்-ஆலங்காடு.

### திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார்

அங்க மான தணங்கினு மேம்படு
மங்கை யாகப் படைத்து மகளெனப்
பங்க யாதனன் வெள்குறப் பார்த்தருள்
பொங்கு ஞானசம் பந்தனைப் போற்றுவாம். 9

எலும்பைத் தேவமாதினும மேம்பட்ட அழகிய மங்கை யாக(ப் பூம்பாவையை) ஆக்கி, அவளைத் தன் மகளென்றும் அன்போடு, பிரமனும் வெட்கப்படும்படிப் பார்த்தருளிய திருஞான சம்பந்த சுவாமிகளைப் போற்றுவோம்.

அங்கம் - எலும்பு; அணங்கு - தெய்வ மகள், பங்க யாதனன் - தாமரையில் வீற்றிருக்கும் பிரமதேவன். வெள்குற - வெட்கப்பட. பிரமதேவன் தானே படைத்த திலோத்தமையைக் கண்டு காமங் கொண்டான். ஆனால், எலும்பைப் பெண்ணாக்கிய சம்பந்தர் தான் படைத்தவளை மகளாகவே நோக்கினமை கண்டு பிரமனும் வெட்கப்பட்டான் என்க. (பெரிய புராணம்)

### திருநாவுக்கரசு நாயனார்

மருக்கு லாவு மறைவனத் தொன்றிய
திருக்க பாடந் திறந்தசொல் வேந்தனை
யருட்கு லாவு மறிவினை மூடிய
விருட்க பாடந் திறக்கவு மேத்துவாம். 10

(ஞான) வாசமிக்க திருமறைக் காட்டில் (வேதம் பூசித்து மூடிக்கிடந்த) திருக் கோயில் கதவுகளைப் பாடல்களால் சிறப்பித்ததருளிய திருநாவுக்கரசர் பெருமானை நம் அருள் நிறைந்த அறிவினை மூடியுள்ள அஞ்ஞானக் கதவுகளைச் செய்யும்படிப் போற்றுவோம்.

மறைவனம் - திருமறைக்காடு (வேதாரண்யம்) கபாடம் - கதவு. இருள் - அஞ்ஞானம்.

## சுந்தரமூர்த்தி நாயனார்

கன்று காமங் கழன்றிலர் தம்முரு
வென்று மோர்வரி தென்றிருப் போன்றனை
யன்று தூதுவ னாக வரிவைபாற்
சென்று வாவென்ற தீரனை வாழ்த்துவாம். 11

வருத்துகின்ற காமநோய் நீங்கப் பெருந்தவர் காண்பதற் குரிய சிவபிரானை முன்பு (ஊடல் கொண்டிருந்த) பரவை யாரிடம் தூதுவனாகச் சென்றுவா என்றனுப்பிய தீரனாகிய சுந்தரரை வாழத்துவோம்.

கன்று - வருத்துகின்ற திருவாரூரில் தானிருக்கத் திருவொற்றியூரில் சென்று சங்கிலியாரை மனைவிவாகக் கொண்டதால் பிணங்கிய பரவையாரூடல் நீக்கச் சிவனு ரைத் தூதாகச் சுந்தரர் அனுப்பிய வரலாறு குறித்தது.

## மாணிக்கவாசக சுவாமிகள்

இன்ப மாணிக்க வாசக னென்னுமோர்
மன்பெ ரும்பெய ரியாரும் வழங்குறத்
தன்பெ யர்க்கொடை யோடுத ரித்தபே
ரன்பன் றன்னை யகத்து ளிருத்துவாம். 12

இனிய மாணிக்கவாசகனென்னும் ஒப்பற்ற பெருஞ் சிறப்பமைந்த திருநாமத்தை (தாம் மட்டுமின்றி) வந்திக்கும் அன்பர்களுக்கும் வழங்கிய பேரன்பரைத் தியானிப்போம்.

மாணிக்கவாசகர் என்ற திருநாமம் அவர்க்கு மட்டு மல்லாமல் அவரைத் தியானிப்பவர்க்கும் வழங்கும் தகுதி யுடையராக்கும் சுவாமிகளது கொடைக் குணம் குறித்தபடி.

## அவையடக்கம்—வேறு

மூதறி வாளரு மறிவின் மூகரு
மோதுறு நடுநிலை யோருஞ் சொற்பொருட்
டீதுரைப் பதற்கொரு செயலுங் கண்டிலேன்
ஆதலி னென்கவிக் கழிவின் றுகுமால். 13

பேரறிஞரும், அறிவிலாரும், நடுநிலை நிற்பாரும் எளியேன் கூறும் சொல்லிலும் பொருளிலும் குறைகூறத் தக்கச் செயலை (நான்) அவர்களிடம் காணவில்லை; ஆதலால் என் பாடல்கட்கு அழிவு வராது.

அறிவின் மூகர் - அறிவிலிகள்.

பெரியோர்கள் பிறர் குறை கூறுர். அறிவிலிகள் தம்மைப்போல என்னை எண்ணிக் குறை கூறுர். நடுநிலையுள்ளோர் காணத்தக்க குறையின்மையால், குற்றம் காணமாட்டார். ஆதலால் என் கவிகள் அழியா என்க.

## நூல் வந்த வழி—வேறு

காவி நேர்விழி மங்கைபங் கினனிசைக் காந்த
மேவு மாசனற் குமாரசங் கீதையில் விரித்த
தாவில் காளிகா காண்டமென் கடற்புகழ் தன்னிற்
கூவ நீர்மையுட் கொண்டியான் கூறுவன் றமிழால்.

மங்கை பங்கரான மாதேவர் அருளிச் செய்த வடமொழிக் கந்தபுராண சனற் குமார சங்கிதையில் காளிகா காண்டமென்று புகழ்மிக்க கடலில் உள்ள திருக்கூவைச் சிறப்பை மனதிற் கொண்டு தமிழில் இப் புராணமாகச் செய்கிறேன்.

பாயிரம் முற்றிற்று.

ஆகச் செய்யுள்—16

---

# நைமிசாரணியச் சருக்கம்

பூங்கொடிகளும் செடிகளும் மரங்களும் நிறைந்தது நைமிசவனம். அங்குப் பரமனை எண்ணி அருந்தவம் பயிலும் முனிவர் பலர் இருந்தனர்.

ஒருநாள், அங்குக் காசிபர், வசிட்டர், கவுதமர், பரத்துவாசர், கண்ணுவர், சவுனகர், புலத்தியர், சனகர், நாரதர் வான்மீகர். சாதாதபர் முதலிய முனிவர்கள் கூடிப் பிறவிக் கடலை நீந்திச் சிவகதி செல்லும் நெறியை ஆராய்ந்தனர். அப்போது ஒவ்வொருவரும் தவம், தருமம், தானம், வாய்மை, வேள்வி, மக்கட்பேறு, துறவு நெறி என்றவற்றின் சிறப்பினை எடுத்துக் கூறி அவற்றால் சிவகதி சேரலாம் என வாதித்தனர்.

அப்போது, நீறு கண்டிகை புனைந்து, தண்டு கமண்டலம் தாங்கித் தவமே உருவான சூதமா முனிவர் அங்கு எழுந்தருளினார். நைமிச முனிவர்கள் அவரை வரவேற்று உபசரித்தனர். பின் அவரை நோக்கி, "வியாத முனிவரை ஒத்த சூத முனிவரே! பாசவினை யகற்றிப் பரகதி யடையும் நெறியினை அருளுக" என வேண்டினர். சூதரும் மகிழ்ந்து "நீங்கள் அழியத்தக்க வேறெதனையும் விரும்பாமல் அழியா முத்தி நெறியது கேட்க முயன்றீர். ஆதலால், கண்ணுதற் கடவுளின் பேரருளும் உம்மிடம் பதிந்துள்ளது. அத்தகைய உம்மைச் சேர்ந்து யானும் உய்ந்தேன். சிறந்த வித்தைகள் பதினெட்டு என்ப. அவை நான் மறைகள், ஆறு அங்கங்கள், மீமாஞ்சை, அறநூல், காந்தருவ நூல், தனுர் வேதம், பரதம், வாகடம், புராணம், நியாயம் என்பனவாம். அவற்றில்

பதினெண் புராணங்கள் சிறந்தவை. அவையாவன : சிவ புராணங்கள் – 10, விஷ்ணு புராணம்–4, பிரம புராணம்-2, அக்கினி புராணம் - 1, சூரிய புராணம் - 1.

அவற்றுள், சிவபுராணங்கள் பத்தும் உயர்ந்தவை. அவற்றில் காந்த புராணம் சிறந்தது. அதில் சனற் குமார சங்கிதையும் அதில் காளிகா காண்டமும் தனிச் சிறப்புடையன. அக் காளிகா காண்டத்தில் எம்மான் வேத முனி முன்னரே முத்தியுபாயத்தை விளம்பியுள்ளார். அவர் மொழிந்தவாறே உமக்கு யானும் கூறுகிறேன்.

சிவஞானத்தாலன்றி முத்தி நெறி கூடாது. சிவதல தரிசனம்தான், சிவஞானத்தைத் தரவல்லது. ஆகவே, நீங்களும் சிவதலங்களைச் சென்று வழிபடல் வேண்டும்'' என்றார். உடனே நைமிச முனிவர்கள், ''நற்றவ முனிவரே! இறைவன் உமையொரு கூறனாய்ப் பரிவாரங்களுடன் இருப் பதும், இந்திரன் முதலிய இமையவரும் முனிவர்களும் வழி பட்டதும், எல்லாத் தலங்களை வழிபட்ட பலனெல்லாம் ஒருங்கு தரக்கூடியதும், அழியாத போகமும் முத்தியும் ஈவ தாயும், புண்ணிய தீர்த்தங்கள் பொருந்தி, அதனை நினைத் தாலும், பேரைச் சொன்னாலும், வினவினாலும் அயனரி பதங் களை அளிக்கவும் வல்ல தலமொன்றை உரைத்தருளு வீராக'' என வேண்டினர்.

இதனைக் கேட்ட சூதமா முனிவர் திருவிற் கோலப் பெம்மான் கூவத்தலத்தை தியானித்தார். அவர்தம் கண் ணில் ஆனந்த அருவி பாய்ந்தது ; மெய்ம்மயிர் பொடித்தது. அவர், ''முனிவர்களே! நீங்கள் உரைத்த சிறப்புக்களெல் லாம் ஒருங்கே அமைந்த தலம் ஒன்று உள்ளது. அதன் சிறப்பு ஆயிரம் நாப்படைத்த ஆதிசேடன் எண்ணில் யுகங் கள் இயம்பினாலும் முடிவு பெறாது. அடியேன் சிறிது அறிந்த மட்டில் கூறுகின்றேன்'' என்றார்.

சீத வம்புலா மலர்க்கொடி நானிலந் திகழும்
பாத வம்புத லாதிய வளமெலாம் பயின்ற
தாத வம்பனி மழையொலிக் குடைந்திடா தமர்ந்து
மாத வம்புரி வோர்க்கிடம் **நைமிச வனமே.** 1

பொன்னு லாமலர்க் கற்பகா டவிநிழற் போக
மின்ன லாமென வெறுத்திந்த வனத்திடை யின்ப
மன்ன யான்புக வருளென வீசனை மகவா
னுன்னி வேண்டுவ னெனிலதன் சிறப்பெவ ருரைப்போர்.

வந்த தேயுண வாகிமற் றூணுண மறுத்துச்
சந்த யோகிகள் போன்றுபோ கிகளுறத் தமது
புந்தி போம்விரி வொடுக்கியே பொறிப்பண மடக்கு
முந்து போகிகள் போன்றியோ கிகளுறு முதிர்கான். 3

எலியும் பாம்பு மங்கதமு மஞ்ஞையு மிளமயிலு
கலியுங் கோம்பியு மொருத்தலு மடங்கலு நவியும்
புலியுந் தாம்பெறு பகையொரீஇப் புணருமவ் வனத்தின்
மெலியும் **பாவமு மறமுமே பகை**யன்றி விரவா. 4

ஆதி மாலயன் மனத்தெழு மகந்தையை யடக்க
மீது லாமழன் மயநெடுந் தம்பமிக் குயர்ந்த
சோதி மாமர முகிலதிற் சூழ்தரு தூமந்
தீதி லாவகி மணிசித றியபொறிச் சிவனும். 5

கரண நான்கையுங் கடந்தமுக் கட்பெருங் கடவுள்
சரண வாரிசம் பற்றென வடைந்ததா பதர்க்குத்
தருண வேள்வியிற் பகைஞர்சா தித்திடப் படாத
வரண மாயது நலந்தரு நைமிசா ரணியம். 6

பேர சோகமே யெனக்கொடு பிண்டிவின் மதவேள்
வீரவாளியாய் மலர்ந்துதுன் பங்களே விளேத்த
கோர பாவமற் றப்பெயர் மெய்பெறக் குளிர்ந்து
வார மாதவர் சோகநீத் திடமலர் வழங்கும். 7

அருந்த வம்பயின் றைம்புலக் குறும்பினே யடர்த்துத்
திருந்து நன்முனி வரர்வனத் தொருதனித் திகிரி
மரந்த யங்குவெண் குடைநிகர் மதிதனு தும்பர்
பொருந்து கின்றுழிக் காம்பெனும் பெயரினேப்புதுக்கும். 8

வேறு

நெட்டிலே கொண்டு நிமிர்ந்தெழு தாழை
கிட்டியி ணேந்துறு கின்றன தோகைப்
புட்டனே யொக்கு மிசைக்கதிர்ப் போது
நட்டிவர் செவ்வயி னம்பியை யொக்கும். 9

எரிபுரை கின்ற விளந்தளிர் மாவி
னருகுற நீனிற மார்தரு புன்னே
மருவுதல் செஞ்சடை வள்ளன் மருங்கு
தருமம் வளர்ப்பவ டங்குத லொக்கும். 10

ஒன்றினெ டொன்றிழை யொண்கழை தம்மில்
வன்றழல் வந்து வளாந்தெழ மீது
சென்றமர் மந்தி திடுக்கிட விண்ணின்
மன்ற னெடுந்தரு வின்மிசை வாவும்.

பாசிலே கொண்டுயர் பாதவ மென்பூ
மாசறு மையர் மருங்கி னுகுத்தல்
கேசவ னன்பு கிடைத்தவர் மீது
வீசுறு மொய்ம்மலர் மாரியின் மேவும்.

## வேறு

இத்தகை நலம்பெற் றுள்ள
வெழிறரு வனத்தின் மேய
மெய்த்தவர் புலன்க ளைந்தும்
விரவுறு மனமு மீட்டு
முத்தலை யெஃக மேந்து
முதற்பெருங் கடவு டன்பா
லுய்த்தவ ருலக வாழ்வை
யொருபொரு ளாகக் கொள்ளார். 13

உலகினர் செல்வ நந்த
லுரைப்பொரு ளிரண்டுங் கோட
லிலகுவிண் மதியங் காட்ட
வென்றுமோர் தகைத்தாய்ச் சேறல்
விலகுதஞ் செல்வ மெங்கள்
விழுப்பொரு ளாய வண்ண
லலகில்செஞ் சோதிப் பின்ன
லணிமதி யுணர்த்த வாழ்வார். 14

அன்புகொண் டருஞ்சிவத்தோ
டயர்ந்தனு பவித்தி ருக்கு
மின்பமு முத்தி யன்றென்
றிகந்துறந் துடைய மேலோர்
துன்பமிக் கெய்தி மின்னிற்
றுலைந்துபோஞ் சிற்றின் பத்திற்
றன்பரி வறத்து றத்தல்
சாற்றவேண் டுவது முண்டோ! 15

சேயரி நெடுங்கட் செவ்வாய்ச்
சிறுநுதற் கரிய கூந்தல்
வேயமர் வலயப் பொற்றோள்
வெற்புறழ் குவவுக் கொங்கை
யாயிழை மகளிர் நேயத்
தணையினு மவரை யீன்ற
தாயெனக் கருது நீரார்
தபனிய மோட்டிற் காண்பார். 16

பற்றிக லிலாத ஞானப்
பண்பினர் நட்டார்ப் பேண
மற்றவர்ச் செறுக்க வுன்னில்
வல்லமெய்த் தவத்தின் மேலோர்
முற்றுறு மின்ப துன்ப
முன்புள தொடர்பு டற்கென்
றற்றமின் மகிழ்ச்சி வாட்ட
மகன்றநற் றுணிவின் மிக்கார். 17

கண்டிகைக் கலனு நீற்றுக
களபமும் பொலிந்த யாக்கை
மண்டிதா் சடிலக கற்றை
மவுலியர் நிறைந்த தெண்ணீர்க்
குண்டிகை தண்டு தாங்கு
கையினர் குன்ற வில்லி
புண்டரி கத்தாட் கன்பு
பொருந்திய மனத்தர் மாதோ. 18

கண்புன றுளிப்ப நெஞ்சங்
கரைந்துக மயிர்பொ டிப்பத்
தண்புன றரித்த வேணித்
தம்பிரான் பூசை செய்வார்
பண்பயின் மறைக ளுனகின்
பயத்தவா மஞ்செ ழுத்து
நண்புடன் பகரு கின்ற
நாவர்முக் குற்றந் தீர்ந்தார். 19

வேதன்மா றமையு மன்னூர்
வியன்பதந் தமையுங் கொள்ளா
ராதிநா யகனெம் மீச
னருளினு லவர்தஞ் செய்கை
யாதுமோர் திரணந் தன்னை
யியற்றிட னிறுவ வல்லா
ரோதுறு துதிநிந் தைக்க
ணுவகையும் வெறுப்பு மில்லார். 20

ஆதர வின்சொற் றூய்மை
யருணெறி யொழுக்க மெய்ம்மை
மேதக வுடையர் தீமை
விரகம்பொய் யாசை கோபங்
காதர விலர்வே தாந்தக்
கருத்துணர் பெரியர் செம்பொற்
பூதர வில்லி தானம்
புகுந்திறைஞ் சுதற்கு நேயர். 21

**வேறு**

இப்பெரு முனிவர் தம்முண்முன் பொருநா
ளிருந்தவக் காசிபன் வசிட்டன்
துப்புறழ் சடிலக் கௌதமன் பாரத்
துவசன்கண் ணுவன்சவு னகனே
மெய்ப்புலத் தியன்ற சனகனு ரதன்வான்
மீகன்சா தாதப னுதி
யொப்பில ரநேகர் குழுமியவ் வனத்தி
னொருபுடை வந்துவீற் றிருந்தார். 22

இருந்தவர் சனன சாகரங் கடத்தற்
கிணையறும் பரசிவ கதியிற்
பொருந்தினர்க் கன்றி யரிதெனத் தமது
புந்திகொண் டனைவரு மதுதான்
வருந்திற முயல்வ தெந்நெறி யென்னு
மற்றதை யாய்ந்தன ருசாவ
வருந்ததி கொழுநன் முதுக்குறை வதனு
லடிகள்கேண் மின்களென் றறைவான். 3

**வேறு**

எவ்வகைப் பொருள்களு மீய வல்லது
செவ்விய தவமதே தெரியின் வேறிலை.
இவ்வுல கினிலஃ தியற்று கின்றதே
யுவ்வுட லெடுத்தபே ருறுதி யென்பவே. 24

தவத்தினி லமர்புரி சமனை வெல்லலாந்
தவத்தினி லெழுகட றமையு முண்ணலாந்
தவத்தினில் வடவரை கலைந்து தாங்கலாந்
தவத்தினி லனலமுந் தரிக்க லாகுமே. 25

நன்றிகொ டவத்திலேம் பூத நல்கவுந்
துன்றிய வுயிர்த்தொகை தோற்று விப்பவு
மன்றிய வுலகுயி ரடவு நண்ணினர்க்
கொன்றருள் புரியவு மொருங்கி னெய்துமால். 26

அண்டமும் பொருள்களு மடங்கு பேருருக்
கொண்டிட வணுவெனக் குறுக வாழ்புனல்
விண்டலன் மிசைச்செல விளிவி லாதுற
வொண்டவ மன்றியா துதவ வல்லதே ! 27

பொன்றணி மார்பகப் புனித ஞதியை
நின்றுழி தவத்தினு னினைந்த ழைத்திட
லின்றியு மவர்க்கரி தாய வெள்ளியங்
குன்றிறை சரணமுங் குறுக லாகுமால். 28

ஆதலி னுப்புயர் வகன்று தன்னேநோ்
மாதவ மேசெயும் வழக்க மாமென
வோதினன் வசிட்டனங் குணர்த்த நின்றசா
தாதப னினையன சாற்றன் மேயினுன். 29

## வேறு

தரும மேயிணை யில்பொரு டரையிடைத் தகைசா
லொருமை யின்பினே யுதவிவிண் ணுலகினு முடன்போ
யருமை யின்பமுய்த் தந்தகற் செறுமெனி லறமே
யிருமை யுந்துணை யாகுவ தன்றிமற் றில்லே. 30

புகழுங் கல்வியுஞ் செல்வமும் வீரமும் பொலிவு
மகிழுங் கோலமு மொழுக்கமும் விழுப்பமும் வழங்கி
யிகழும் பாவமும் பழியுநீத் தரனுமை யிடத்திற்
றிகழும் பூதனு யவரருள் செய்யவுஞ் செய்யும். 31

ஏற்றின் மேல்வரு மெந்தைதன் னெழிலுரு வறமா
மாற்றி லன்னதே யாற்றுக வென்றவ னறைய
நீற்றின் மேனியிற் கண்டிகை மாலைக ணிரம்ப
வீற்றி ருந்திடுங் **கவுதம** னினையன விளம்பும். 32



மனைக டோறுமுற் றிரந்திடு கபாலியுண் மகிழ
வனக மால்விடை யூர்ந்துவந் தெளிதினி லருளக்
கனைக ருங்கட லுலகினிற் செய்வது கருதின்
வினைக டீர்ந்திடு **தானமே யன்றிவே றுளதோ.** 33

அரிய வாகிய கலைகள்யா வையும்பயி லறிஞர்
பெரிய மாதவ ருயர்தரு குலத்திடைப் பிறந்தோ
ருரிய தானியைப் புகழ்ந்தன ருறுவரவ் வளவோ
தரிய லார்களு முறவுசெய் தவன்புடை சார்வார். 34



சூழும் வான்முகி லெனப்பயன் றூக்குரு தளிப்போன்
பாழி மாபுகழ்ப் படலைபோய்ப் பரந்திடு முலகீ
ரேழு மாமயன் மான்முத லிமையவர் தமிற்றும்
வாழு மேம்பத மனையென வாக்குற மலைவார். 35

இகத்தி னன்கொடைப் பெருமையையறிந்து ளோரில்லென்
றகத்தி னுமமு முரைசெயா ரவரரி தாகத்
தொகுத்த வோர்பொரு ணல்குவ ரென்பதென் றுணிந்து
மிகுத்த வாவியுங் கொடுப்பரால் வேண்டுமுன் விரும்பி.



புவியி லின்கொடை யில்லவன் றேற்றத்தின் பொலிவு
கவிர்ம லர்ந்திடற் கொப்பெனக் கழறுவ ரதனு
லவிர்பெ ரும்புகழ்க் **கொடையதே யதிக**மென் றறைந்தான்
சவித ருஞ்சடைக் கௌதமன் **காசிபன்** சாற்றும். 37

பவமந் தீர்ந்திடு **வாய்மை**யொன் றேயுறி னுலகிற்
றவமுந் தானமு மொருங்குறச் செய்தலிற் றலையாய்ப்
பவம கன்றுநான் மறைமுடி வாகிய பரம
சிவன ரும்பதம் பெறும்படி யுயர்த்திடுந் தெரியின். 38

இரவி வாண்மதி யுதித்தொடுங் குதலொலி யியங்கல்
பரவை தானிக வாதுறல் பயோதரம் பொழிதல்
கருவி னூடுவந் தமர்தல்பின் ஞேற்றுதல் காயத்
தருவ மாமுயிர் நிற்குதல் **வாய்மையி** னன்றோ. 39

மன்ன ஞகியிவ் வுலகெலாம் புரந்திட வரினு
மின்ன ருனுழந் துடலம்விட் டிறந்திட வரினும்
பன்னும் வாய்மையிற் பிறழ்ந்திடா தொழிகவிப் பவம்போய்
மின்னு லாஞ்சடை யெம்பிரான் பதம்புக வேண்டின். 40

என்று காசிப முனிவரன் வாய்மையி னியல்பை
யொன்ற வேவிரித் தருந்தவர் தங்களோ டுரைப்ப
வன்று சார்ந்துறும் **பரத்துவ ச**ப்பெய ரறிஞன்
குன்று போலுயர் குணத்தினீர் கேண்மெனக் கூறும். 41

விண்ணு ளோர்தமக் கவியுணு மகிழ்தர விளைத்து
மண்ணி னுருயிர்க் கெழிலிகொண் டுணவினை வழங்கி
யெண்ணி லெவ்வுல கிற்குமின் பீந்துநற் றுனம்
புண்ணி யந்தவம் வளர்த்தலான் யாகமே பொருளாம். 42

## வேறு

இரதி கொண்கனெழிலுரு வட்டவன்
பெரிது முண்மகிழ் பெற்றிடச் செய்வது
சுருதி சொன்மக மென்றவன் சொற்றிடக்
கருதி மற்றென்று கண்ணுவன் கூறுவான். 43

இல்லொ ழுக்க மியைந்து பிதிர்க்கட
ஞெல்லும் வண்ண முஞற்றி மரபுளோர்
செல்லும் வெந்நிர யத்துயர் சிந்துவான்
வல்ல மக்கட் பெறற்கிணை மற்றிலை. 44

மெத்து கின்ற விழுமிய சீ த்தியோ
டெய்த்த லின்றி யிருமையின் புந்தரும்
புத்தி ரற்பெறும் புண்ணிய வாழ்க்கைதா
னத்த வத்தினு மாற்றச் சிறந்ததே. 45

என்று நன்மகப் பேற்றை யினிதெனக்
கன்று நற்றவக் கண்ணுவன் சொற்றிடக்
கொன்றை யஞ்சடைக் கூத்தனைப் போற்றியே
ரொன்று மெய்த்துரு வாச னுரைசெய்வான். 46

உறவு தந்தைதா யொண்டொடி மாதரார்
சிறுவர் வண்புவி செல்வம் பெரும்புகழ்
பிறவி னும்படு மாசை பிரிந்தமெய்த்
துறவி னல்லது துன்ப மகலுமோ ? 47

வேறு

ஈட்டுறுங் காலையி னேமஞ் செய்வுழிக்
கூட்டலிற் றுயரினைக் குறுகுஞ் சுற்றமும்
வாட்டிடும் பகைஞராம் வகைசெய் வித்தலின்
வேட்டிடும் வெறுக்கையை வெறுக்கை யின்பமே. 48

கொடுங்கனன் மதுவிடங் குறுகி னுண்டிடிற்
சுடுங்கருத் தழித்திடுந் தொலைவு செய்யுமாற்
கடுந்துயர்க் காமமோ கருதி னன்னசெய்
திடும்பினுந் தொடர்ந்துவெந் நிரயத் திட்டிடும். 49

ஆதலிற் பெண்மயக் காதி நீங்கியே
தீதறத் துறந்திடு மரிய செய்கையே
மேதகக் கதியினில் விடுமென் றோதினன்
மாதவத் துயர்துரு வாச மாமுனி. 50

இனையன வீற்றுவீற் றியம்பி மாதவர்
வினையறு நன்னெறி தெரியும் வேலையி
னனையவர் தவமுரு வாகி நண்ணல்போற்
றுனியிற வாயிடைச் சூதன் றோன்றினன். 51

கண்டிகை வடமுரங் கவின நீற்றொளிர்
புண்டர நுதன்மிசைப் பொலிய வங்கையிற்
றண்டொடு கமண்டலந் தாங்கி வந்திட
வண்டவர் சூதனல் வரவு கண்டனா. 52

பொருக்கென வெதிர்கொடு போற்றிக் கொண்டுசென்
றுருக்கிள ராதன முதவி யையனீ
யிருக்கென வாயிடை யிருத்தி மாதவ
ரருக்கிய முதலன வளித்துக் கூறுவார். 53

துய்யமெய்க் கதிபெறுஞ் சூழ்ச்சி யாய்ந்தியா
மையமுற் றிருந்துழி யடிசில் வேட்கையான்
மையலுற் றழுங்குவோர் மாட்டு மூரல்கொண்
டொய்யெனத் தரவரு பவரி னுற்றனே. 54

தொல்லையம் புராணநூற் றொகுதி யாவையும்
வல்லநன் முனிவநின் வரவி னுய்ந்தன
நல்லவர் தாம்பெறு நலத்த கல்வியுஞ்
செல்வமும் யாவருஞ் சிறப்பிற் பெற்றவாம். 55

வாதரா யணமுனி வரனை யொத்தமெய்ப்
போதநா யகவருட் பொழியுஞ் செம்முகச்
சூதமா தவவினைத் தொடர்பு போய்ச்சிவன்
பாததா மரைபெறும் பரிசு கூறென்றார். 56

### வேறு

என்றலு முவகை நெஞ்சத்
தெழுந்திடச் சூத னீர்வே
றென்றொரு பொருளு முன்னு
துலப்புறு முத்தி யெய்தக்
கன்றினீ ரதனு லும்பாற்
கண்ணுத லருள்ப திந்த
தின்றுமை யடைந்தி யானு
முய்ந்தன னென்று சொல்வான். 57

அரியதாம் விச்சை மூவா
றவைமறை நான்கா றங்கங்
கருமஞா னங்கள் சொன்னூன்
மிருதிகாந் தருவம் வின்னூல்
பரதம்வா கடம்பு ராணம்
பகருநன் னியாய மென்ன
விரிதரு மிவற்றுட் சீர்சால்
புராணமே மேல தாகும். 58

பன்னுமப் புராண மீரோன்
பானெனும் பாகு பாட்டான்
முன்னுறு தலைமைக் கேற்ப
முக்கணெம் பிரான்கி ரைந்து

சென்னிகாப் பவற்கு நான்கு
திசைமுகற் கிரண்டு செங்கேழ்
துன்னுறு கனலி யென்பேர்ச்
சுடர்களுக் கொவ்வொன் ருமே. 59

அனையவற் றதிக மெந்தை
யமலமாக் கதையீ ரைந்து
நனிசிறப் பவற்றுட் காந்த
மதனினு ணலத்த தம்மா
தனிவரு சனற்கு மார
சங்கிதை யதனுட் சால
வினியது காளி காண்ட
மென்பர்மு தறிவின் மேலோர். 60

அன்னதில் வியாத னெங்கோ
னருளினுற் றமியேன் கேட்பத்
தன்னிக ரிலாத முத்தி
சார்ந்திடற் கேது தன்னை
முன்னமங் குரைத்தா னன்னுன்
மொழிந்தவா றுமக்கி யானும்
பன்னுவ னுடம்பெ டுத்த
பயன்பெறு முனிவிர் கேண்மின். 61

இச்சிறைப் பவங்க ணீங்கி
யிணையிலா முத்தி யெய்தன்
மெய்ச்சிவ ஞானத் தன்றி
வேறுள கருமத் தாகா

தச்சிவ ஞானம் பெற்றோ
ரயனது கற்ப வீற்றிற்
சச்சிதா னந்த முத்தி
சார்குவ ரென்ப மாதோ. 62

பிறைமுடிக் கின்ற முக்கட்
பிரான்றிருத் தலங்க டம்மி
லறமுடிப் பவர்த்து ரந்தோ
ரறிந்துமஞ் ஞான பாவத்
துறைமுடிக் கிற்போ ரேனுந்
துரிசெலா மெளிதி னீற்று
மறைமுடிக் கரிய ஞான
மன்னிமெய்க் கதியிற் சேர்வார். 63

வலியுக மலமெய்ஞ் ஞான
மருவிட வேண்டிற் சார்ந்த
புலியுக ளத்தாள் போற்றப்
பொதுநடம் புரிவோன் றனங்
கலியுக மதனிற் சாலக்
கசிந்துற வேண்டும் பாம்பி
னெலியுக ணேமி சப்பே
ரிருந்தவ வனத்தீ ரென்றான். 64

சூதமா முனிவ னின்ன
சொற்றிட வுவகை பூத்துத்
தீதிலா முனிவ முத்தி
சிவனிட மளிக்கு மென்றாய்

வாதரா யணன்ம லர்த்தாண்
மருவுமா ணுக்கர் தம்மு
ளோதியா லுயர்ந்தோய் சொல்வ
தொன்றுள தென்று சொல்வார். 65

தண்ணிலா மலர்ந்த வேணித்
தாணுவு முமையுந் தங்கள்
கண்ணுலா மக்க ளோடுங்
கயிலைபோ லிருப்ப தாகி
யெண்ணிலா வமரர் வேள்வி
யிறையயன் முராரி யென்று
முண்ணிலா வுவகை யோடு
முவர்த்தொழு தமர்வ தாகி. 66

அளப்பரு மனந்த கோடி
யமலமெய்த் தலங்க டோறுங்
கொளப்படு பயன்கண் முற்று
மெளிதினிற் கொடுப்ப தேயாய்த்
தளப்பது மத்து மேலோ
னந்தினு நந்தா தாகி
யுளப்படு போக முத்தி
யொருங்குற வுதவுஞ் சீர்த்தாய் 67

கங்கையா திகளின் மிக்க
காமரு புனித தீர்த்தந்
தங்குவ தாகி யுன்னிற்
சாற்றிடில் வினவிற் செங்கேழ்ப்

பங்கயன் மாயோ னெம்மான்
பதந்தர வல்ல தாகி
யிங்கொரு தலத்தை யைய
வியம்புதி யெங்கட் கென்றார். 68

என்றவ ருரைத்த லோடு
மெழுந்தபே ருவகை பொங்கக்
குன்றவிற் கோலத் தெம்மான்
கூவரங் கருதி யுள்ளங்
கன்றுளு மன்னை நெஞ்சிற்
கரைந்துக மயிர்பொ டிப்ப
மென்றுளி விழிய ரும்ப
விதிர்விதிர்த் தினைய சொல்வான். 69

அருந்தவ முனிக ணீவி
ரறைந்தன முழுதும் பெற்ற
பெருந்தல முளதொன் றம்ம
வதனது பெருமை தன்னைப்
பரந்திடு முகங்கள் கோடி
பஃறலை யரவப் புத்தே
ளிருந்துரைப் பினும டங்கா
தியான்சிறி தறிந்த சொல்கேன். 70

**குறிப்புரை:—** செய்யுள் – (4) நவ்வி என்பது நவி என்று யிற்று. (18) யண்டிதர் - அலங்காரமுடையவர். (26) அன்று தல்-பகைத்தல். (59) கனலியென்பேர்ச்சுடர்கள்-அக்கினி, சூரியன் என்பர். (69) கூபரம் என்னும் வடமொழி கூவரம் எனத் தற்பவமாயிற்று.

நைமிசாரணியச சருக்கம் முற்றிற்று.

ஆகச் செய்யுள்—86

# திருத்தலச் சருக்கம்

## நாடு

அநாதியாயுள்ள மலத்தொடக்கு நீங்கி எல்லோரும் சிவகதி சேருதற்கு அருளும் பொன் மயமான திருவிற்கோலநாதரது கூவத்தலத்தைச் சூழ்ந்துள்ளது தொண்டை நன்னாடு. மேகம், கடல் நீரை முகந்து நந்தி மலைமேல் நின்று நிமலனை நீராட்டல் போலப் பொழிந்தது.

## ஆறு

காராம பசு பாலைச் சொரிவது போலப் பொழிந்த மழை நீர் பாலாறு என்ற பெயருடன் பாய்ந்தது. அது, நறுமணமிக்க மலர்களையும், மணி, முத்து, யானைத்தந்தம் முதலியவற்றையும் ஏந்தி மக்களும் மாக்களும் பயன் பெறச்செய்து, பின் ஒரு காததூரத்தில் கடலிற் சென்று கலக்கும். மக்களது அகமும் புறமும் தூய்மைப் படுத்துவதற்குப் பாலாறு அன்றி வேறு புண்ணிய தீர்த்தம் எதுவும் இல்லை. ஆயிரந் தலைகளும் ஈராயிரங் கரங்களும்கொண்டு கயிலையில் சங்கு முழக்கும் பாநுகம்பன் போலப் பாலியாறு ஆயிரமாயிரம் கிளையாகப் பிரிந்து குளம், அகழி, சோலைகளில் நீரை நிரப்பிப் பாயும்.

## உழவர்கள்

மள்ளர்கள் மருதப் பறை கொட்டித் தலைத்தலை கூடினர்; பொன் ஏரில் காளைகளைப் பூட்டினர்; படைச்சால் கீறி நிலத்தை உழுதனர். நீரைத் தேக்கி நிலத்தைச் சேருக்கிப் பரம்படித்து வளப்படுத்தினர்; செஞ்சாலி முளைகளை விதைத்தனர்; முளைத்த நாற்றுகளைப் பிடுங்கி நட்டனர்.

நீலம், குமுதம், தாமரை முதலியவற்றை உழத்தியர்கள் தங்கள் வளையல் ஒலிக்க வேரோடும் பிடுங்கிக் களையெடுத்தனர். அதனால், வயலில், பாலி நாட்டவர் புண்ணியம் போலப் பசுங் கதிர்கள் விளைந்தன. அவை நன்றாகப் பால் பிடித்து முற்றித் தலை கவிழ்ந்தன. அதனைக் கண்ட உழவர்கள் முற்றிய கதிர்களை அறுவடை செய்து வான முட்டும்படிக் குவிப்பர்; பின் அவற்றை அடித்து வைக்கோலை நீக்குவர்; பதர் போகும்படிக் காற்றிலே தூற்றி நெல்லைப் பொலிகளாகக் குவிப்பர். இவ்வாறு கிடைத்த நெல்லில் அரசர்க்கு ஆறிலொரு பங்கு இறை பொருளாக ஈவர். எஞ்சிய நெற் கொண்டு எண்ணிலாத அறங்களை வளர்ப்பர்.

## நகரம்

இவ்விதச் சிறப்பமைந்த தொண்டை நாடு மதாணி போல்வது. ஏனைய தலங்கள் அதில் பதித்துள்ள மணிகள் போல்வன. அவற்றின் நடுநாயக மணிபோல் விளங்குவது கூவமா நகரம். இறைவனை இறுகத் தழுவிய அழகிய கச்சணிந்த காமாட்சியம்மை அறம் வளர்த்த காஞ்சியம்பதி, இந்நகரின் தென் திக்கில் விளங்கி நிற்கிறது.

உயர்ந்த கோபுரம், பொன்னாலும் மணியாலுமியன்ற மாட மாளிகைகள், மேக மண்டலத்தை முட்டிய மதில்கள், மண்டபங்கள், வேதிகைகள் ஆகியவை நிறைந்து, இந் நகர் தேவேந்திர நகரெனத் திகழும். மோகக் கடல் கடந்த மெய்ஞ்ஞான முனிவர்கள் செய்யும் வேள்விப் புகை, வானுயர் மாளிகைகளின் பக்கங்களில் மேருவைச் சுற்றியுள்ள மேகம்போலச் சூழ்ந்திருக்கும்.

## தல விசேடம்

இந் நகரில், திரிபுர சம்மாரத்திற்கு விரிசடை விமலன் தேரில் செல்லும்போது, ஆனைமுக அண்ணல் இடையிற்

புகுந்து தேரின் (கூவரம்) அச்சை ஒடித்து மேற்செல்லாமல் தடுத்தான். அது போழ்தில் நம்பனும் முப்புரம் வெந்து நீறுக நகைத்து வானவர்க்கு வாழ்வருளி, மேருவில்லேந்திய போர்க்கோலத்தோடு எழுந்தருளினன்.

தேவ தேவனது தேரின் (கூவரம்) அச்சு முறித்த அதிதீரனுதலின் விநாயகருக்கு 'கூவரக்னர்'—அச்சிறுத்த பிள்ளையார்—என்றும், பெருமானுடன் போருக்குச் சென்ற தால் தேவிக்கு 'வயிர வாகாரை'—பயங்கரமான வடிவினள்-எனவும் வித்தக விமலனுக்கு "கோதண்ட மண்டிதர்"—திருவிற்கோலநாதர்—எனவும திருநாமங்கள் வழங்கலாயின.

முருகன், வயிரவன், வீரபத்திரன் கூஷ்மாண்டர், ஐயனார், காலாக்கினிருத்திரர், ஆடகேசர், அயன், அரி, இந்திரன், இமையவர், முனிவர்களும் இறைவனை இறைஞ்சி இந் நகரிலேயே தங்கிவிட்டனர். இந் நகரின்கண் வந்த தேவர்கள் தம் தெய்வத்தன்மை மாறி, உண்ணிமைத்தும் கால்கள் நிலந்தோயவும் பெற்று அந்தணர் முதலிய நாற் குலத்தவரென வெவ்வேறு பெயருடன் வாழ்வர்.

தீமையே பெருகியுள்ள இக் கலியுகத்திலும், பழம் பதியான கூவநகரில் வாழும் வேளாளர்கள் அறநெறி நிற் பதாலும், ஆன்றபேர் அறிவினுலும், கொடைக் குணம், அன்பு, வாய்மை, பாவங்களொழித்த பண்பு முதலியவை பெற்று விளங்குவதாலும் தேவர்களே என்றறியலாம்.

எல்லா வுலகங்களுமழியும் பிரமகற்பத்திலும் கூவநகர் அழியாது. ஆற்று வெள்ளம் (கூவ) கிணற்று நீரைக் கொண்டு போகுமோ? கயிலை, காசி, காஞ்சி, காளத்தி, ஆலவாய், ஆரூர், அணிதில்லையாகிய புண்ணிய தலங்கள் தோறுமிருந்து இறைவன் புகலுவதெல்லாம் மாதவர் பயிலும் கூவத்தின் மகிமையையே. காசி முதலாய தலங்

களிற் செய்த பாவங்களும் திருக் கூவத்தின் எல்லையை மிதித்தவுடனே தீர்ந்துவிடும். ஆனால் இந்நகரில் செய்த பாவம் எந்தப் புண்ணிய தலங்களுக்குப் போனாலும் தீராது. இங்கு அணுவளவு செய்த அறம், மேருமலை போலவளரும். மலைபோன்ற மாபாதகமும் அணுபோல நொய்தாய அழியும். இத் தலத்தை அடைந்த தாழ்ந்த விலங்குகளும் பறவை களும் உயர்கதி யடையும். இத்தலத்தின் பெயரைச் சொன்னாலும் நினைத்தாலும் இங்குப் பிறந்தாலும் நற்கதி கிடைக்கும். இத்தலத்தின் அயலிலுள்ள ஊரில் வந்து ஒரு நாழிகை தங்கியவரும் சிவ லோகத்தில் நூறு பிரமகற்பம் இருப்பர் என்றால் இத் தலத்திற்குச் சமமாக வேறு எத்தலத்தைச் சொல்ல முடியும் ?

## மூர்த்தி விசேடம்

திருக்கூவ நாதனை ஆயிரம் கோடி பிரமாக்களும் நாராயணரும் வழிபட்டனர். பூசித்த இந்திரர் எண்ணிலர். இந் நகரைச் சூழ்ந்து தேவர், சித்தர், இயக்கர், நரகர் வழி பட்ட சிவலிங்கங்கள் எண்ணற்றவையுள்ளன. அவற்றைத் தரிசிக்கப் புத்தியும் முத்தியும் சித்திக்கும்.

இத் தலத்தின் மேற்கில் அழகும் இளமையும் பெற மேனகை, ஊர்வசி முதலிய அரம்பையர் பூசித்த 'அரம் பேசர்' இலம்பையங் கோட்டூரில் எழுந்தருளியுள்ளார். கிழக்கில் கண்ணுவர் வழிபட்ட 'கண்ணுவலிங்கம்' இருக் கிறது. இதனை வனங்கினோர் இந்திர போகத்தில் திளைத்து இனிதிருப்பர்.

## தீர்த்த விசேடம்

திருவிற்கோலநாதன் சன்னிதி முன் கங்கையினும் புனிதமான தீர்த்தம் ஒன்றிருக்கிறது. அதில் படிந்து தேவரும் உள்ளும் புறமுமான மாசுகள் நீங்கப் பெறுவர்.

வில்லோன் அம்பு (நீர்)க்கு தப்பும் (நீங்காமலிருக்கும்) வினைகளுமுண்டோ ?

## தீர்த்த வரலாறு

விற்கோலவிமலர் தேரின் அச்சை ஆனைமுகர் ஒடித்த இடத்தில் ஓர் அழகிய தீர்த்தம் தோன்றியது. அதற்குச் 'சிறுகேணி' என்று பெயர். இதில் முறைப்படி எட்டு நாட்கள் நீராடினால், ஒவ்வொருநாளும் செய்த பாவம் போகும் ; புண்ணியம் வளரும் ; இந்திரன் சூரியன், பிரமன், திருமால் பதங்களும், இறுதியில் சிவகதியும் கிட்டும். ஆதிவாரம், சோமவாரம், அட்டமி, அமாவாசை, பௌர்ணிமை ஆகிய புண்ணிய காலங்களில் இத் தீர்த்தமாடினால் நன்மக்களைப் பெற்று அரச போகத்தில் வாழ்ந்து சிவகதியும் பெறுவர். உலகிலுள்ள எல்லாத் தலங்களும் கூவத்திற்கு இணையாகா. எனது நெடுந்தவப் பயனும் வேதமுனியான குருவருளும், சிவனார் திருவருளும் கூட்ட, அழியாப் புகழ் படைத்த கூவ நகர்ப் பெருமையை அறிந்த மட்டில் உரைத்தேன். மலபரிபாகம் பெற்ற மாமுனிவர்களாகிய நீங்களும் கேட்க ஆர்வங் கொண்டீர்கள் " என்று சூதமாமுனிவர் கூறினார்.

நைமிச முனிவர்கள் களிமகிழ் சிறப்ப "ஐய, உம்மைக் கண்டு கண்பெற்ற பேறு பெற்றோம். உலகில் கிடைத்தற்கரிய நலங்களனைத்தும் எய்தப் பெற்றோம். பிறவிப் பிணிக்கு மருந்தான கூவத்தலத்தை வழிபட்ட பயனும் அடைந்தோம். முப்புரத்தவுணர் வரலாறு, தேவ தேவன் தேர்க்காலை ஆனைமுகர் ஒடிக்க நேர்ந்தவகை என்பவற்றை விளங்க உரைத்தருளுக " என வேண்டவும் சூதமா முனிவர் சொல்லலுற்றார்.

## நாட்டுச் சிறப்பு

பண்டுள முத்தனை பறிய மெய்க்கதி
கண்டிட வனைவருங் கனக மேருகோ
தண்டமண் டிதருறு தலத்தைச் சூழ்தரு
தொண்டைநன் ஞட்டணி தொகுத்துக் கூறுவாம். 1

## வேறு

வாய்த்த கார்புனற் சாடியின் வெண்படாம் வயங்கத்
தோய்த்து வான்மகள் கருமைகூர் துகில்தர விரித்துப்
போர்த்த தாமென மிளிர்தரு தவளவண் புயல்க
ணீத்த வாரிதி படிந்துகார் நிறமொடு பரந்த. 2

விண்ணு லாவிய புழைக்கைபோன் முகிலின மேவிக்
கண்ணு லாவிய சூல்வளை நித்திலங் கரையிற்
றண்ணு லாவிய வலையெறி சலதிநீர் முகந்து
மண்ணு லாவிய மதகரி போனமென வந்த. 3

## வேறு

சிந்து ரத்திருத் தென்கயி லாயம்வா
ழெந்தை தன்முடிக் கீர்ம்புன லாட்டல்போ
னந்தி யம்பெரு நாகச் சிகரிமேல்
வந்து நின்று மழைமுகில் பெய்தவே. 4

கோடு கொண்டுயர் குன்றினு நின்றுநீர்
மாடு துன்று மணியொடி ழிந்திட
லாடு மங்கத மண்ணன் முடியைவிட்
டோடு கின்ற வியல்பினை யொத்ததே. 5

கடிய மன்னர் கவர்ந்துகொண் டேகியே
விடின் விரைந்துதம் வீழ்நகர் செல்பவர்
படிய தென்னப் பயோதரம் பெய்புன
னெடிய மைக்கட னேடிந டந்ததே. 6

கார டைந்து காராவி னமுதினைச்
சீர டைந்த சிலம்பிற் பொழிதலு
மேர டைந்த பாலாறென் றொருபெரும்
பேர டைந்து புவியிற் பெயர்ந்ததே. 7

மெலியர் மேவும் வியன்சிறை நீக்குபு
வலியர் வந்துமீட் டேகுதன் மானவே
யொலிகொ ணீத்தமொண் கோடுடைத் தொல்லையிற்
பொலியும் வாவிநன் னீர்கொடு போகுமால். 8

வான மேய வலிகெழு கோளரா
வான வீர்ங்கதி ரென்னவங் காந்திடக்
கான மோடிக் கடுந்திரை யாலெடுத்
தேன மாமருப் பெற்றுமங் நீத்தமே. 9

சுலவி ரும்புனற் றெண்டைநன் னாட்டினி
னிலவ ளங்க ணிரபபுவ தன்றியும்
புலனி லங்கு புதுமணி யாதிய
மலைவ ளங்களுந் தந்திட வந்ததே. 10

குங்கு மங்கலந் தோர்புறங் கூர்ஞ்சுனை
தங்கி நின்றுறுந் தாதளைந் தோர்புறம்
பொங்கு தண்புனல் போதுவ தொண்மலை
மங்கை பாதி மணந்தவர்ப் போன்றதே. 11

வில்லி ருந்திரை வின்ஞண் குறுக்கி டு
வல்லி யொண்கணை செவ்விதின் வந்ததா
ளல்லி நன்முகை யாக்கொடு வேலையோ
டொல்லும் வெஞ்சமர்க் குற்றிடல் போன்றதே.1 2

பெண்ணை சாய்த்துப் பெருகிசுகா வேரியி
னண்ணி யோதிம நன்குற வைகைசேர்ந்
தெண்ணு கம்பை யியைந்தும ணித்திரண்
மண்ணி யேகும் வளங்கெழு பாலியே. 13

வேறு

சிலம்படி மருவிச் சந்தத்
திலகமுன் னெற்றி யிட்டுப்
பொலங்கொடி யிடைசூழ் காஞ்சி
பொருந்திமென் னகின்மே லார
மிலங்குற வளைகள் கைசேர்ந்
திரத்தினப் பணிதாங் காவுற்
பலம்பயி லளக மோடும்
பாலியா மடந்தை போந்தாள். 14

சேட்டிள வாளை தாக்கத்
தெங்கிள நீர்மாா்த் தாண்டன்
பூட்டுவெம் பரித்தோ் காறும்
விசையினிற் போதத் தெண்ணீர்
வேட்டவ ணிருந்த பாகன்
விரைவினிற் பற்றி யுண்ணு
மூட்டுமு ழெங்குற் றுலு
மனைவர்க்கு மூட்டி டாதோ. 15

துருக்கமு நறிய சந்துஞ்
சுடர்கெழு மணியு முத்து
மருக்கிளர் மலருந் தாங்கி
மதமுமிழ் கரிமேற் கொண்டு
பெருக்கமுற் றளவின் மாக்கள்
பரவப்பே ரியாற்று வேந்து
பொருக்கெனக் கடலோர் காத
மெதிர்புகுந் தழைப்பப் போமால். 16

நண்ணிய புறத்து மாசோ
டாடிய நரர்க்கு மற்றை
யுண்ணிகழ் மனத்த ழுக்கு
மொருங்குடன நீரும் வண்ண
மண்ணுபு மறித்து நண்ணு
வகைபுரிந் தமல நல்கும்
**புண்ணிய தீர்த்தம் பாலி**
**யல்லது புவியின் யாதோ.** 17

தன்னையா தரவிற் கணடோர்
தங்கட்கா தனமாய் நல்கப்
பொன்னிதழ்க் கமலப் போதும்
பொருந்தியா டுநர்க டாங்க
வங்நிலே யளிப்பச் சங்கு
படுத்துவந் துடகொண் டோர்கள்
பன்னக மனிதற் கீயப்
பரித்தொழு குறுமங் நீத்தம். 18

பொய்கையுங் கிடக்குங் காவும்
புகுந்துலாம் பாலி நீத்தஞ்
செய்களின் மள்ள ரார்ப்பச்
சிரமொரா யிரம்பெற் றீசன்
வைகுமொண் கயிலை நண்ணி
வலம்புரி முழக்குங் கம்பன்
கைகளி னிமிரும் பாங்கர்க்
கால்களி னிவந்து செல்லும். 19

தேஞ்சிலம் பெழுந்த பாலித்
தெண்புனல் பரவ மள்ளர்
தாஞ்சிலம் பியமோ டார்த்துத்
தலைத்தலைக் குழுமிச் செய்க்க
ணுஞ்சிலம் பகடு பூட்டி
நல்லெழின் மாதர் தங்காற்
பூஞ்சிலம் பெனச்சால் கீறிப்
புடைபரந் துழுவா ரன்றே. 20

அந்தக னிவரு மூர்த்தி
யன்னவெம் பகட்டேர் பூட்டி
யுந்தியங் குரப்பி மள்ள
ருழும்பணை யெகினஞ் சங்கைத்
தந்திடு மண்ட மென்னச்
சடக்கென வெடுத்து வான்போய்
நந்தென விடுப்ப வீழ்வ
நளிர்மதி தவறிற் றெருக்கும். 21

சுரும்பின மிரியல் போகத்
தொத்திகழ்க் கமலச் செப்பு
னிரம்புகட் கைம்ம டுத்து
நிறையவுண் டெழுந்து மள்ளர்
வரும்புன றேக்கி யான்ற
வயலுழு தளைந்த சேறு
பரம்படித் திழுது செய்து
பறித்தநா றெங்கு நட்டார். 22

களைகளை விப்ப மள்ளர்
கருதித்தம் மாதர்ப் பாரா
விளையமிர் தன்னீர் நுங்கள்
விழியிதழ் வதன மோடு
முளரியொண் குமுத நீல
முரணிநிற் கின்ற வென்ன
வளைகலித் திடவே ரோடு
மற்றவை களைதல் செய்வார். 23

வேறு

முற்றிடு நளிர்மதி முகத்து ழத்திய
ருற்றிட வயலினெம் முறையிற் கண்களான்
மற்றெமை யிகலினோர் வருத லென்னென
வெற்றிடு மறந்திட வெழுந்த சேல்களே. 24

முண்டக நறைமலர் மொய்த்த பாங்கரி
லொண்டொடி மார்திரு வுருவ மெண்ணில
கொண்டவை தொறுமரீஇக் குதித்து நின்றென
மண்டுறு பெரும்புனல் வயற்க ணிற்பரால். 25

அலைபுனற் றண்பணை யகத்துச் செந்நெலோ
ரிலைபுடை வளைவுற வீர்ம்ப சுங்கதிர்
நிலைபெற வெழுந்துமே னிமிர்ந்து தோன்றுவ
கொலைமத கரியினங் குசங்கள் போன்றவே. 26

உண்ணிய வந்துறு நாரை யோடமே
னண்ணிய வாளைபாய் நலத்த பண்ணையிற்
பண்ணிய பயிர்பெரும் பாலி நாட்டுளோர்
புண்ணியந் தெரிவுற விளைந்த பொற்பினால். 27

மேனிமிர் பைஞ்சுருள் விரித்த சாலிகள்
பானிறை தருங்கதிர் பழுத்த கண்ணுறீஇக்
கூனிரும் பிணைகரங் கொண்ட ரிந்தரோ
வானக டுரிஞ்சுபோர் வகுப்பர் மள்ளர்கள். 28

ஏர்க்கதிர் வாள்கொடே யீர்வர் வீக்கிமெய்
வோர்க்கவங் கெடுத்துராய் வீழ்த்தி யெற்றுவர்
சூர்க்கரும் பகட்டினுற் றுவைப்பித் தார்ப்பராற்
போர்க்களம் புகுந்துபோர் புரிநன் மள்ளரே. 29

வேறுறும் பலாலநீத் துலவை மேவுழி
மாறரும் பதடிகண் மாற்றி நெற்குவா
லாறினென் றரையருக் களித்து மற்றவைங்
கூறுநல் லறங்களிற் குலவச செய்வரால். 30

## வேறு

பிரிந்தமட வாரளகங் குழைக்காது
விழியதரம் பிறங்கு மூரல்
பொருந்துகள முலைபாணி யுந்திமுழந்
தாள்கணைக்கால் புறந்தாள் வாவி

பரந்திடுசை வலம்வள்ளை கயலாம்பற்
றரளமணி பணிலங் கண்ணி
விரிந்தமரை சுழியலவன் வரால்கமட
மிளைஞருளம் விரும்பக் காட்டும். 31

வானமெழு நிறைமதியந் தண்டகநாட்
டரிவையந்தம் வதனம் போலா
தூனமுட னலமரவிப் பதுமமா
மலர்மலர்ந்தே யொப்ப விங்ஙன்
ருனமர்வ தென்னுக்கென் றழுக்காறு
மனத்தடையத் தடத்த வாவித்
தேனவிழு மிதழ்க்கமலச் செழுமபோதின்
றனதழகைச் சிதைக்கு மன்றே. 32

**வேறு**

தண்ணம் பாசடை துன்னுபு சார்ந்துள
கண்ண கன்புனற் காமரு பைந்தடம்
வண்ண வொண்குமு தங்கண் மலர்ந்தன
விண்ணின் வந்தெழு மின்றிரள் போன்றவே. 33

வாடு கின்ற மருங்குல் வருத்துபூண்
மூடு கின்ற முகிண்முலை மாதரார்
பாடு கின்ற ஞிமிறு பரந்தெழ
வாடு கின்றன வம்புய வாவியே. 34

**வேறு**

வாவி யம்புனல் குடை யுமெல்
லியர்மதர் மழைக்கண்
காவி யென்றிதழ் குமுதமென்
ருனனங் கமலப்

பூவ தென்றிருட் குழலின்
மென்றுபல் பொறிவண்
டாவல் கொண்டுவந தணைதரப்
பொருக்கென வாழ்வார். 35

கோட்டி ரும்புனற் றடத்தினின்
மூழ்கியே குடங்கை
காட்டி நின்றிரிந் தோடிய
வோதிமங் காணு
வேட்டி லங்கிய கமலமென்
றதனிடை யிவரப்
பேட்டி னங்கணெஞ் சழுங்குற
வனிதையர் பிடிப்பார். 36

குடைந்து வாவிநீர் படியுமோர்
குளிர்மதி முகத்தி
யடைந்து தாமரை முகத்தியை
யலைக்குமொண் மயிலா
மடந்தை யோரர வல்குலைப்
பிடிக்கும் வாரணம்போ
னடந்த கோதையை மடங்கலா
மருங்குலா ணலியும். 37

### நகரச் சிறப்பு

இன்ன வாகிய வளங்கெழு தொண்டைநா டேமந்
தன்னி லாமொளிர மதாணியா மற்றுள தலங்கண்
மன்ன ஞாங்கரிற் சூழ்தர வழுத்திய மணியாக்
கொன்னு லாநடு நாயக மாயது கூவம். 38

வம்பு மாமத யானைக ளிரண்டொரு வயிரக்
கம்ப மேவுறக் கட்டுமை யறங்களைக் காட்டுஞ்
செம்பொன் மாமதிற் காஞ்சிதென் றிக்கினிற் றிகழ
விம்பர் மேயது தனக்கிணை யிலாதவக் கூவம். 39

தேங்கு சோதிமா நவமணி பொன்கொடு செய்த
வோங்கு கோபுர மாடமா ளிகையொளிர் வேரம்
பாங்கு சூழ்மதின் மண்டபந் தெற்றிகள் பலவு
மீங்கு வாழ்தரு மிந்திர னகரென லிலங்கும் 40

சோதி பெற்றவொன் பானெனு மணிகளுந் துவன்றி
மேத கப்பெருஞ் செய்குன்று பற்பல விளங்கல்
பாத லத்தரா விறைசிரம் பரித்தபன் மகுடம்
பூத லத்துமேற் புறப்படத் தோன்றுவ போலும். 41

திங்கள் வாணுத லரிவையர் நடுநிலை செறியத்
துங்க மாகிய மரகதச் சிகரிக டோன்றல்
பங்க யாதனப் பொறிபல மார்பகம் பயில
மங்குல் வான்முக டளவுநீண் முராரிகண் மானும். 42

தெண்ணி லாவொளிர் மேனிலச் சேக்கையின் மாதர்
நண்ணி நாயகர் தங்கலை நெகிழ்த்திட நாணி
மண்ணி வாள்விடு பதுமரா கப்பணி மறைத்து
வெண்ணி லாவிருள் படிட நீலணி விரிபபார். 43

தருக்கு மங்கலக் கடைத்தலை தொறுமணி தழைப்ப
நிரைக்கு மொண்கழை யரம்பைபூ கதமிவை நிகழ்த
லரக்கு மெல்லிதழ் மாதர்தோ டொடைகளத் தழகை
யிரக்கும் வண்ணம்வந் தேகடை காக்குமா றேய்க்கும். 44

ஓதி மஞ்சின கரத்தய னிறுவியே யுட்போ
யாதி யங்கழல் பணிந்துமீண் டிடுமுனங் கடைந்த
மாதர் நன்னடை விழைந்துபின் சென்றிட வந்து
போத னங்கது கண்டிலன் றேடியே போகும். 45

முன்ன னங்கன்மாட் டெய்துபூண் முலையினுட் கண்ட
மன்னு மைந்தர்தங் காதல்கூர் மகளிரை நோக்கி
யென்னை நம்மெதிர் தமியளாய் நேர்ந்தவ ளார்கொ
லென்ன வங்கவ ரூடுவர் விழைந்தன ரென்று. 46

மருவு மாடவ ரெழின்மிகு வடிவினை நோக்கிப்
பொருவின் மாரவே டனதுளம் பொருமலே வெள்கி
யுருவ மாயிவர் கண்முன முற்றிடா தியாமுன்
னருவ மாயது நன்றெனத் தேறியே யகல்வான். 47

உள்ள மாதரங் கூரவின் சொற்புகன் றுதவும்
வள்ள லாகிய கூவமா நகருறை மாந்தர்த்
தெள்ளு நீர்மைகண் டைந்தருத் தேனுவொண் சிந்துப்
பள்ள மார்தரு கருமுகி லினம்பயப் படுமால். 48

மோக சாகரங் கடந்துநூற் கரைகண்ட முனிவர்
யாக சாலையி னறும்புகைப் படலைக ளெழுந்து
பாக சாதனன் பதம்பெறு பசும்பொன்மா ளிகைப்பான்
மேக சாலங்கண் மேருவைச் சூழ்ந்தென மேவும். 49

## தலவிசேடம்

இனைய தாகிய கூவமாந் தனிநக ரிடத்து
முனிவர் வானவர் சூழ்தர முப்புர முடிப்பான்
புனித னேகுழிக் கரிமுகன் புகுந்துகூ வரத்தைத்
தனியு லாங்கரத் தொடித்தனன் செலவினைத் தடுத்தான்.

ஆன காலையி னமரர்தந் துயர்கெட வாண்டு
**ஞான நாயகன்** றிரிபுரம் பொடிபட நகைத்து
வான நாடவர் வாழ்வுபெற் றுய்ந்திட வழங்கிக்
**கூனன் மேருவிற் பிடித்தமர்க் கோலமாய் நின்றான்.** 51

நின்ற வாதிகூ வரந்தனை யொடித்திடு நிலையா
லன்று **கூவரக் கினரெ**னும் **பிள்ளையோ** டமரிற்
சென்ற தாலுடன் **வயிரவா காரையாந்** தேவி
யொன்ற மேரு**கோ தண்டமண் டித**ரென வு**றை**ந்தான. 52

**வேறு**

காங்கெயன் வடுகன் றக்கற் காதிகூர் மாண்டன் **காரி**
யோங்குறு காலச் செந்தீ யுருத்திர னுட கேசன்
பூங்கம லத்தன் மாயோன் புரந்தரன் முனிவர் விண்ணோர்
தாங்களு மிறைவற் போற்றித் தங்கினர் கூவ மூதூர். 53

என்றுமிக் கூவ மேய வெந்தைதன் கலைக டம்மி
லொன்றினை யாயி ரங்கூ றிட்டவற் றென்ற தாக
மன்றலங் கயிலை மன்னு மாங்கமர் மற்று ளோருந்
துன்றிய தமது தானந் துன்னுவ தற்றே யாகும். 54

அங்நக ரத்தின் வந்த வமரர்கண் **ணிறைத்துக்** கால்க
ளிங்நில வரைப்பிற் சேர்த்தி யிலங்குபேர் வேறு கொண்டு
முன்னுறு முகங்க ளுன்கு முறையினந் தணர்கண் மன்னர்
தொன்னிதி வணிகர் தூய சூத்திர ரென்ன வாழ்வார். 55

**வேறு**

அறந்தலை நிற்ற லாற்பே
ரறிவினுற் கொடையா லன்பான்
மறந்தரு கொலைக ளாதி
மாற்றலால் வாய்மைச் சொல்லா

னிறைந்தவிக் கலியு துகத்
நிலைத்தசீர்க் கூவ மூதூர்ச்
சிறந்தவே ளாள ரானோர்
தேவரென் றறிய லாமால்.

தளங்கமழ் கமல வாசச்
சதுர்முகன் கற்ப வீற்றிற்
றுளங்கிட வுலக மெல்லாந்
தொலைசுகுமப் பிரள யத்தும்
வளந்கெழு விற்கோ லத்தெம்
வள்ளலூர்க் கிறுதி யின்றால்
விளங்கிய கூவ நீரை
வெள்ளங்கொண் டகலு மோதான்.

கயிலைகே தாரங் காசி
கச்சிதென் மதுரை சோண
சயிலமா ரூர்கா ளத்தி
தடம்பணைத் தில்லை யாதி
யியலுறு தானந் தோறு
மிருந்திறை பகர்வ தெல்லாம்
பயிலுமா தவர்வாழ் கூவப்
பதிப்பெரும் புகழே யம்மா.

தக்கநற் காசி யாதி
தலங்களி னிழைத்த தீமை
முக்கணெம் பெருமா னேய
முழுதுறுங் கூவத் தெல்லை

புக்கவக் கணமே தீரும்
போற்றுமந் நகரிற் செய்த
மிக்கவெம் பவம வற்றால்
விலக்கிடப் படாதா லென்றும். 59

நடைவலம் வரலி ருத்த
னற்சுகா தனம்வ ணக்கங்
கிடைமொழி துதித்தல் கேட்டல்
கேள்வியுன் னுதறி யான
மடையில் சமாதி செய்கை
யரன்றெழி ஞேக்கல் கொன்றைச்
சடையனை நாட லாகுந்
தனைநிகர் கூவத் தன்றே. 60

சீருறு மிணையில் கூவச் செழுநக ரிடத்து மேவி
யோரணு வளவி யற்று மோரற மேன்மே லோங்கி
மேருவின் வளரு மன்ன மேருவிற் செய்த தீமை
நேரணு வதனி னெய்தாய் நீறுபட் டழியு மாதோ. 61

## வேறு

மைந்தரை யன்னையை மாதரை யாவைத்
தந்தையை யந்தணர் தம்மை வதைத்த
வந்தமில் பாதக ராயினு மெல்லை
வந்திடி னந்நகர் வண்கதி நல்கும். 62

பன்றி யயங்கள் பதாயுத நாய்மா
வன்றில் கரங்கொடி யங்கத மாதி
கொன்றை மிலைந்தவர் கூவ புரத்தே
யொன்றின யாவையு மொண்கதி நண்ணும். 63

அருத்தி மிகுந்திட வப்பதி யின்பே
ருரைத்தவர் நெஞ்சுற வுன்னின ரங்ஙன்
கருத்தனின் வந்து கலந்து பிறந்தார்
மரித்தவர் மெய்க்கதி மன்னுவ ரன்றே. 64

அங்நக ரத்தின யற்பதி யாரோர்
கன்ன லிருப்பி னயன்சத கற்ப
மன்னுவர் மெய்ச்சிவ லோக வளத்தே
யென்னின தற்கிணை யாதுரை செய்வாம். 65

ஆயிர கோடி யயன்றிரு மாறுன்
மேயினர் பூசை விளைத்தனர் கூவத்
தூயனை யேவழி பாடு தொடங்கி
யேயின விந்திர ருகக்கள வின்றே. 66

வேறு

அண்டர்சித்த ரியக்கர்கின்னர
ராழ்பிலத்துறை நரகர்வின்
மண்டிதற்கிட ஞகி வைகிய
கூவமாநகர் சூழ்தர
வெண்டிசைக்கணும் வந்தமைத்தவர்
பூசைசெய்தவி லிங்கமோ
கண்டவர்க்குயர் புத்திமுத்தி
யளித்திருப்ப கணிப்பில. 67

பன்னரும்புகழ் மேயகூவ
புரத்தினிற்குட பாலினிற்
கின்னரம்புரை கொங்கைமேனகை
கெண்டையங்க ணுருப்பசி

முன்னரம்பைய ரிளமைநல்லெழின்
முற்றுருதரம் பேசளு
மென்னவொண்சிவ லிங்கமொன்றை
யியற்றியேவழி பட்டனர். 68

அந்தமெய்ச்சிவ லிங்கமவேண்டுநர்
வேண்டியாங்கு வழங்கியே
சுந்தரத்துறு மாலதன் குண
திசையின்முன்பு தொடங்கிய
பந்தமற்றிட முனிவர்பூசை
பயின்றகண்ணுவ லிங்கமுற்
றிந்திரத்திரு வந்துகண்டவர்
பெற்றிடும்படி யீயுமே. 69

வேறு

செம்பொனிதழ்க் கொன்றைபுனை விற்கோலத்
தெம்பெருமான் றிருமுன் ளுக
வம்பவளச் சடைக்கங்கை தனிற்புனித
தீர்த்தமொன்றுண் டறையக் கேண்மி
னும்பருமங் கதின்மூழ்கி மனக்களங்க
மொழித்திடுவ ருயர்த்த விற்கோ
னம்புபடிற் பிழைக்குமோ வினையனைத்து
மக்கணமே யகன்று போமால். 70

அத்தகைய தீர்த்தமிவ ணவதரித்த
வகையவுணர் புரங்கண் மாயச்
சுத்தனடற் புரவிநெடுங் கொடிமணித்தேர்
மிசையமரர் சூழ்ந்து போற்ற

வித்தலநின் றிடுங்காலை யிரதகூவ
ரத்தையிப முகத்தெம் பெம்மான்
கைத்தலங்கொண் டிறுத்தவிடத் தெழுந்ததுநம்
பவமாசு கழுவு நீராய். 71

ஆதலினங் கதற்கரிய திருநாம
மச்சிறுகே ணியதா மென்றே
யோதுவரங் கதன்பெருமை யுமையொருபா
லுடையபிரா னுரைப்ப தல்லாற்
போதமிலென் புந்தியினாற் புகலவெளி
தோவதனைப் புகழ்ந்து போற்றிற்
றீதகலு மெனும்பொருட்டாற் றமியேனு
மறிந்தபடி செப்பு வேனால். 72

வந்ததனி லிருநான்கு பகன்மூழ்கின்
வரன்முறையா லொவ்வோர் வைகற்
கந்தமறும் பவம்போம்புண் ணியம்வளரு
மகபதித னரிய தான
முந்துபிர சாபதிதன் றனமய
னுறுதான முகுந்தன் றன
மெந்தையுமை யொருபாக னிருந்தான
முத்தியிவை யெய்து மன்றே. 73

செங்கதிர்வெண் கதிர்நாளட் டமியயன
முவாவாதி தினங்க ணண்ணி
யங்கதனி லாடுநர்க ளரும்புதல்வ
ரரசாட்சி யாக்க மெய்தித்

தங்கியிருங் கதியடைவ ரதிற்றோய்ந்து
போம்பறவை சார்ந்த வாவிப்
பொங்குபுனற் படிந்தவரும் வினைதீர்ந்து
மெய்க்கதியிற் புகுவ ரன்றே. 74

தீர்த்தமுல குளவெவையு மப்புனித
தீர்த்தத்துக் கொவ்வா வெல்லா
மூர்த்திகளும் விற்கோல மூர்த்திதனக்
கிணையல்ல முந்நீர் சூழ்ந்த
பார்த்திகழு மருந்தலங்க ளெனப்பகரப்
பட்டவெலாம் புவன மூன்றும்
போர்த்தபெரும் புகழ்படைத்த கூவமா
நகரதனைப் போன்றி டாவே. 75

எண்ணிறந்த வுகங்கடவம் பயின்றதனால்
விழிநுதலி னிமைக்கு மீச
னுண்ணிறைந்த கருணையினு லிலகுகுரு
பரனருளா லொழிவில் சீர்த்திப்
பண்ணிறைந்த கூவநகர்ப் பெருமைசிறி
தறிந்துரைத்தேன் பவங்க டீரக்
கண்ணிறைந்த மலபாகம் வரநீவி
ரதுவினவக் காதல் கொண்டீர். 76

என்றினைய சூதமுனி புகன்றிடலு
மிருந்தவர்க ளுவகை யெய்தி
யின்றெமது விழிசிறப்ப நினைக்காணும்
பேறுடையே முலகி னெல்லா

நன்றியையு முடையேம்வெம் பவப்பிணிக்கு
மருந்தாகி நணுகுங் கூவஞ்
சென்றுதொழு மரும்பயனும் பெற்றனமென்
றுரைத்திதனைச் செப்பு கின்றார். 77

அருந்தவநீ முனம்புகன்ற திரிபுரத்தி
னியல்பெவன்கொ லதிப ராகி
யிருந்தவர்யா ரவர்நாம மேதமரர்
குழுவோடு மிறைவன் சாட
வருந்திறம்யா தைங்கரத்துத் தனிக்கட வு
ளமலனிவர் வையத் தாழி
பொருந்துறுமா றொடித்ததென்னுக் குரைத்தியெனச்
சூதமுனி புகல்வ தானன். 78

குறிப்புரை :—செய்யுள் (1) கோதண்டமண்டிதர் - விற்கோலநாதர். (50) கூவரம் - ஏர்க்கால்; ஏர்க்காலோடு ஆரையும் அச்சையும் ஒருங்குசேர்த்து ஒடித்தனராகலின் ஆரையொடித்தனர்; அச்சையொடித்தனர் எனவும் வரும். (52) வயிராகாரை - பயங்கரமானவுருவத்தை யுடையவள். (53) காங்கேயன் என்பது - காங்கெயன் எனக் குறுகி நின்றது. கூஷ்மாண்டன் என்பது - கூர்மாண்டன் என்றாயிற்று. (68) அரம்பையராற் பூசிக்கப்பட்ட இத்தலம், ரம்பா என்னும் வடமொழி லம்பா என்றாகித் தமிழ்விதிப்படி மொழிமுதற்கண் இகரம்பெற்று ஆகாரவீறு ஐகாரவீறாகி நிற்க, அதனோடு கோட்டூர் என்னும் ஊர்ப்பெயர் புணருங்கால் அம்முச் சாரியை தோன்றப்பெற்று, இலம்பையங்கோட்டூர் என வழங்குகின்றது. இது தேவாரம்பெற்ற தலங்களுள் ஒன்று. (69) முனிவர் - கண்ணுவமுனிவர்.

திருத்தலச் சருக்கம் முற்றிற்று.

ஆகச் செய்யுள்—164

# திரிபுரதகனச் சருக்கம்

---

பெரும்புகழ் பெற்ற **தாருகன்** என்றோர் அசுரன் இருந்தான். அவனுக்கு **வித்துன்மாலி, தாரகாட்சன், கமலாட்சன்** என்று மூன்று பிள்ளைகள் காமம், வெகுளி, மயக்கம் என்ற முக்குற்றங்கள் போலத் தோன்றினர்.

தாருகன், அண்டங்கள் பலவற்றை ஆண்டு தனிவேல் பரமனால் மடிந்தொழிந்தான். அவனது மக்கள் அயனாரை எண்ணி அருந்தவ மியற்றினர். அன்னவாகனரும் அவர் முன் தோன்றினார். அவர்களும் "எந்தையே! மூவுலகிலும் செல்லும் மும்மதில்கள் வேண்டும். நாங்கள் மூவரும் பல்லாண்டுகள் பகையொழித்து வாழவேண்டும். ஆயிரமாண்டிற்கொருமுறை மும்மதில்கள் ஒன்றுகூட வேண்டும். அழிவதானால், எம்மை ஒருங்கே ஒருவனே ஒரே கணையால் அழிக்க வேண்டும்" என்றெல்லாம் வேண்டிப் பெற்றனர்.

அயனாரளித்த வரத்தின்படிப் பொன், வெள்ளி, இரும்பினாலான மும்மதில்கள் ஆயிரம் யோசனை அகலமும் உயரமும் கொண்டு தோன்றின. அம் மூவருக்கும் முறையே விண்ணவருலகில் பொன், வானத்தில் வெள்ளி, மண்ணுலகில் இரும்பு மதில்களைக்கொண்டு ஆங்காங்குத் தனித்தனி நகரங்களை மயன் அமைத்துக் கொடுத்தான். பிறகு மயன் அவர்களை நோக்கி, புகழ், பொருள், கல்வி முதலியவற்றை வேண்டுபவர் சிவலிங்க பூசனை செய்ய வேண்டும். அப் பூசனை, பழி, பகை, அச்சம், வறுமை, அல்லல், பிணி ஆகியவற்றை நீக்க வல்லது. அயன், அரி முதலிய அமரர்களும் குடங்கை நீரும் பச்சிலையும் இட்டு இலிங்க பூசனை புரிவர். சிலர் நல்வாழ்வில் வாழக்கண்டு '**பூசாபலம்**' இது என்பர்.

அப்படியிருந்தும் பூசனை புரியாதுழல்பவர் செயலை என்னென்று கூறுவது ? மலரிட்டு வழிபட்ட மார்க்கண்டேயரும் எமபய நீங்க விதியையும் வென்றார். ஆதலால், நீங்கள் வேண்டியவற்றை வேண்டியவாறே பெறுதற்குத் திருநீறுங் கண்டிகையும் பூண்டு சிவலிங்க பூசை செய்யுங்கள் " என்றான். அவ்வாறே அவுணரும் சிவலிங்க பூசனையை மேற்கொண்டு நலமுறுவராயினர்.

முப்புரத்தவர்களும் தம் வர பலத்தால் மூவுலகையும் வென்றனர்; எண் திசைக் காவலர், தேவர் முனிவர் யாவரையும் ஏவலராக்கொண்டு ஆணை செலுத்தினர்; அவர்களைப் பலவாறு துன்புறுத்தித் துயரத்திலாழ்த்தினர். இந்திரன் இவர்களது தொல்லை தீரும் காலத்தை எதிர் நோக்கி நின்றனன். தேவர்கள், அவுணரது அல்லலுக்கு ஆற்றாது இந்திரனிடம் முறையிட்டனர். இந்திரனும் பிரமதேவரைக் கொண்டு மாயோனிடம் சென்று தம் குறை தீர்த்தருளுமாறு வேண்டினன்.

நான்முகனுதியோர் குறைமுடிக்க எண்ணிய நாராயணரும் உபசத்துக்கள் என்ற மந்திர அதிதேவதைகளைச் சேனையுடன் அனுப்பி முப்புரத்தை முடித்துவருகென்று ஏவினர். அவர்களும் சென்று போரிட்டுத் தோல்வியுற்றுத் திரும்பினர்.

இதனை தேவராலறிந்த திருமால், சிவலிங்க பூசனையின் சிறப்பே முப்புரத்தவர் வெற்றிக்குக்காரணம் என உணர்ந்து அவர்கள் அதனைக் கைவிடும்படிச் செய்யுமுபாயத்தைச் சிந்தித்தனர். நாரதரை இதயத்தெண்ணினர். நாரதரும் வந்துவிட்டார். அவரைக்கொண்டு முப்புரத்தவுணர் கற்பரசிகளது கற்பினை அழிக்கச் செய்தார். திருமால், **புத்தர், ஜினர், அருகர்** என்ற மூவருக்கொண்டு சென்று தமது நூலை உபதேசித்தனர். அவுணர்களும் நீறு, கண்டிகை, சிவபூசனை,

ஆகியவற்றைச் சோர விட்டனர். நாரதர் சூழ்ச்சியாலும் நாரணர் பிரசாரத்தாலும் முப்புரத்தவரான அவுணர்களும் அவுணமாதர்களும் செங்நெறி கைவிட்ட செய்திகேட்டுத் தேவர்கள் ஆடிப்பாடி அகமகிழ்ந்தனர்.

பின்பு மாயவனார் தேவர்கள் சூழத் திருக்கயிலை சேர்ந்தார். அரியும் அமரரும் அரனாரைப் பலவாறு துதித்து முப்புரத்தவரின் தொல்லையை நீக்கியருளுமாறு வேண்டினர். மகா தேவரும் தேவரை நோக்கி, "அஞ்சாதீர்! நாம் அந்த அவுணரை அழிப்போம். அதற்குரிய போர்க்கருவி நம்மிடமில்லையே!" என்றனர். கேட்ட அமரர்கள், "ஈசனார்க்கீதோர் திருவிளையாடல்போலாம்" என்றெண்ணித்தேவதச்சனைக் கொண்டு ஆவனசெய்யுமாறு வேண்டினர். அவனும், பூமி தேராக, சூரிய சந்திரர்-தேர்ச்சக்கரங்களாக, வேதங்கள்-குதிரைகளாக, பிரமதேவர் - தேர்ப்பாகனாக, மேரு மலை-வில்லாக, ஆதிசேடன்-நாணாக, அக்கினி, சந்திரன், திருமால்-மூவரும் அம்பாக விரைவில் போர்க்குரியவற்றை அமைத்துக் கொடுத்தான்.

அதனைக் கண்ட சங்கரரும் தேவியுடன் எழுந்தார்; தேவர்கள், 'சய சய' என்று முழங்கினர். பரனாரும் தம் பொற் பாதுகைகளை அணிந்து கோயிலின் புறத்தே வந்தனர்; அங்கிருந்த அழகிய தேரில் தேவியொடும் ஏறி வில்லையும் அம்பையும் தம் திருக்கரங்களில் பற்றிநின்றனர்.

மலர்மழை பொழிந்தது; அமரர்கள் கவரியிரட்டினர்; ஆலவட்டம் வீசினர்; பாநுகம்பனும் ஆயிரம் வாய்களில் சங்கம் வைத்து முழக்கினான். முரசமும் சின்னங்களும் முழங்கப் பூதகணங்கள் குதித்தும் துதித்தும் சென்றன. சிவனார் கயிலை நீங்கிக் காவதம் பலவற்றைக் கணத்தில் கடந்து, கூவநகரைக் குறுகினர். அப்போது அருள் மதமருத ஆனைமுகர், சிவனாரின் தேரின் அச்சைத் தம் துதிக்கை

யால் பிடித்து முறித்தெறிந்தனர். உடனே திருமால் இடப வுருக்கொண்டு இறைவனைத் தம் முதுகில் தாங்கினர்.

ஐங்கரன், சிவபிரான் தேரின் அச்சைமுறித்தது கண்டு இமையவர்கள் முன்னிலும் பன்மடங்கு வருத்திப் பகைவர் செயலிதுவோ எனத் திசை தோறும் ஓடினர். உடனே ஆறுமுகப் பெருமான் அமரர்களை நோக்கி, " அஞ்சாதீர் ! நில்லுங்கள், நில்லுங்கள் ! அச்சு முறித்தவர்கள் அவுணர்களல்லர் ; என் முன்னோனை ஆனை முகத்தனே " என்று கூறி அழைத்தனர். தேவர்களும் செவ்வேள் அருகில் வந்து நின்று, "இனிமேல் போரிடுவது எவ்வாறு ?" என ஏங்கினர். பெருமானும் " கரிமுகனை வழிபடாமல் தேர் ஏறுமையால் இது விளைந்தது " என்று காட்டவே கூவமா நகரில் பழவகைகள் எல்லாம் படைத்துக் கணபதியை வழிபட்டார்.

பின்பு முக்கண் மூர்த்தியும் மும்மதில்களும் முன்னுறு மாறு முன்னினன். உடனே முப்புரங்களும் அனைவரும் திடுக்கிட அணைந்தன. அவுணர்களும் நாற் படைகளும் கொண்டு போரிடவந்தனர். வில்லேந்திய விமலரிடம் சென்று, தேவர்கள், " அவுணரை அடுதற் கேற்ற நல்ல நேரம் இதுவே " என்றனர். எம்பிரானும் விருப்பத்தோடு நங்கையை நோக்கி நகைத்தனர். அச்சிரிப்பெழுந்த நெருப்புக் கொழுந்து அரைக் கணத்தில் திரிபுரத்தைச் சுட்டு நீறுக்கியது. ஆனல் மூவர் (அவுணர்) மட்டும் பெற்ற வரத்தால் இறவாதிருந்தனர். உடனே செம்மேனி எம் மானும் அப் பொற்சிலை வளைத்து அம்பொன்று ஏவினர். அஃது மூவர் உயிரைக் கவர்ந்து முன்போல் நாதனர் வலக்கரத்தில் வந்து சேர்ந்தது. தேவர்கள் பூமழை பொழிந்தார்த்தனர் ; விற்கோலத்தாரை அருச்சித்தனர். பிறகு

அவர்கள் விரும்பியவாறே அனைவரும் வணங்கி வழிபட இலிங்கவடிவ மேற்றனன். அரியயன் முதலிய அமரரும் முனிவரும் நீராட்டி மலர் சூட்டி வழிபட்டனர். வில்லேந்திய கோலத்துடனிருந்து தோன்றிய இலிங்கத்திற்கும் விற்கோல நாதர் என்ற திருநாமமே வழங்குவதாயிற்று. ஆனைமுகன், ஆறுமுகன், அரி, அயன், அமரர்கோமான், புவனநாயகரும் மெய்த்தவ முனிவரும் அத்தலத்திலே தங்கி விட்டனர். ஈசனுர் உமையம்மையுடன் நிரந்தரம் எழுந்தருளியுள்ளதால் இத்தலத்துக்கு " அவி முத்தம் " என்ற பெயரும் வழங்கும். ஐங்கரக்கடவுள், தேரின் அச்சு முறித்ததால் கூவர நகரெனவும் கூறுவர். மூவுலகங்களுக்கு நடுவண் அமைந்த கூவம் (கிணறு) போன்றுள்ளதால் கூவம் எனும் பெயர் குறிக்கப்படும்," என்று இவற்றைக் கூறிச் சூதமாமுனிவர் நைமிசவாசிகளைக் கூவத்தை வழிபட்டுச் சிவகதி சேருக எனச் செப்பினுர்.

தாலமேற் புகழ்வைத் துள்ள தாரகன் சிறுராய் வித்துன்
மாலியே தார காக்கன் வயக்கம லாக்க னென்ன
வேலுலாந் தடக்கை வென்றி வீரர்கண் மூவர் பாவ
மூலகா ரணம தாய முக்குற்றம் போலுண் டானுர். 1

பேருக மனேக மெண்ணில்
பெரும்புவி யண்ட மாண்ட
தாருக னுயிர்கூற் றுண்ணச்
சட்டகங் கடைவாய் பெய்நெய்த்
தோருக வயிலிற் செவ்வே
டொலைத்தபின் மூவ ரும்பங்
கேருக விறையை நோக்கிக்
கெடலருந் தவமு யன்றுர். 2

துய்த்தலற் றளவில் காலந்
துயரொடு நோற்று மேனி
யெய்த்தவர்க் கருள வன்ன
முடனிருங் கரகத் தெண்ணீர்
கைத்தலந் தன்னிற் கொண்டு
கமலபீ டிகையி னேயம்
வைத்தமர்ந் துலக மாக்கும்
வள்ளன்முன் வந்து நின்றான்.

நின்றலு மதனைக் காணு
நிலமுறப் பணிந்தெ ழுந்து
வன்றிற லவுணர் போற்ற
மான்மக னுவகை யெய்தி
யென்றனை நினைந்து நோற்ற
தேதுளம் விரும்பி நீவிர்
நன்றுற மொழிமி னென்ன
வஞ்சலி நவிற்றிச் சொல்வார்.

மூவுல கத்து மொன்ற
மூவெயி லளிக்க வேண்டு
மூவரு மவனு றைந்து
முடிவிலா வுகங்க ளாண்டு
மேவலர்ச் செருக்க வேண்டும்
பத்துநூ றுண்டிற் கோர்கான்
மேவுற வெயில்கண் மூன்றுங்
கூடவும் வேண்டு மன்றே.

இன்னமு மொன்றுண் டைய
வெந்தமக் கிறுதி நாளுண்
டென்னினு மொருவ னேநின்
றெளிதினி லாட லேபோற்
றன்னொரு கணையா லெம்மை
யொருங்குறத் தடிவ தல்லாற்
பின்னொரு செயலான் வெல்லாப்
பெருமையும் வேண்டு மென்றார். 6

அன்னவர் மொழியைக் கேளா வம்புய னற்ற கென்று
தன்னருள் புரிந்து போனன் றயித்தியர் நிற்ப வங்க
னுன்னத மகற்சி நூறி யோசனை யாமூன் றிஞ்சி
பொன்னயம் வெள்ளி தன்னாற் பொற்புட னைன வன்றே. 7

ஓதிம ஞணை தன்ஞ லுயர்வினுக் கேற்ற வாறு
மேதினி தனிலயத்து மிளிர்மதி லந்த ரத்துச்
சோதிகொள் வெள்ளி யிஞ்சி துறக்கத்தா டகத்தி னுய
மூதெயி லுறவ வற்றை மூவரு முறையிற் கொண்டார். 8

கொண்டவ ரேவ வாங்குக் கோபுரங் கோயி றெற்றி
மண்டப மவுண வெள்ள மருவிடந் துரக சாலை
விண்டொடு சேவ கம்பொன் வீதியா வணஞ்செய் குன்று
தண்டலை வாவி யாதி தந்தனன் மயனென் கின்றன். 9

அவ்வள மனைத்து நோக்கி யவுணர்க ளுவகை பூத்துச்
செவ்விது நங்கட் கிந்தச் செழும்புர மெனவி ருப்ப
வெவ்வமில் கலைக டேர்ந்த விருந்தவ மயனென் றுள்ளோன்
றெவ்வடு புயவீரர்க்கோ ருறுதியைத்தெருட்டுகின்றன். 10

### வேறு

செல்வமும் பதாதியுஞ் செறுநர் தங்களை
வெல்வதும் வீரமும் புகழு மேன்மையுங்
கல்வியும் புதல்வருங் கதியும் வேண்டுந
ரெல்வரு மிலிங்கபூ சனையி யற்றுவார். 11

அல்லலும் பழிகளும் பகையு மச்சமுஞ்
செல்லலும் பிணிகளுஞ் செயிறு நிந்தைகள்
சொல்லலு மிடியும்வெஞ் சோக மோகங்கள்
புல்லலு மிலிங்கபூ சனையிற் போகுமால். 12

அங்கையி னடங்குநீ ரிலிங்கத் தாட்டியே
யெங்கணு முடையபச் சிலையொன் றிட்டுமால்
பங்கய னடிதொழும் பரனைப் பூசியா
மங்குறு பவர்கடம் மடமென் சொல்லுவாம். 13

எய்திவாழ் வொடுஞ்சில ரிருப்பக் கண்டுமுன்
செய்தபூ சாபல மென்னச் செப்புவார்
மெய்தவ விலிங்கபூ சனைவி ரும்பியே
செய்திடா துழன்றிடுஞ் செய்கையென் சொல்வாம். 14

இருள்புரி பவமகன் றின்ப மெய்திட
வருள்புரி யிலிங்கபூ சனையை யாற்றிடா
மருள்புரி மனத்தினோர் மருவுந் தீயுடல்
சுருள்புரி சுணங்கன்வாற் றேற்றம் போலுமால். 15

பரசிவ லிங்கமெய் வடிவிற் பட்டிட
விரைமல ரொன்றறி யாமல் வீசிய
நரர்களே யிந்திர னுமங் கொண்டு போய்ச்
சுரர்தொழ வனுதினந் துறக்க மேவுவார். 16

வீழ்ந்தது வளைந்தது மிஞிறு தான்விழப்
போழ்ந்தது பழையது புலர்ந்த தேமயிர்
சூழ்ந்தது களைந்தொரு தூய பூமனம்
வாழ்ந்தரன் முடியிடின் மரித்து தித்திடார். 17

பொலக்கடி மலர்களாற் சிவனைப் பூசியா
வலக்கயி றெறிதரு மறலி தன்னையுங்
கலக்கமி லறிவன்மார்க் கண்டன் வென்றுமுன்
விலக்கரும் விதியையும் விலக்கி ஞனரோ. 18

வேண்டிய பொருளெலாம் வேண்டி யாங்குறக்
காண்டகு நீறுடற் புனைந்து கண்டிகை
பூண்டிலிங் கார்ச்சனை புரிமி னென்றன
னேண்டரு மயனெனு மிணையில் சூழ்ச்சியான். 19

அன்னவ னறைந்தசொல் லவுணத் தீயர்கேட்
டுன்னரு மிலிங்கபூ சனையு ஞற்றிடு
நன்னல மடைந்தனர் நஞ்சு கான்றிடும்
பன்னக மணியையும் பரிக்கு மாறுபோல். 20

அன்னதின் பின்னரவ் வவுணர் மாதிர
மன்னரை யமரரை மற்று ளோர்தமைத்
துன்னிய வலியினுற் கேடு சூழ்ந்தொறுத்
தின்னலுற் றிடப்பிடித் தேவல் கொண்டனர். 21

கான்றிடு மெரிவிழிக் கடிய மூவருந்
தோன்றிடு முயிரெலாந் துயரின் மூழ்குற
மூன்றெனு முலகங்கண் முற்றும் வெற்றிகொண்
டான்றதம் மாணையே நிறுவி யாண்டனர். 22

புரந்தர னவுணர்செய் புன்மை யாற்றிடா
தரந்தையின் விரைந்தயி ராணி யைக்கொடு
வருந்திமை யோரொடு மருவி மேருவிற்
கரந்தன னிருந்தனன் கணிப்பில் காலமே. 23

சிறந்திடு மிந்திரன் றிருவும் பொன்றியே
மறைந்துதன் மனையொடு வறியன் போய்மலை
யுறைந்தன னென்றிடி னெருங்கு முற்றவுந்
துறந்திடு மின்பமே துன்ப மில்லதே. 24

வெங்கொடி வருத்துற வெருவிக் கூகைக
டங்கள்வன் காலம்பார்த் தொளித்துத் தங்கல்போற்
சிங்குற வவுணரைச் செறுக்கு நாடெரிந்
தங்குறு மமரர்க ளரையற் கோதுவார். 25

பொய்வகை யவுணர்கள் புரியும் வெந்துய
ரெவ்வகை யகலுமென் றிதயத் தெண்ணிநீ
யவ்வகை முயன்றிலை வறித மர்ந்தனை
யுய்வகை யடியரே முஞற்ற வல்லமோ. 26

என்றிமை யவர்பரிந் தியம்ப விந்திரன்
பொன்றிகழ் சரோருகப் பொகுட்டு வள்ளற்பாற்
சென்றுநந் துயரெலாந் தீர்த்தி மையநீ
யென்றுநாம் வேண்டுதும் வம்மி னென்றனன். 27

வேறு

அம்மொழி துன்பங் கூரிமை யோர்கேட் டார்வத்தா
லெம்மிடர் போயிற் றினறுட னென்ன வெழுந்தெய்த
மும்மதி லோர்கட் கஞ்சியொ ளித்தே முகிலூருஞ்
செம்ம னறுங்கம லத்திறை தன்னுழி சென்றுற்றுன். 28

உற்றவ னும்ப ருடன்சர ணத்தி லுறத்தாழுஉ
நற்றுதி யோடுந லிந்தவ ணிற்ப நறுங்கஞ்சப்
பொற்றவி சண்ண றெரிந்து முகங்கள் புலர்ந்துள்ளீர்
சொற்றிடு நெஞ்சி லடுத்தக லாதுறு துன்பென்ருன். 29

**வேறு**

என்றலு மகவான் சொல்வா
னிறைவநின் னருளி ஞேன்மை
யன்றுறு மவுண ரெம்மை
யலைப்பநைந் துள்ள மாழ்கி
மின்றிகழ் முகில்கண் டஞ்சும்
வியன்சிறைக் குயிலிற் பொன்னங்
குன்றிடை யின்று காறுங்
குறுகினேங் கரந்து மன்னே. 30

துன்னிய வசுரர் தம்மைத்
தொலைத்தினி யெமைப்பு ரப்பான்
பன்னுது மெனவந் துற்றேம்
பாரதி யுடைய நீயே
பின்னலங் கடல்க டத்தி
னன்றியா ரியற்ற வல்லார்
கின்னருள் புரிதி யென்னச்
சதுர்முக னிகழ்த்து கின்ருன். 31

புரத்தினென் றவுணர் மிக்க
பொருவலி யெம்மா னீக்குந்
தரத்ததன் றடைகண் மூய
தடத்தலர்ந் திலங்கு கின்ற

விரைத்ததண் குவளை யன்ன
விழியுடற் கடவு ளுந்தங்
கருத்துவெந் துயர மெல்லாங்
களைகுவன் கமலக் கண்ணன். 32

என்றய னிந்தி ராதி
யிமையவர்க் கொண்டு மால்பாற்
சென்றடி வணங்கி யன்னோர்
திருவிழந் தவுணர் தம்மால்
வன்றுய ருழக்கு மாறு
மனமுளைந் தியம்பித் தீய
புன்றொழி லசுரர்ச் சாடிப்
புரந்தருள் புனித வென்றான். 33

நாரண னதனைக் கேளா
நவிலும்பற் றலர்க டம்மைப்
போரினி லுபசத் துக்கள்
பொருதழித் திடுவ ரென்ன
வாரண முரைத்த றன்று
லனையரை விடுத்து மூன்று
வீரரு மடியச் செய்தும்
விரையவென் றிதனைச் செய்வான். 34

மனத்தினி லுபசத் துக்கள்
வருகவென் றுன்ன மாயோ
னினைத்தன னென்ன வன்னோர்
நேர்ந்தனர் நிற்ப நீவிர்

சினத்தெயி லவுணர் தம்மைச்
செற்றுவா னவர்க ளின்ன
லனைத்தையு மகற்று மென்றுன்
யடியளந் தளிக்கு மண்ணல். 35

அன்னவ ரதனைக் கேளாச்
செல்லுது மவுணர்ச் சாட
வென்னலு மகிழ்ந்து தன்பா
லிருங்கணந் தனிலெண் ணில்லார்
துன்னிய வனிக மாகத்
தூண்டினன் சென்மி னென்னப்
பன்னக சயனன் பொற்றுள்
பணிந்தனர் போயி ஞரால். 36

தண்டுவேல் வயிர வொள்வாள்
சரம்பொழி சாப மாழி
பிண்டிபா லங்கள் சூலம்
பேரெழுக் கணிச்சி யாதி
கொண்டபா ணிகளோ டண்டங்
குலுங்கவார்த் தெழுந்து வேக
சண்டமா ருதம்போ னேர்ந்து
சமர்த்தொழில் புரியச் சென்றுர். 37

பேரெயின் மீதி னேமிப்
பிரான்விடு தானை நீத்தம்
வாரிதி தன்னை நாடி
வருநதி போலச் செல்ல

வேருறு கடலெ திர்த்தா
லென்னவாண் டமருஞ் செங்கட்
காருட லவுணர் கேட்டுக்
கதுமெனச் சமரி னேர்ந்தார். 38

வில்லுமிழ் சரமுந் தண்டும்
வேல்களு மழுவும் வாளுங்
கல்லுற ழெழுவுந் தாளுங்
கரங்களுந் தலையுஞ் சிந்தச்
செல்லுமிழ் முகிலி னின்று
சிந்தின ரவுண ரன்ன
மல்லலம் படைக ளார்த்து
மற்றவர் தாமுந் தூர்த்தார். 39

இத்தகை யுடன்று வெம்போ
ரிருதிறத் தவரு மாற்ற
மத்தவெங் களிறு போலு
மறவருக் குலக முண்ட
வித்தகன் விடுத்த சேனை
வென்னிட வதனைக் காணு
வத்தலை நின்ற வானோ
ரலக்கணுற் றோடி வந்தார். 40

வந்தவ ருயங்கி மாயோன்
மலரடித் தலத்து வீழ்ந்து
சுந்தர வரவிற் றுஞ்சுந்
தோன்றனீ விடுப்பப் போனோர்

வெந்திற லவுண ரோடும்
போர்த்தொழில் விளைத்து வன்மை
சிந்தின ரிரியல் போனார்
செயுஞ்செய லினியா தென்றார். 41

மாயவன் வினவி யுள்ள
மாழ்கிவெய் துயிர்த்து வன்கட்
டயவர் சிவலிங் கத்தை
யருச்சனைச் செயலால் யாவ
ராயினும் வெல்லற் கொண்ணா
வெனநினைந் தழுங்கி நிற்குஞ்
சேயுயர் விசும்பி ருக்குந்
தேவரை நோக்கிச் சொல்வான். 42

வேறு

பன்ன கத்தினா லடுஞ்சின விலங்கினாற் பசாசாற்
றுன்ன வக்கிர கங்களாற் பிணிகளின் றொடர்பான்
மன்ன ரிற்கொடி யோர்களாற் கரவரான் மருவு
மின்னன் மெய்ச்சிவ லிங்கபூ சனையினோர்க் கியையா. 43

பாவ கோடிகள் பயின்றிடு பதகரே யெனினுந்
தேவ தேவனைச் சிவலிங்கத் தருச்சனை செய்வோர்
தாவின் மாதவப் புண்ணிய ரேயவர் தம்பான்
மேவு வானல னந்தகன் றனதுளம் வெருவி. 44

ஆத லாலெயின் மூன்றுடை யவுணர்தா மரனைப்
பூதி சாதனம் புனைந்துபூ சனைசெயு மளவும்
யாது மோர்செய லான்முடி வெய்தில ரியாமோர்
போத சூழ்ச்சியி னவரருச் சனைவிடப் புரிதும். 45

நீங்கு நும்மனத் துயர்சுரர் காளென நிகழ்த்தி
யோங்கு மாமர கதக்கிரி யொன்றிரு சுடரும்
பாங்கு வைத்தெனக் குருமணி யாழிவெண் பணிலந்
தாங்கு மாயவ னரதற் கினையன சாற்றும். 46

## வேறு

அற்புடை மகிணர்தம் மாவி யாகிய
கற்புடை மங்கையர் கருதிற் பல்வகைப்
பொற்புடை யுலகெலாம் பொன்று மாறுமாம்
வற்புடை முனிவரின் வலீய ரன்னரே. 47

கணவரைத் தொழப்படுங் கடவு ளென்றுளும்
பணவர வல்குலார் பணித்த தொன்றையான்
மணமலர்த் தவிசயன் மகிழ்ந்தி ழைத்தலோ
விணையிலெங் கருத்தனு மிறையுஞ் செய்யுமால். 48

புனிதமெய்க் கற்பரூப் பொருவின் மாதரார்
மனமகிழ் வுற்றிடின் வராத நன்கிலை
சினமுறப் பெற்றிடிற் றீங்கு மன்னதே
யனையவர் தன்மையா ரறியக் கூறுவார். 49

மிடியினர் குணமிலர் விருத்தர் நோயினர்
வடிவில ருறுப்பிலா வஞ்சர் மூடர்வெங்
கொடியவ ராயினுங் கொழுநர் தம்மிடை
மடிவில ரன்புகற் புடைய மாதரே. 50

இத்திறக் கற்பின ரெயில்கண் மூன்றுடைக்
குத்திரக் கொடியவர்க் குறுகு மாதரா
ரத்திறத் தினுமடற் கரிய ரன்னகற்
பெத்திறத் தினுமொழித் தெய்தென் றேவினன். 51

நாரண னிவைசொல நாரதப்பெய
சாரண முனிவர னரும்பு ணர்ப்பினால்
வாரண மனையவர் மாதர் கற்பெலாங்
காரண வகற்றுவன் கடிதென் றேகினன். 52

## வேறு

முனிசென் றதற்பி னிமையோர் துவன்று
மலையுற்ற மாயை முதல்வன்
றனியங் கெழுந்து புரவாணர் தங்கள்
சிவலிங்க பூசை தவிரும்
வினையொன் றிழைப்ப லெனவே நினைந்து
மறைகட்கு வேறு தருநூன்
மனமொன்றும் வண்ண முரைசெய்து புத்த
வடிவோடு கொண்டு வருவான். 53

மறமொன்று கின்ற வரணங்க டம்மின்
வருமம்பு யக்க ணிறைவன்
றிறமொன்று புத்தனருகன் றயங்கு
சினனென்ன வங்க ணடையா
வறமென்று வஞ்ச மதிநூன் மருட்டி
யறைகின்ற காலை யவுணர்
நிறமொன்று பூதி மணியோ டிலிங்க
நிலைவிட்ட கன்ற னரரோ. 54

விதியென்று மாயன் வினயத் துரைத்த
வெறும்வஞ்ச நூலின் விதியைக்
கதியென்று கொண்டு மனமா லடைந்து
கதியற்ற தீய கயவர்

நிதியென்று கொண்ட திருநீ றிழந்த
நிலைபா முடம்பு நிலவு
மதிநின்று சென்று மறைகா லிருண்டு
வளமற்ற கங்குல் புரையும். 55

புரமொன்று தீயா மடமாத ராரு
முனம்வந்து புக்க முனிவன்
விரகங் கலந்து மிகுதிட்ப நெஞ்சி
னிகழும் படிக்கு வினயந்
தருகின்ற சொல்லின் மயல்செய்ய வும்பர்
தமபுண்ணி யத்தின் வலியின்
றிரமொன்று கற்பு நிலைபோ யகன்று
தெறுகாம முற்று மெலிய. 56

வேறு

இனிமாய் குவர்தா னவரின் றெடொ
முனிமா தவனுர் வமுகிழ்க் கவரா
நனிமா யையி னுயிடை நண்ணியவா
றுனிமா கருவப் பவுரைத் தனரால். 57

அக்கா லயினு ரணனஞ் சரண
முக்கால் வலம்வந்து முடிக் கணியா
நக்கா டுவர்பா டுவர்நம் பகைஞ
ருக்கா ரெனவுண் மகிழும் பரெலாம். 58

அம்மா கருவப் பரிகண் டருளி
நும்மா குலமுற் றையுநூ றிடவெம்
பெம்மா னெடுபே சுதும்வம் மினெனு
வெம்மான் மலையெய் துவன்யா வரொடும். 59

அங்கா ரணன்வா னவரா குலமென்
றன்று யகனெண் சரணந் தொழுது
சொன்று லஃதின் றுதொலைப் பனெனு
வுன்று வரும்வெற் பணியோ தியிடின். 60

**வேறு**

பண்டு தற்கம் பரித்த பரமனை
மண்டு தன்றலை வைப்பத் தவத்திரல்
விண்ட லந்தொட வெண்மதி பேருருக்
கொண்டெ ழுந்தென நின்றதக் குன்றமே. 61

வருண மிக்கபால் வாரிதி சிற்கன
புரண னுக்குமோர் பொற்றவி சாவுனித்
திரண மொத்த திருவன லாமையாற்
பரிண மித்தெழும் பண்பன தவ்வரை. 62

இத்தி றத்தி னிலங்கு கயிலையாம்
வித்த கத்தனி வெற்புழி யிந்திரை
யத்த னும்பர் குழுவொடு மஞ்சலிக்
கைத்த லந்தலை காட்டின னேகினன். 63

எண்ணி கந்த விருங்கண மேத்துற
வண்ண னந்திரு நந்திய மர்ந்தருள்
வண்ண வொண்கடை வந்தவ னைத்தொழாக்
கண்ண னின்றிது கட்டுரைக் கின்றனன். 64

சென்று தெய்வ சிகாமணிக் கிங்ஙன்யா
மொன்றும் வண்ண முரைத்தரு ளையநீ
யென்று கண்ண னியம்ப வருளியே
நன்று நின்மெனப் போயின னந்தியே. 65

அளவி லொண்புவ னுதிபர் பல்கண
மளவி னன்முனி வோர்நிறை வாமவை
யளவில் சோதி யவிர்மணிப் பீடம்வா
ழளவில் பேரரு ளாளிமுன் னெய்தினன். 66

எந்தை தாண்முன் னிறைஞ்சி மலரய
னிந்தி ராதி யிமையவர் சுற்றமால்
வந்து ளான்மணி வாய்தலி னென்றலு
நந்தி கூவுதி யென்றன னையகன். 67

இறையி னிற்கடை யெய்தி யுமைப்பர
னுறவ ழைத்தியென் றேதினன் வம்மெனச்
சிதைவி டுத்ததெண் ணீரென வோடினர்
நிறைம கிழ்ச்சி நெடியவ னுதியோர். 68

மின்னு லாஞ்சடை வித்தக னெற்பெறு
மன்னை யோடு மமர்ந்த வவைக்களந்
தன்னி னேகிமுன் சாயும் பணைமர
மென்ன வேபணிந் தன்பி னெழுந்தனர். 69

கூர்ந்த வன்பிற் குவித்தகை யுச்சிகொண்
டோர்ந்த சொற்றளர் வுற்று மனனெக
வார்ந்த கட்புனன் மார்பு நிரம்பமெய்
சோர்ந்து நின்று துதித்திடன் மேயினர். 70

நிறைந்தநின் றெல்லை யுண்மை
நிலைதிரி வின்றி யாங்கள்
பிறந்திறந் திடுத றீர்ப்பான்
பேரரு ளுருவு கொண்டிங்

குறைந்தநின் கருணை போற்றி
யுயிர்க்குட லளித்தி யக்கிச்
செறிந்தமுன் வினைய றுத்தித்
தீர்த்திடும் பரிவு போற்றி. 71

உலகுயி ரின்பந் துய்ப்ப
வுனதுபே ரருளே மாதென்
றிலகுற விடத்தி ருத்தி
யிருந்திடுங் கருணை போற்றி
விலகியவ் வின்பஞ் சில்லோர்
விடுக்கவவ் வுருவு கன்ற
வலகினல் லருள் கொண்டுற்ற
வமலவக் கருணை போற்றி. 72

ஐம்பெரும் பூத மாதி
யாயதத் துவசா லங்க
டம்பெரு கறிவொ டுக்குந்
தனியிருண் மலம் வேறாக
நம்பநின் னருளி னின்ற
நற்றவர் தம்மின் வேரு
யிம்பரி னறிந்து கூடா
திருந்தவா றிருப்போய் போற்றி. 73

அருவுநல் லுருவு மற்றை
யருவுரு வதுவு மாகப்
பரவுமொன் பதிற்றுப் பேதப்
பகுதியுஞ் சத்தி யைந்தின்

விரிவுமன் ருய வுன்றன்
மேனிலை தமதே யாகப்
பொருவரு மன்பர்க காக்கும்
பொருவிடைப் பாக போற்றி. 74

இனையன பகர்ந்து போற்ற
வெங்கணு யகன்மு ராரி
தனையருள் கொண்டு நோக்கிச்
சததளக் கமலக் கோயின்
வனிதையங் குவட்டுக் கொங்கை
முகடுழும் வயிரத் தோளாய்
துனியுறு மமர ரோடும்
வந்ததென் சொன்னீ யென்ருன். 75

என்றலுந் திகிரிப் புத்தே
ளியம்புவ னைய விண்ணோர்
வன்றிற லெயில்கண் மூன்றும்
மலரயன் றரப்பெற் றுள்ள
புன்ருெழி லவுண ரின்னல்
புரியநொந் தரைய ேைடு
மின்றள வெல்லை காணு
விருந்துயர்க் கடலி ஞழ்ந்தார். 76

கருணையங் கடனீ விண்ணோர்
கலங்கஞர் விடுத்து நின்பொற்
சரணபங் கயங்கட் கேவல்
சந்தத மியற்றும் வண்ண

மரணவெங் கொடியோ ராற்ற
லழித்தருள் புரிதி யென்ன
வருணகுங் குமப்பு யத்து
மாயவன வழங்கி நின்றான். 77

படைக்கல மைந்து பெற்றேன்
பகர்ந்திவை நிற்கு மெல்லை
தொடைக்கலன் பயிலும் பொற்றோட்
சதமகன் சுரர்க ளோடு
புடைக்கலஞ் சுழலுங் காகம்
போன்றனந் தமியே முந்த
னடைக்கலங் கருணை செய்யென்
றமலநா யகற்ப ணிந்தான். 78

வானுளோர் மனத்து மிக்க
வன்றுய ரகற்ற வுன்னி
ஞானநா யகன கைத்து
நாமெழுந் தருளி வந்து
மானவே லவுணர் தம்மை
மாய்க்குது மதற்கு நம்பா
லானபோர்க் கருவி யில்லென்
றறைந்தன னருளின் மாதோ. 79

கண்ணுத லுரைத்த தன்மை
கடவுளர் கேட்டு வப்பா
லெண்ணரு முலக மெல்லா
மிமைப்பினிற் படைத்த ளித்து

நண்ணுற வொடுக்கு மண்ண
னவின்றதோ ராட லென்னப்
பண்ணமை தங்க டச்சற்
பார்த்திது பகர லுற்றார். 80

பெருந்தகைக் கேற்ற வையம்
பெருமிதம் பெறச்செய் யென்ன
விரைந்துநற் புவிதே ராழி
யிருசுடர் வேதம் வாமா
னருந்திறற் கமலன் பாகன்
மேருவில் லனந்த னாரி
சரந்தழல் சசிமா லாகச்
சமைத்தனன் றெய்வத் தச்சன். 81

விண்ணவ ரவைகண் டார்வ
மிக்கெழு மனத்த ராகி
யண்ணலை வணங்கி நின்ற
னருளினா மிவைகொண் டாதிப்
பண்ணவ வமல முக்கட்
பராபர வெமைய ணக்கு
நண்ணலர் தமைமு ருக்கி
நங்களைப் புரத்தி யென்றார். 82

சங்கர னதுகேட் டெங்க
டாயுட னெழுந்து துன்றி
யங்குறு மனைவ ருஞ்சூழ்ந்
தன்பினிற் சயச யென்னப்

பங்கய வடிம ணிப்பொற்
பாதுகை மிசையி ருத்திப்
பொங்கொளி விரிக்குங் கோயிற்
புறத்தெழுந் தருளி னுல். 83

ஆண்டுறு திகிரிப் பொற்றே
ரணிநலந் திருக்கண் சாத்தி
யேண்டரு மலைமா தோடு
மிவர்ந்துகூர்ங் கணையு மற்றை
மாண்டரு தனுவுஞ் செங்கேழ்
மரைமலர்க் கரங்கள் பற்றிக்
காண்டரு மழகெ றிப்ப
நின்றனன் கருணை வள்ளல். 84

மருவுலாங் குவளை வென்று
வண்கயன் மருட்டி நீள்கா
துருவவோ டரித்த டங்க
ணுமைமணம் புணருங் கோமான்
பொருவிறேள் கண்டு மிக்க
பொலிவுபெற் றிருந்த மேரு
வருவினு ணடைந்து சரல
வன்றலை வளைந்த தம்மா ! 85

தன்மனை யிரத மாகத்
தன்மகன் வலவ னுகத்
தன்மகன் பேர னேடு
தனக்குமைத் துனன்கா லாகத்

தன்மல ரணைநா ளுகத்
தானெடும் பகழி யானுன்
றன்மன மிடங்கொண் டுற்ற
சங்கரன் றனக்கு மாயன். 86

இளங்கதிர் விரிக்குங் கோடி
யிரவியோ ருருவங் கொண்டு
வளங்கெழு மிரத மொன்றின்
வந்தென நிற்க வையன்
களங்கமி லமரர் கண்கள்
களிப்பக்கண் டுவகை யெய்தி
யுளங்கவ லொருவி விண்ணின்
ஒருண்மலர் மாரி தூர்த்தார். 87

பாடினர் பரமன் சீர்த்தி
பாதபங் கயங்கள் சென்னி
சூடின ரெழுந்து துள்ளித்
தொடைபுடைத் தனர்து ணங்கை
யாடினர் துகிலெ றிந்து
பற்றின ராசை தோறு
மோடின ருவகை யென்னு
முததியிற் படிந்த விண்ணோர். 88

மன்னுதன் னிலைபி ரிந்த
மயிரென விகழ்வி லாதென்
றன்னைநன் புனித மாக்கிச
சகம்புகழ் சிறப்ப ளித்தான்

மின்னுசெஞ் சடையோ னென்னு
மிகுமுவப் பெய்தி யாட
லென்னநின் றிரும ருங்கு
மிரட்டினர் கவரிபல் லோர். 89

மாசுணம் பலவ ளப்பில்
வண்கதிர் கவ்வி யெங்க
ளீசன துருநா கங்கட்
கீந்திட நீட்டி வாங்கி
மோசம திழைக்க லுற்ற
முறைமையெம் மருங்கு நின்று
வீசின ரெண்ணி லார்கண்
மிளிருநெட் டால வட்டம். 90

திங்களா யிரமொ ருங்கு
சேர்ந்தென வாய்க டோறுஞ்
சங்கமா யிரம்வைத் தார்த்தான்
சயங்கெழு பானு கம்பன்
பொங்கொலி முழவம் பேரி
பொருவில்சச் சரித டாரி
யெங்கணு மெண்ணி லோாக
ளிரட்டின ரிடிக ளேபோல். 91

அறிவுரு வானோன் வந்தா
னன்பினிற் றிகழ்வோன் வந்தான்
பிறவிவே ரறுப்போன் வந்தான்
பேரருண் மூர்த்தி வந்தான்

குறைவிலா னந்த ஞானக்
கூத்துடை யாளி வந்தான்
கரையுலா மிடற்றேன் வந்தா
னென்றெழுங் காக ளங்கள். 92

நஞ்சுகு மெயிற்றுப் பேழ்வாய்
நாகம தணிந்த வெங்கோன்
வெஞ்சமர் புரியச் செல்வன்
மேருவிற் பிடித்தென் றிட்ட
கஞ்சுகங் கிழிய வீங்கக்
கல்லுறழ் குவவுத் திண்டோ
ணெஞ்சுகு முவகை விம்மப்
பாரிட நீத்தஞ் சூழ்ந்த. 93

வெள்ளிவெண் கொடுவாண் மாறி
வைத்தென விளங்கும் பல்ல
பள்ளவெம் பிலனி கர்த்த
வாயின பருப்ப தத்தி
னுள்ளூறு முழைக ளன்ன
வுட்டுளைப் பெருந்துண் டத்த
மெள்ளவின் சொற்பு விக்கண்
விழுமிடி போலச் சொல்வ. 94

மண்டல வாடி யென்ன
வயங்கெரி சிதறுண் கண்ண
வொண்டழ னிமிர்ந்தெ ழுந்த
தொத்தகுஞ் சியின விந்த

வண்டம திடினு மாற்ரு
வகட்டின குறுகுந் தாள
பண்டுள பூத மைந்தும்
படைத்தளித் தழிக்க வல்ல. 95

அத்தனென் றன்னை நீயே
யவுணரைக் கொல்லெ ஞனே
வித்திர டனிலெற் கின்றி
யார்க்கமர் கிடைக்கு மோவென்
ஞெததவ ரடநான் பார்த்து
வறிதுறு குவனே வென்று
தத்தமி னினைந்து வாடுந்
தன்மைய பூத முற்றும். 96

விண்ணக நிறைந்த வாதி
விதியக நிறைந்த மாயோன்
கண்ணக நிறைந்த வோதைக்
கடலக நிறைந்த பாழி
மண்ணக நிறைந்த மேவி
வரையக நிறைந்த வெங்கும்
பண்ணக நிறைந்த வோசைப்
பரிசினிற் பனக ணங்கள். 97

குதிப்பன வயிரத் திணடோள்
கொட்டுவ தம்மைத் தாமே
துதிப்பன வமர்வேட் டண்ணற்
ரெழுவன தங்க ளாற்றன்

மதிப்பன வரைக ளைந்து
தாங்குவ வாரி யுட்க
வதிர்ப்பன மகிழ்வ வாகி
யடற்கணஞ் சென்ற வம்மா. 98

கற்புயங் கொட்டி யண்ட
கடாகமு மதிர வார்த்து
வற்புறும் பூத வெள்ளம்
வந்திட வும்ப ரெண்ணில்
பொற்புறு கவிகை யோங்கிப்
புணரிக ளேழு மார்ப்பப்
பற்பல மதியெ ழுந்த
பரிசென நிகழ்ந்த மாதோ. 99

பொன்னுல கிகழு மென்னைப்
பொருவனென் றகிலம் போவ
தென்னநுண் டுகள்சென் றேற
வெதிர்த்தது மலைத லொப்பத்
துன்னுறு மமரர் தம்பொற்
சுண்ணம்வந் துடன்க லப்ப
மின்னுறுங் கொடிய டித்து
விலக்குவ போல வாடும். 100

## வேறு

இந்த வாறெழும் பூதவெள் ளங்களி னிடையே
யந்தி வானிற மனையவ ளுழியந் தடந்தேர்
கந்த வாரிசப் பண்ணவன் றென்றிசைக் கடவ
வந்த வானவ ரனைவருந் துவன்றுற வந்தான். 101

பூத நாயகன் கயிலையம் பொருப்புவிட் டலகில்
காத மோரிறைப் பொழுதினிற் கடந்துவந் தருளிச்
சீத வார்பொழிற் கூவமென் றிருநக ரடைந்தான்
பாத தாமரை வணங்கிவிண் ணவர்குழாம் பரவ. 102

அங்கப் போதினிற் கடமெனுந் திருவரு ளருத
துங்கப் போதக முகப்பிரா னிதழியந் தொடையோன்
றங்கப் போதிர தத்திுர் தன்புழைக் கரத்தாற்
சிங்கப் போயொடித் திட்டனன் றிடுக்கிட வெவரும். 103

பொருக்கெ னச்சின விடையுருக் கொண்டிடை புகுந்தா
னிரைக்கு நற்கொடி வையம்வென் றுங்கின னெடும்பாம்
பரைக்க சைத்தவ னன்பினி னிகரிலா தமரர்
வருக்க முற்றும்வந் திறைஞ்சுபொற் பதாம்புயமாயன். 104

தந்தை யுற்றரு ளிரதகூ வரத்தினைத் தனயன்
வந்தி றுத்தலு மிமையவர் மனம்பதைத் தின்னன்
முந்தை யிற்பதின் மடங்குறீஇ முகத்தறைந் தழலுற்
றெந்த மொட்டலர் செயலெனத் திசைதொறு மிரிந்தார்.

அருளு லாந்திரு முகங்களோ ராறுமொள் ளலங்கல்
புரளு மார்பமும் புயங்களு மருமறைப் பொருளாய்த்
தெருளு லாம்பத மலருங்கொண் டெனதுளந் திகழ்வான்
வெருளு லாமனத் திரியல்போம் விண்ணவர்க் கண்டான்.

நின்மி னின்மினீ ரஞ்சலிர் நிகழுமென் றந்தை
பொன்மி ளிர்ந்திடு தேரினு ரொடித்தவர் புலவீ
ரென்முன் வந்திடுங் கரிமுகத் தண்ணலவ் வெயில்சேர்
வன்ம னம்பெறு மவரல வம்மினென் றழைத்தான். 107

மீண்டு வானவர் குகன்புடை யடைந்தினி வெம்போ
ராண்ட நாயகன் புரிவதெவ் வாறென வையம்
பூண்டு நின்றனர் நம்மிறை புதல்வன்முன் றனையாம்
வேண்டி வந்திர தம்புகா மையிலிது விளைத்தான். 108

என்று ளங்கொடு மலைமக ளீன்றருள் யானைக்
கன்றை வந்தனை செய்கிலார் முயறருங் கருமம்
பொன்று மென்பது காட்டிடக் கூவமா புரத்தி
லன்ற வன்கழல் கனிமுதல் கொண்டருச் சித்தான். 109

பின்பு விண்ணவர் மனத்துயர் பெயர்ந்திடத் தனது
முன்பு மும்மதில் வந்துற முன்னினன் முதல்வ
னன்பு கொண்டொரு நூறியோ சனையகன் மதில்க
டுன்பு பெற்றிட வனைவருந் துண்ணென வடைந்த. 110

கரிக ளோடுமா ருதந்தனின் விரைந்துபாய் கவனப்
பரிக ளோடும்விண் முகடுழும் படுமணி யிரதக்
கிரிக ளோடும்வெண் கனலினுங் கிளர்சினக் கழற்கா
லரிக ளோடும்வந் தமர்செய்வான் சமைந்தன ரவுணர்.

கண்டு மற்றது விண்ணவர் கலக்கமுற் றுயர்கோ
தண்டம் வைத்தலைச் சுடுசர மிடம்வலத் தடக்கை
கொண்டு நிற்பவற் குறுகிநல் வேலையீ தடுதற்
கெண்ட யித்தியர்ச் சமர்புரிந் தட்டரு ளென்றூர். 112

என்று விண்ணவ ரியம்பிய தெம்பிரான் வினவி
நன்றி னங்கையை நோக்கின னகைக்கவந் நகையி
னின்று வன்றழற் கொழுந்தொரு நிமிடத்திற் பாதி
சென்றெரு டுங்குமுன் புரங்களிற் சென்றுபற் றியதே. 113

பகவன் வாய்மலர் வைத்திருந் துமிழ்ந்தெனப் பற்றி
திகுதி கென்றெரிந் தெழுமழற் கொழுந்துசே ணளப்பத்
தகுவர் மென்புழு வெனப்பதை பதைத்துயிர் தணந்தார்
நிகரி னீறுபட் டிடாவுட னீறுபட் டனவே. 114

தேரெ ரிந்தன புரவிக ளெரிந்தன செழுங்கைக்
காரெ ரிந்தன சிகரமு மெரிந்தன கழகச்
சாரெ ரிந்தன பொழிலின மெரிந்தன தகுவ
ரூரெ ரிந்தன வெரிந்தன வடங்கலு மொருங்கு. 115

திருத்த மொன்றெயின் மூன்றுநெக் குருகுபு சிதைந்த
கருத்த ரென்றவ ணுறையுமுக் கயவரு மடைந்த
வரத்தி னின்றனர் மரித்திடா தளிவர மலர்ந்து
விரைத்த தண்பணை யிழந்துறும் வெறியபா தவம்போல்.

பகைஞ ரொன்றுமுப் புரங்களிற் செஞ்சடைப் பகவ
னகையி னின்றுசென் றுற்றதீ யிடத்தெழு நறிய
புகைப ரந்தகல் விசும்பிட மடங்கலும் போர்த்து
முகில்க ளென்றிடப் பட்டுநின் றனவின்று மொழியின்.

நெறித்த குஞ்சியந் தானவ ரெயில்களி னிமல
னெறித்த வெண்ணிலா நகையினின் றெழுந்தபேரெரிசென்
றுறைத்து வெள்ளிமா மதில்கரைந் துருகுழிச் சிதறித்
தெறித்த போலும்விண் ணிடைச்செழுந் திங்களு முடுவும்.

பரிந்து தற்பதங் குறுகினர் பழையதீ வினைபோ
லெரிந்து முப்புரம் பொடிபட விறந்திடா துயிர்கொண்
டிருந்த வப்பெருங் கொடியரை யெம்பிரான் கண்டு
பொருந்து பொற்சிலை வாங்கினன் சிலீமுகம் பூட்டி. 119

குனித்த பொற்சிலை வலிகெழுங் குணவுரு வணையி
னுனித்த வப்புருக் கொண்டுநிற் கின்றநோ னரிக்குத்
தனித்த பொற்றிரு வாசிகை போன்றொளி தழைத்த
தினித்த சொற்கொடி யிடத்தினன் மலர்க்கர மிசைந்து.

பொருவிற் கொண்டிடு நெடுதுதிப் பகழியைப் புனிதன்
விரைவிற் சென்றவ ருயிர்குடித் திடுகென விடுத்தான்
மருவிக் குன்றென நின்றிடு மூவர்மார் பினும்பட்
டுருவிச் சென்றதப் புறத்தினி னொருகணப் பொழுதின்.

மீண்டு சங்கரன் வலக்கர மடைந்தது விசிக
மாண்டு புங்கமுன் பட்டபோ தவுணர்க ளலறிச்
சேணெடொ டும்படி துள்ளிவீழ்ந் துணாவுகள் சிதைந்து
மாண்டு போயின ரிமையவர் மனத்துயர் மாள. 122

அம்பு பட்டிடு மசுரர்கண் மார்பகப் புழையிற்
செம்பு னற்புறம் பெருக்கெடுத் திரைந்தலை திரைத்துக்
கம்ப முற்றெழுந் தோடின களேபர மலைப்பாற்
சம்பு பற்பல வாண்டிற்குண் டிரையெனச் சார்ந்த. 123

திருந்து தேவரும் பணிசெயத் திரிபுவனமுமாண்
டிருந்த மூவெயி லரக்கரு மிறந்துசெய் கடன்கள்
புரிந்து காணவு மொருவரற் றிகலனுய்ப் புரட்டி
யருநத வேகிடந தனரெனின் வாழ்வுவப் பறிவோ. 124

கதம்ப டைத்தபூ தர்க்கமர் கொடாதரன் கடிது
மதம்ப டைத்தவர் சாடிய தோதனம் வறியர்க்
கிதம்ப டைத்திடு குவமெனக் கொண்டுபோ யிற்பாற்
பதம்ப டைக்கிலம் போமெனப் பகர்ந்ததொத் ததுவே. 125

மருளை யொத்தன முப்புர மப்புர மருவு
மிருளை யொத்தன ரவுணரவ் விருளினை யிரிக்கு
மருளை யொத்தனன் முகுந்தனவ் வருளினை யுடைய
பொருளை யொத்தன னப்பொரு ளாகிய புராரி. 126

செப்பு ரம்பதித் தன்னமா துமைமுலை திளைக்குந்
துப்பு ரம்பெறு பராபரன் றூநகைக் கணையான்
முப்பு ரம்பொடி பட்டது முதல்வர்தம் முயிர்போ
யப்பு ரம்பொடி பட்டதுங் கண்டன ரமரர். 127

## வேறு

ஆர்த்தனர் முகிலினி மஞ்சப் பூமழை
தூர்த்தனர் மகிழ்ச்சியிற் றுணங்கை யாடிமெய்
வேர்த்தன ரருகுபோய் வெய்யர் மெய்களைப்
பார்த்தனர் குதித்தனர் பரமற் பாடினர். 128

சரமொடு குனிசிலை தாங்கி நின்றிடு
மொருவன தடிமல ருச்சி சூடினர்
கரையறு முவகையங் கடலி னாழ்ந்தனர்
பரவினர் கடவுளர் பகர்தன் மேயினர். 129

இங்கக ரதனிடை யிறைவ நின்மலர்ப்
பொன்னடி யருச்சனை புரிந்து வாழ்வுற
நின்னருள் புரிகென நிகழ்த்த வாயிடை
மன்னிய விலிங்கநல் வடிவ மாயினன். 130

ஆதலு மனமகிழ்ந் தமர ரிந்திரன்
மாதவ னயன்முனி வரர்கண் மஞ்சனம்
போதொடு சுடர்நறும் புகைகொண் டர்ச்சியா
வீதுட லெடுத்தபே றெனநின் றேத்தினர். 131

குலவுறு மரியவிற் கோலங் கொண்டுமுன்
னிலகுற நின்றதா லிலிங்க மாகியு
நலமரு ஞமம்விற் கோல நாதனென்
றுலகின ருரைசெய வமல னுற்றனன். 132

ஐங்கரக் கடவுள்வே லரசன் மாலயன்
புங்கவர்க் கிறையவன் புவனநாயகா
துங்கமெய்த் தவர்முதற் றுவன்றி ஞேரெலா
மெங்களுக் குறுமிட மிஃதென் றுற்றனர். 133

எழிறரு முமையொடு மெங்க ணயக
னெழிவற நிரந்தர முற்ற தன்மையாற்
பொழிறிகழ் கூவமா புரத்திற் கெங்கணு
மொழிதவ பெயரவி முத்த மாகுமால். 134

அலங்குறு மிதரகூ வரத்தை யாயிடை
வலங்கிளர் கிம்புரிக் கோட்டு மாமுக
னிலங்குறு புழைக்கரத் திறுத்த தன்மையா
னலங்கிளர் கூவர நாமம் பெற்றதே. 135

ஓவிலொண் பதிநடுக் கூவ மொப்பவே
மூவுல கங்களு முன்னி வந்தரோ
தாவிலின் பெய்துறு தன்மை யாலெழிற்
கூவமென் றொருபெயர் கொண்ட தந்நகர். 136

மேலைநா ளிழைந்த தீவினைகட் கெங்கள்விற்
கோலநா யகன்றிருக் கூவ முள்குத
லாலநா கங்களுக் கரும்புள் வேந்தினைத்
தாலமே னினைக்குறுந் தன்மை போலுமால். 137

என்றிவை பற்பல வியம்பி வண்டுழுங்
கொன்றையஞ் சடையினேன் கூவ மாநகர்ச்
சென்றடைந் தருங்கதி சேர்மி னென்றனன்
வன்றிறற் புலனெறி மறித்த சூதனே. 138

**குறிப்புரை :**—செய்யுள்–(2) தாரகன் என்பது எதுகை நோக்கித் தாருகன் என நின்றது. (19) காண் - அழகு. (25) சிங்கல் - அழிதல். (34) உபசத்து - ஒருவகை மந்திரங்கள்: இங்கே அவை அந்த மந்திரங்களின் அதிஷ்டான தேவதைகளை உணர்த்தி நின்றன. (54) விட்டுணு, புத்தன், அருகன், சினன் என்ன மூவுருக் கொண்டு முப்புரங்கட்கும் சென்றனர் என்பது கருத்து. (81) ஏனைப்புராணங்கள், தழல், வாயு, மால் என்னும் மூவரும் சரமாயினர் எனக் கூறினவேனும், இத்தலத்தின் வடமொழிப் புராணம், வாயுவைக் கூருது சசியையே கூறுகின்றது. (86) தன்மகன் பிரமன், அவன் மகன் காசிபன், அவன் மகன் சூரியன் ஆகலின், சூரியனைத் தன்மகன் பேரன் எனவும், திருப்பாற் கடலிற் சீதேவியோடு உதித்தமையால், சந்திரனைத் தனக்கு மைத்துனன் எனவும் விதந்தார்.

திரிபுரதகனச் சருக்கம் முற்றிற்று.

ஆகச் செய்யுள்—302.

---

# சந்தானகிரி சந்தானச் சருக்கம்

நைமிச முனிவர்கள் கூவநகர்ச் சிறப்பை மேலும் கேட்க விரும்பினர். சூதரும் சொல்லத் தொடங்கினர்.

திரிபுர மெரித்த பின், கூவநகரிற் திருவிற் கோலநாதர் தங்கியிருந்ததும், மற்றத் தேவர்களும் அன்புடன் அங்கேயே தங்கினர். அவர்களை நோக்கிப் பிரம தேவர், "திருமால் தமது சூழ்ச்சியினால் முப்புராதியர்களைச் சிவலிங்க பூசை தவிரச் செய்தபின் தான், தாமே சிவனார் வில்லில் அம்பாக இருந்து அவுணரை அழிக்கச் செய்தார். எனவே, சிவ பூசை செய்யும் வரையிலும் அதனைச் செய்பவர்கள் அறிவிலிகளாயினும் அவர்களை அழிக்க முடியாது. சிவ பூசையில்லாதவர் மாதவராயினும் அழிந்தொழிவர். அரனாரை மதியாது அகந்தை கொண்டு போரிட்ட திருமாலும் யானும் இந்நகரில் சிவலிங்க பூசை செய்தே அப்பாவத்தைப் போக்கிக் கொண்டோம். ஆதலால், நீங்களும் சிவலிங்க பூசை செய்யுங்கள்" என்றனர். அவ்வாறே தேவர்களும் தனித் தனியே இலிங்கந் தாபித்து வழிபட்டருளைப் பெற்றனர். அச் சிவலிங்க வடிவங்களில் நின்று இன்றும் பரமர் அருள் செய்கின்றார். "தன்னைத் தியானிப்பவர்க்குச் சந்தானகிரி சந்தானன் என்னும் அருட்குரு தோன்றிக் கூவநகரத்தார்க்குக் கருணையுடன் உபதேசித்துக் கதி பெறச் செய்வர்" என்றெல்லாம் சூதமா முனிவர் கூறியதும் தேவர்கள் அந்த அருட் குருவின் தன்மையை விளக்கிக் கூறவேண்டுமென்றனர். சூதமாமுனி சொல்கின்றார் :—

முன்னொரு காலத்தில் அரி, அயன், ஏனைய முனிவர்களும் சத்திநிபாதம் கைவரப் பெற்றுத் தம் உடலை வெறுத்து ஞானானந்தமுற நாட்டம் கொண்டனர். அவர்கள் கயிலைப்

பரமனை அணுகித் தமக்குப் பதிபசு பாசத்துண்மையை உபதேசித் தருளுக என்றனர். உடனே கண்ணுதலிறையும் திருக்கயிலையைச் சூழ்ந்துள்ள ஆமர்த்த கிரியில் ஆசிரியத் திருமேனி கொண்டெழுந்தருளி உபதேசித்தனர். பிரம தேவர்க்குப் புட்பகிரியிலும், இருடிகட்குக் கோளகிரியிலும் தேவர்கட்குச் சந்தான கிரியிலும் இருந்து உபதேசித்தனர். அம்மலையினால் பெருமானுக்கும் அப் பெயர் வழங்கியது. கூவநகரத்துள்ளார் தேவர்களாதலால் அவர்களுக்கு இறையவர் சந்தானகிரி சந்தானன் என்ற அருட் குரவனாக எக்காலத்துமிருந்து உபதேசிப்பார். எனவே, இத் தலத் திற்கு ஒப்பானது வேறில்லை'' என்றார் சூதமா முனிவர்.

சூதமுனி வரன்புகன்ற மொழிவினவி
யுலகமய றுரக்கு மேன்மை
மாதவாநெஞ் சுவகைபெறீஇக் கூவபுரத்
தியல்கேட்ப வளருமெங்கள்
காதலமை வுற்றதிலை புராணமுனி
யின்னுமுளங் கருணை கூர
வோதுகவென றுரைத்தனரவ் வுரைக்குமிகக்
களித்திதனை யுரைப்ப தானான். 1

அன்றுவிறற் கொடுமதில்க டழலெழப்புன்
முறுவல்புரிந் தசுரர்ச் சாடித்
தென்றிசைக்கூ வரநகரு னரசிங்கந்
தொழத்தேவ சிங்கம் வாழ்நாட்
டுன்றுதுயர்க் கடனீந்தி யார்வநெடுங்
கடற்படிந்த சுரரை நோக்கிப்
பொனறிகழ்நற் கமலமலர்த் தவிசின்வீற்
றிருக்குமிறை புகலு கின்றான். 2

வண்டுகிளைத் தொழுகுநறை மதுப்பருகி
யிசைகூரு மலர்மந் தாரத்
தண்டெரியற் புலவிாமிக வல்லவனிம்
மாயவனித் தலத்திற் சூழ்ச்சி
கொண்டுபகைப் பினர்கரவாட் போக்கிவதைப்
பதுபோலக் கொடியர் நீறு
கண்டிகைமெய்ச் சிவனுருவ மகற்றியரன்
கணையாகிக் கடிந்திட் டானல். 3

ஆதலினு லமலசிவ லிங்கபூ
சனைபுரிவோ ரறிவி கந்த
பாதகரே யெனினுமழி கிலரென்று
மஃதிலரிப் படியின் வல்ல
மாதவர்க ளெனினுமழி குவரென்று
மறிந்தனமான் மனம்வி ழைந்து
நீதிகொடு பரமசிவ பூசைபுரி
வோர்பெருமை நிகழ்த்தற் பாற்றே. 4

இம்மைமறு மைப்பயனு மறையின்முடி
தெருட்டுறுபே ரின்ப வீடு
மெய்ம்மைபெறத் தரவல்ல தச்சிவபூ
சனையன்றி வேறு முண்டோ ?
செம்மைமனத் திலிங்கபூ சனைபுரியா
தருங்கதியிற் செறியக் காத
றம்மனம்வைத் திடல்சிறகி லொருசிறுபுட
பறக்கவிழை தகைமை போலும். 5

திரையெறியுஞ் சடைக்கங்கைத் துளிதெறிப்ப
நனைந்தகுளிர் சிறுவெண் டிங்கள்
கரமலரி னிருந்தெழுசெங் கனற்கொழுந்திற்
காய்ந்தொழிக்குங் கடவு டன்னைப்

பரமனென வுணர்கிலா தனியனுமவ்
வரியுமாய்ப் பயின்ற தீமை
பொருவில்புகழ்க் கூவபுரத் திலிங்கபூ
சனைபுரிந்து போக்கி யுய்ந்தேம். 6

பூதிமணிக் கலன்புனைந்து சிவலிங்க
பூசனையைப் புரிந்தி டாதோர்
பாதகரிற் பாதகரெங் கட்கவர்கள்
புறமானோர் பகரி லென்று
மாதலிற்புங் கவர்நீவிர் சிவலிங்க
பூசனையை யகன்றி டாது
காதலிற்செய் திடுதிரெனப் புகன்றனரு
ரணமனைத்துங் கரைகண் டோனே. 7

அண்டரய னுரைத்தமொழி வினவிமன
மகிழ்ந்தவன்மெல் லடியிற் ருழ்ந்து
கொண்டறவழ் மணிமாடக் கூவபுரத்
திலிங்கவுருக் குலவச் செய்தே
மண்டுமனத் தன்பின்வழி பட்டனரச்
சிவலிங்க வடிவந் தோறும்
புண்டரிக வதட்டிருவிற் கோலநா
யகனின்று புரப்பன் மாதோ. 8

இத்தகைய வினையிறிருக் கூவபுரத்
தெவரேனு மெய்தி னம்ம
சுத்தபர ஞானமடைந் தரியசிவா
னந்தசுகந் துய்ப்பர் விண்ணோர்

மெய்த்ததவ மொருகோடி புரிந்துநர
வுருவாகி விமல னல்கு
மத்தலனி லவதரித்து வாழ்வரெனி
னதன்பெருமை யளக்கற் பாற்றே ? 9

தன்னைமனத் தமைத்தவர்க்கு மலமகற்றுஞ்
சந்தான கிரிசந் தான
னென்னுமருட் குரவனெழிற் கூவமா
நகரினிடை யிருக்கின் றோர்கட்
குன்னருநற் கருணையினி லுபதேசித்
திடவுலகி னெழிவி லின்ப
மன்னிமனக் களிப்பொடிருந் தழிவில்பர
கதியடைவின் மருவு வாரால். 10

என்றினைய சூதமுனி யிணையிறிருக்
கூவபுரத தியல்பு கூற
மன்றன்மலர்க் கரங்குவியா வருந்தவரெஞ்
செவிக்கமுதம் வழங்க வந்தோய்,
கொன்றைமலர்த் தொடைபுனையுஞ் சடாமகுடத்
தண்ணன்மகிழ் கூவ மூது
ரொன்றுமவர்க் கருள்புரியுங் குரவன்யா
ரியம்புகென வுரைப்ப தானுன். 11

வேறு

முன்னமோர் காலத் தாதி முகுந்தனு மயனும் பின்றாழ்
பின்னன்மா தவருஞ் செம்பொற் பிறழ்முடிச் சுரரு மீசன்
றன்னதாஞ் சத்தி பாதஞ் சார்தலா னுடல்வெ றுப்புற்
றுன்னரு ஞான னந்த முறுவதற் குவகை யுற்றார். 12

உற்றவர் கயிலை நண்ணி யுமையொரு பாகற் போற்றிச்
சிற்றறி வுடையேம் புன்மைச் சிறையுடற் பொறைதணந்து
பற்றறி வுருவ மாகப் பதிபசு பாசத் துண்மை
முற்றுமெங் கட்கு ணர்த்தி முதல்வநீ புரத்தி யென்றார். 13

என்றவ ரியம்ப வெங்கோ னெல்லையில் கருணை யெய்தி
நன்றெனக் கயிலை சூழ்ந்த நாற்பெருங் கிரிக டம்மு
ளன்றரி தனக்குச் சீர்சா லாமர்த்த கிரியி னுச்சி
யொன்றிநற் குரவ னாகி யுண்மையை யுணர்த்து கின்றான்.

ஆதியு நடுவு மீறு மருவமு முருவு மாகும்
பேதமு மளவு மின்றிப் பேரறி வுருவ மாகி
வேதமு முணர்வு மெட்டா விமலமாய் நிறைவ தாகிச்
சாதலும் பிறப்பு மற்றோர் தன்மையாம் பதியின் றன்மை. 15

மூலமா மலத்தா லன்றே மூயபே ரறிவ தாகிச்
சீலமா யையினாற் றோன்றுஞ் சிற்றறி வுடைய தாகி
மேலைநாள் வினையாற் றோற்றம் விளிவுடைத் தாகி வானம்
போலவே யடுத்த தாகிப் புணர்வது பசுவின் றன்மை. 16

ஆதியன் றாகி யொன்றா யளப்பருஞ் சத்தி யாகி
யோதரும் பலவா மாவி யுணர்வெலாந் தடுப்ப தாகிப்
பேதமி லருஞ்சிற் சத்தி பிறழ்தரு முயிர்க்கு நீங்கிப்
போதுமத் தன்மைத் தாகும் புகலிரு ளாண வந்தான். 17

சுத்தமோ டசுத்த மூலப் பகுதியென் றொடர்பு பெற்றுத்
தத்துவ மைந்தோ ரேழு தகுமிரு பத்து நான்கா
யித்தகை யிற்பி ரேரம் போக்கியம் போக மென்ன
முத்தகைக் காண்ட மாக வுதவிமும் மாயை நிற்கும். 18

மனமொழி மெய்யி யற்ற வருவதா யறம்பா வங்க
ளெனவிரு வகைத்தாய்ச் சஞ்சி தாதிமூன் றியல்பாய்ப் புத்தி
தனிலுறு நிலைய தாகித் தகையிற்றுய்த் தொழிப்ப தாகி
வினையெனும் பேர்பெற் றெருத்து விடுமிருங் கன்ம மன்றே.

என்றுமுப் பொருளின் றன்மை யியம்பியிம் மலங்க ளெல்லா
முன்றனக் கயலென் றோர்வித் தொழித்தறி வுருவ மாகி
நின்றநிற் பாரென் றுன்மா நிலையினை யுணர்த்தி மீது
வன்றுணை யாகி நின்ற மல்குதன் னருளைக் காட்டி. 20

சென்றுபுல் குறுவ தன்றிச் சேர்ந்துநிற் பதுவு மன்றி
யொன்றிரண் டென்ப தன்றி யுணர்வுசுட் டொழிந்து நீயா
யென்றுநின் றிடுமென் றன்னை யிருந்தவா காண்டி யென்று
துன்றுதன் னிலைசொல் லாத சொல்லினு லுபதேசித்தான்.

இன்னவா றயற்கும் புட்ப கிரியிடை யிருடி கட்கு
மன்னுவா னளவு கோள கிரியிடை வான வர்க்குந்
தன்னைநேர் கின்ற பொற்பிற் சந்தான கிரியி னண்ணி
முன்னைவான்பொருள்கண்மூன்றுமொழிந்தனன்குரவனாகி.

அப்பெருங் கிரியி னுமத் தடுத்தா ரியற்கு நாமஞ்
செப்பருங் கூவத் துள்ளோர் தேவரா தலின வர்க்குத்
தப்பில்பேரருளி னுசான் சநதான கிரிசந் தான
னிப்பெருங் குரவ னங்க ணென்றும்வீற் றிருப்பன் மாதோ.

கொத்தல ரிதழி யெம்மான் குருவுரு வாகி நேயம்
வைத்துப தேசஞ் செய்யும் வளங்கெழு கூவ மூதூர்க்
கொத்ததென் றயன்மற் றெருன்றை யொப்புரை செயலா காதென்
ரத்தலத் தியல்பு முற்று மறைந்தனன் சூத னன்றே.

சந்தானகிரி சந்தானச் சருக்கம் முற்றிற்று.

ஆகச்செய்யுள்—326.

# அடிமுடி தேடிய சருக்கம்

நைமிச வனத்து முனிவர்கள் "முனிவர் பெரும! அகந்தையால் போரிட்ட அயனும் அரியும் சிவனரைப் பரம் பொருள் எனத் தெளிந்து வழிபட்ட வரலாற்றை விளக்கியருளல் வேண்டும்" என்னலும் சூத புராணிகரும் மகிழ்ந்து கூறுகின்ரூர்:

முன்னொரு பிரளயம் வந்தது. பிரமனுநப் பெற்ற அந்தணர் உறங்கிக்கிடந்த பிரமனை எழுப்பினர். மலரோனும் மதங்கொண்டெழுந்தனன். தனக்கு நிகர் எவருமில்லை எனக் கருதினன். பாற்கடல் அடைந்து பரந்தாமனைப் பார்த்து, "நீரிற்றுயிலும் நெடியோனே! நீயார்?" என்று கேட்டான். அது கேட்ட பச்சை மேனியனும்" பதிப் பொருளாகும் நாராயணன் நானே" என விடை யளித்தான். பங்கயத்தவனும் நகைத்துப் "பரம்பொருள் ஆவது நீயல்லே, நானே" என்று நிமிர்ந்து நின்ரூன். மாயவனும் கோபத்துடன் எழுந்து ஒளிமிக்க வேதன் மார்பில் ஓங்கி யறைந்தான். அதனல் ஆத்திரங் கொண்ட அயனரும் அரியும் மற்போர் புரிந்தனர்; வில்லெடுத்துப் பொருதனர்; வாட் போரும் செய்தனர். அகந்தை கொண்டோருக்கு அறிவுமுண்டாகுமோ?

இருவர் செருக்கையும் அழித்தொழிக்க எண்ணிய ஈசனர், அவர்களிடையே அழலுருவான லிங்கமாய்த் தோன்றினர். இதைக் கண்ட இருவரும் போரை நிறுத்தினர். இந்தச் சோதியின் முடி, அடி காண்பவரே முழுமுதற் பொருள் ஆவர் என்ற முடிவுக்கு வந்தனர். முடியைக் காண அன்னமாய் அயனர் ஆகாயத்தில் பறந்தார். அடியைக் காணத் திருமாலும் பன்றியாய் மண் கிளைத்து நின்ற

னர். ஆனால், அலைந்து அலைந்து இருவரும் காண இயலா மல் நாணிச் செருக்கடங்கினர்; சிவனருள் கூட்ட 'இம் மலை எமக்கு அருள் புரியும் ஆண்டவன் அருள் வடிவாயிருக் குமோ'' என ஐயுற்றனர்.

அப்போது மாதேவர் மான் மழுவேந்திப் புன் முறுவல் பூத்த முகத்துடன், அம் மலையின் நடுவே அருட்காட்சி யளித்தனர். கண்ட இருவரும் செருக்கால் போரிட்ட பாவததைச் சிவனார் ஆணைப்படிக் கூவத்தில் சிவலிங்கம் தாபித்து வழிபட்டு, நீக்கிக் கொண்டனர். அந்த இலிங் கத்தைத் தரிசித்தால் பன்னிருகோடி சிவலிங்கங்களை வழி பட்ட பலன் உண்டாகும்.

திருவிற்கோல நாதருக்கு அருமைத் திரு நாமங்கள் அநேகமுள்ளன. அவற்றில் சில வேனும் செபித்தால், ஒரே கணத்தில் பிறவிக்கேதுவான இரு வினைகளும் ஒழிந்து விடும். அவைகளில்,

(1) இரட்சகர் (2) தியாகர் (3) சந்ததாரர் (4) தீர்க்க சடா நிர்த்தர் (5) சகந்நாதர் (6) அஞ்சநாப கண்டர் (7) கிலாநிக்னர் (8) புவன நாயகர் (9) திரிபுரக்நர் (10) அப்பிரதிஷ்டர் (11) கூவரநாதர் (12) நீவாரதர். என்ற பன்னிரு திருநாமங்களை அன்புடன் சொன்னவர், அவற்றுள் ஒன்றையேனும் தம் மக்கட்குப் பெயராக இட்ட வர், இம்மையில் அழியாப்போகமுடன் வாழ்ந்து மறுமையில் சிவனடி சேர்வர்'' என சூத மாமுனிவர் சொல்லியருளினர்.

சூதனி யம்பம கிழ்ந்தற வோரரி தொல்வேத
ஞதிய கம்பர மென்றுத மிற்பகை யானுரென்
ரேதினெ பின்பர னைப்பர மென்றவ ரோர்உற்ற
வேதுவெ னிங்கதி யம்புக வென்ன வியம்புற்ருன். 1

மேனுண் மண்டு பிரளயம் வந்து விரவுங்காற்
றானூர் கஞ்சன் றுஞ்சுறு மவ்விழி கண்ணுற்றே
யானு வின்பத் தந்தணர் கைவைத் தங்கத்தின்
மானு மங்கைக் காவிய னுய்துயின் மாறென்றூர். 2

என்றலும் வேத னெழுந்து களிப்போ டெறிநீரிற்
சென்றுல வாநின் றனனது போதிற் றிகழ்வாக
மொன்றுறு மேகந் தங்குத லேபோ லுததிக்கண்
மென்றுயின் மேவுங் கண்ணபி ரானை விழியுற்றான். 3

மூலான் மாலை மாலவ டித்தே மணிநீரின்
பாலா நீயா ரென்றுவி னுவப் பதியாகு
மேலா நாரா யணனு னென்று விரைந்தோதி
யேலா தாகு மகந்தைகொ டங்க னெழுந்தானுல். 4

மாய னுரைத்தெழு கின்றமை கண்டே மலர்வேத
னீயல நற்பரம் யானென வோதிமு னின்றூனு
லாயிடை யச்சுதன் மிக்கெழு கோபத் தவனுகிப்
போயயன் விற்பொலி மார்பி னெதிர்ந்து புடைத்தானுல். 5

மூண்டக வேதனு நெய்சொரி தீயின் முனிவுற்றே
யண்டக டாக முடைந்ததெ னும்படி யங்கையான்
விண்டுவின் மார்பெதி ரெற்றின னித்திறம் வெம்போர்கண்
மண்டிரு வோர்க டமக்கும் விளைந்தன வந்தம்மா. 6

குற்றுவர் மார்பு குழிந்திட நின்று குதித்தோடி
யெற்றுவ ராடக வெற்பொடு மைம்மலை யெய்திச்சூழ்
வுற்றது போல வுடன்சுழல் வாருட லுக்கப்போய்ப்
பற்றுவர் கீழ்மே லாக விழுந்து பதைப்பார்கள். 7

கட்டி யெடுத்து விழுத்தி யிடக்கை கழுத்தூடே
யிட்டு வலத்தி னழுத்தி யுரத்தி னிடிக்கொப்ப
முட்டிபி டித்தக ரத்தொடு குத்துவர் முட்டுற்றே
வட்டணை சுற்றுவ ரித்திற முற்றினர் மற்போரே. 8

வேறு

மருவோகைகொண முனிவோருடன் வரும்வானவர் கண்
பொருவோர்களி னிவர்போலறியோமென்றுபுகழ்ந்தார்[டே
விரைவோடுபி னுருமேறெனும் வெடிசொல்லின ராகி
யிருவோர்களு முறைவாள்களை யுருவிக்கொ டெதிர்ந்தார்.

மின்னுமென வெதிர்வீசிய மிளிர்வாளொளி யல்லா
லின்னுரிவ ரிவணுற்றன ரெனவேதமை யிமையா
வந்நாகரு மறியாவகை யறைகின்ற வொலிக்கு
முன்னுடு கறங்காமென முறைவட்டணை வந்தார். 10

வரையேகுவ ரமராபதி நகரேகுவர் மலையுந்
திரையேகுவர் பிலமேகுவர் திசையேகுவ ரென்றூழ்
தரையேகுவர் விடையாளியை யறியாது சமழ்ந்தே
புரையேகொடு சனனந்தொறு முழல்கின்றவர் புரைய. 11

தாணுடுவர் கரநாடுவர் தலைநாடுவர் மலருந்
தோணுடுவர் களநாடுவர் தொடைநாடுவர் சுடரும்
பூணுடுறு முரனுடுவர் வயினுடுவர் பொலியும்
வாணுடுறு விழிநாடுவ ரிவ்வாறு மலைந்தார். 12

கொந்து லாமலர் முடியண்ட கோளதை கடப்ப
வந்து பாதல முழுவது மலர்ப்பத மிகப்ப
வந்த வேலையி னிருவர்தம் மகந்தையு மறுப்பா
னெந்தை யாயிடை யழல்வடி விலிங்கமா யெழுந்தான். 13

## வேறு

ஆதி மாலய னன்பகத் திருளற வமைத்த
தீதின் மாமணி விளக்கெனத் திகழ்வதவ் விலிங்கம்
மேதை யாமவ ரகத்திரு ளொருசிறு விளக்கின்
சோதி போக்குமோ வப்பெருஞ் சோதியே யல்லான். 14

அங்கு வந்தெழு மருட்கனற் ருணுவை யீயன்மாற்
றங்கள் வெஞ்சமர் தணந்தனர் நோக்கியித் தாணு
விங்கு வந்ததென் னென்றனர் தாணுவென் றறியார்
கங்க ரன்றனை யவன்கணு லன்றியார் காண்பார். 15

மண்டு வெஞ்சமர் தணந்தினி யிருவரு மலர்வு
கொண்ட வங்கியி னடிமுடி பார்ப்பமக் குறிமுன்
கண்ட வன்பர மெனத்தமி லியைந்தனர் களிகூர்
வண்டு ழுங்கம லாதனக் கடவுளு மாலும். 16

ஏன மாயரி மலரய னெகினமாய்ப் பிலமும்
வானு மேகுபு மனமொழி தனிலுமே மருவா
ஞான நாயக னடிமுடி விழிகொடு நாடப்
போன மூதறி வுடைமையி னினைந்து போயினரால். 17

குன்று போல்வரு மும்மதக் கோட்டுவா ரணத்தை
யன்று வாய்குடர் சொரிந்திட வேமிதித் தழுத்திக்
கொன்ற தாண்மல ரென்றறி யாததைக் குறுகிக்
கன்றி யோர்சிறு பன்றிகீழ்ப் பட்டது கடிதின். 18

முளைத்த வெண்பிறை யெனுமுடக் கோடுதேய் வுறமண்
கிளைத்து வெம்பில மனைத்தையு மிகந்துமிக் கேழ
லிளைத்த தன்றிவான் ஞெடையையுங் கடந்ததி லின்பம்
விளைத்த வெந்தைதாள் விலங்குறப் பட்டதோ விளம்பீர். 19

வருந்தி மெய்யிருங் கேழலி னுருவுகொண் மாயன்
றிருந்து நங்குறி கண்டில மலரயன் சென்று
பொருந்து பொன்முடி கண்டுறிற் புகல்வதென் னென்னுநா
ணருந்து நெஞ்சொடு மொருவகைப் புவியின்மீண் டடைந்தான். 20

விண்ணி னேகிய வியன்சிறை யோதிமம் விரைந்தே
யண்ணன் மாமுடிக் கங்கையின் றுறைபடிந் தாடக்
கண்ணி யேகுத லெனச்செழுங் கதிரிட முதலா
வெண்ணும் யாவையும் பரந்திவர்ந் திகந்துபோ யினதால். 21

விண்டு காண்குவ னடியிணை முடியிணை விரைந்து
கண்டு நாமிணை யாகுவ மெனவயன் கருத்திற்
கொண்டு தேவமா வருடமோ ராயிரங் குலவு
மண்ட மேறியு மடைந்தில னமலன்மார் பளவும். 22

சிறகு நொந்திளைத் திடுதலா னப்புறஞ் சேணிற்
குறுகு கின்றதன் செயலொழிந் தெகினுருக் கொண்டோ
னிறுகு திண்புயத் தரிசெய லென்கொலோ வென்று
மறுகு நெஞ்சொடு மீண்டுவந் தடைந்தனன் மண்ணில். 23

இட்ட தங்குறி கண்டுதாம் பரமென விச்சைப்
பட்ட னேகநாட் படதபா டுகளெலாம் பட்டா
ரிட்ட மொன்றில ரெம்பிரா னடிமுடி யிணைப்பூப்
பட்ட கண்ணினா காண்பரோ வெத்தனை படினும். 24

வந்து கூடியங் கிருவரு மனத்தெழு மகந்தை
சிந்தி வாண்முகம் புலர்ந்துநின் றிடுதலாற் சிந்தை
தந்தி டுங்குறி காண்கிலா தமைத்தமி லறிந்தே
யுந்து கின்றநா ணிருவரு மொத்தலி னொழிந்தார். 25

எங்க ணாயக னருள்சிறி துறுதலி னினையோர்
தங்க ளாகிய மயக்கொழிந் தற்புதத் தாணு
நங்க ணாயக னாகியே நமக்கரு ணெற்றிச்
செங்க ணானுறு முருவமோ வென்றுசிந் தித்தார். 26

ஆன காலையின் மணியிடத் தாடுறு மொளிபோன்
ஞான நாயக னழனெடுந் தாணுவி னடுவண்
மானு மாமழு வுந்திகழ் கரமுமொண் மார்புந்
தூநி லாநகை வதனமுந் தோன்றுற நின்றான். 27

நின்ற காலையின் மிடற்றணி நீலமு முரத்திற்
றுன்று மாலிகைத் தலைகளுங் கண்டுளந் துணுக்குற்
றென்று நாணுட னச்சமு மொருங்கெழ வயன்மால்
சென்று நாயகன் றிருவடி சிரம்பட விழுந்தார். 28

எழுதி ரஞ்சலி ரென்றுமை நாயக னியம்பத்
தொழுத கையொடு மெழுந்துநின் றறிந்தவா துதித்தே
யிழுதை யேமுனைப் பரமென வறிந்திடா தியற்றும்
பழுது தீர்த்தரு ளென்றிடப் பராபரன் பகரும். 29

நும்மை நாம்படைத் திருதொழி லுங்களுக் குதவ
வெம்மை நீரென் வுமதறி வொன்றியும் வேறாய்க்
கொம்மை மாமுலை யுமையொடு வடிவுகொண் டிருக்கு
மெம்மை நீர்மறந் துமைமதித் தமர்புரிந் திளைத்தீர். 30

நீவிர் நம்மையே பரமென நினைந்திடா தமர்செய்
பாவ நந்திநும் பதநிலை பண்டுபோ லடைய
வாவல் கொண்டுநம் வடிவமா மிலிங்கநன் கமைத்துக்
கூவ நண்ணியார்ச் சியுமெனப் புகன்றினுங் கூறும். 31

நீறு கண்டிகை புனைந்துநந் நிகழ்வடி வென்னக்
கூறி லிங்கபூ சனைபுரி குணத்தரை நாமாத்
தேறு கின்றஃப தொழிவில்பே ரின்பமெய்த் தேவர்
வேறு கண்டவர் வெந்துயர் விடாததீ நரகர். 32

கலைகள் யாவையு முணர்ந்தவ ராயினுங் கருதி
யிலகு நாமகி ழிலிங்கபூ சனைதனை யியற்று
நிலைய ரொனறையு முணர்கிலா ரஃதுடை நெறிய
ருலகி லொன்றையு முணர்கில ரேனுமுற் றுணர்ந்தோர்.

நரரி னீசரே யாயினு நல்லிலிங் கத்திற்
பரிவி னுனமைப் பூசனை புரிகுவர் பகரிற்
சுரரின் மேலவ ரஃதிலர் சுரர்களிற் சிறந்த
வரர்க ளாயினும் புலையரே மெய்ம்மையிம் மாற்றம் 34

மகிழ்ந்தி லிங்கபூ சனைசெய்வோ னெக்குலம் வரினும்
புகழ்ந்த வன்றனை நாமென வந்தனை புரிவோர்
திகழ்ந்த நம்பதம் பெறுகுவ ரவன்குலஞ் சிந்தித்
திகழ்ந்த புன்மைய னீசனுய் நரகில்வீழ்ந் திகவான். 35

என்று கூறியத் தாணுவின் மறைந்தன னிறைவ
னின்ற மாலய னுவகைபூத் தண்ணல்சொன் னினைந்து
சென்று கூவமா நகரிடைச் சிவலிங்க மமைத்து
மன்றன் மாமலர் மஞ்சனங் கொடுவழி பட்டார். 36

வினைக டீர்ப்பது புனிதன்மெய்ஞ் ஞானமே விளைப்ப
தனக னேயமோ டிருப்பதக் கூவமா தலினுற்
கனவி லாயினு மிந்நகர் கடக்கொணு தென்றங்
கினிய மேருவிற் கோலநா யகற்றொழு திருந்தார். 37

மாலு நான்முகக் கடவுளும் வழிபடு மெழில்விற்
கோல நாயகர்க் கண்டிடிற் பன்னிரு கோடி
மூல மாமிலிங் கங்களை முறைமையிற் சென்று
சீல மோடுகண் டுறுபல னக்கணஞ் செறியும். 38

அருவிப் பூதர மெனவரு மதகரி யட்ட
திருவிற கோலநா யகன்பெயர் பலவுள செப்பிற
கருவிற் போக்குறு மிருவினை களையுமக கணத்தின்
விரைவிற் போக்குவ வவற்றினிற் சிலபெயர் விளம்பின்.

வேறு

இரக்ககர் தியாக ரிசைச்சந்த தார
ரெழின்மிக வளர்சடைக் கூத்த
ரருட்சக நாத ரஞ்சறு பகண்ட
ரருங்கிலா னிக்கின ரோடுங்
திருக்கறு புவன நாயகர் திரிபு
ரக்கின ரப்பிர திட்டர்
தெரித்திடு கூவ நாதரன் பர்க்குச்
செங்கெல்வைத் தவரென லாமால். 40

இப்பெரும் பெயர்கள் பன்னிரண் டினையு
மியம்புவோ ரிவற்றினி னொருபேர்
செப்பரும் புதல்வற் கிடுபவர் புவியிற்
சிதைவின்மெய்ப் போகங்க டுய்த்தே
யொப்பருங் குளிர்வெண் டிங்கள்வண் கடுக்கை
யுண்ணுழைந் தினியதா தளைந்து
மெய்ப்பசும் பொன்னிற் றிகழ்சடா மவுலி
விமலன தடியின்மே வுவரால். 41

### வேறு

என்று கூவத் திறைவன் பெரும்புகழ்
துன்று மாசையிற் சூத முனிவர
னன்று மேவு நயிமிச மாவனத்
தொன்று மாதவர்க் கோதின னென்பவே. 4

**குறிப்புரை :**—செய்யுள் - (40) இரக்கர் - இரக்ஷிப்பவர். தியாகர் - தேவர்கட்கும் முனிவர்கட்கும் தியாகமளித்தவர். சந்ததாரர் - அன்பர்களைச் சமுசாரபயததினீக்கி நன்கு காத்தவர். வளர்சடைக் கூத்தர் - தீர்க்க சடாநிர்த்தர். தீர்க்கம்-நீட்சி. சகநாதர்- சர்வகர்த்தர். அஞ்சனுபகண்டர்-விடத்தால் அஞ்சனம்போலும் காந்தி பெற்ற கண்டத்தை யுடையவர். கிலானிக்கினர் - அடியவர்களுக்குக் கலிகாலக் கிலேசத்தை நீக்கி யருளினவர். கிலானி - கிலேசம். புவன நாயகர் - அசுரரை மாய்த்துப் புவனங்களைக் காத்தவர். திரிபுரக்கினர், திரிபுரத்தை யழித்தவர். அப்பிரதிஷ்டர் - பிரதிஷ்டையல்லாதவர்: எனவே, சுயம்பு என்றபடி. கூவநாதா - கூபரநாதர். செந்நெல் வைத்தவர் - நீவாரதர். நீவாரம் - செந்நெல் என்பர் வடநூலார். அன்றியும், அப்பிரதிஷ்டர் என்னும் திருநாமத்தை அப்பிரதிஷ்டா அங்கியதாகர்த்தர் எனப் பாடமோதி அதற்கு, தம்மை அடைந்தவர்களுக்கு அளித்த பதத்தை என்றும் அகற்றுதவர் எனப் பொருளுரைப்பர்.

அடிமுடி தேடிய சருக்கம் முற்றிற்று.

ஆகச்செய்யுள்—368

---

# செந்நெல் வைத்த சருக்கம்

சூதமாமுனிவர், விற்கோல நாதற்குச் செந்நெல் வைத்தவர் என்ற பெயர் வந்தவகையைக் கூறுகிறார்.

கூவமாநகரில் **தருமசீலர்** என்ற அந்தணச் செல்வர் ஒருவர் இருந்தார். அவர் அரன் பக்தி, அடியார் பக்தியிற் சிறந்து விளங்கினர். தாம் அறநெறியால் பொருளீட்டினர். பின், அதனைக் கொண்டு அடியவர்க்கு அறுசுவையுண்டியளித்து எஞ்சியதை உண்டுகளித்து வாழ்ந்தார்.

நாளும் இத் தொண்டினை நலமுற நடத்திவந்த அவருக்குப் பெருகிய செல்வம் மறைந்து வறியவரானர். அல்லல் மிக்க நல்குரவுற்றும் திருத்தொண்டு முட்டுப்படாதபடி, மனையிலுள்ள பொருள்கள் எல்லாவற்றையும் மாறியும், தாலியை விற்றும் நடத்தி வந்தார். உள்ள பொருள்கள் அனைத்தும் ஒழிந்தன. செந்நெல்லைப் பிறரிடம் சென்று இரந்து வந்து அடியவர்க்கமுதளிக்கலாயினர். பிறகு பிச்சைக்குப் போனபோது இடுவாரின்மையால் வறிதே வீடு மீண்டனர். அதுபோல எட்டு நாள்காறும் தம் மனைவியுடன் உணவின்றிப் பசித்திருந்தனர். கணவனர் பசியும் தளர்ச்சியும் கண்டு, மனைவியார் மனமிக வருந்தினா. தருமசீலர்க்கு, உடல் தளர்ந்தாலும் உள்ளம் தளரவில்லை ; நாள்தோறும், நதியில் நீராடி, நியமமுடித்து, விற்கோல நாதரை வழிபட்டு வீடு வந்தார். ஒன்பதாம் நாள், தரும சீலர், வழக்கம் போல் வழிபாடு முடித்து வீடு வரும்போது மெய் சோர்ந்து கீழே விழுந்து விட்டார். அது கண்ட மனைவியார் முகத்தில் அறைந்து கொண்டு 'கோ' வெனக் கதறினர்.

அந்நிலையில், பசியால் இளைத்த திருத்தொண்டர் ஒருவர் தருமசீலரது மனையில் வந்தார். தருமசீலரும் அவரை

மனையுட் கொண்டு சென்று ஓர் ஆதனத்திலிருத்தினுர். "இவர்க்கு இன்னமுதூட்ட இனி என் செய்வேன்!" எனக் கண்ணீர் விட்டு "இன்னும் இந்நகர் முழுதும் சென்றிரந்து நெல்கொண்டு வருவேன்" என எழுந்து விரைந்தார். இரு நாழிச் செந்நெல் எளிதில் கிடைத்தது. அதனை அருமை மனைவியார் ஏற்றுச் சமைத்து அடியார் பசிதீர அமுதளித்தார். பரமனடியவரும் பசிநீங்கி விடைகொண்டார். அவர் உண்டு எஞ்சிய உணவைத் தருமசீலர் தம் மனையாருடன் உண்ணச் சென்றனர்.

இவர்களது திருத்தொண்டினது சிறப்பை விளக்கம் காணத் திருவிற்கோலநாதர் ஒரு முதிய சிவனடியார் உருவில் வந்தார். "அன்பரே! பசியோ பெரிதும் வாட்டுகிறது. ஒருபிடி சோறிட்டாலும் உமக்குப் புண்ணியமுண்டாகும்" என்றனர். இதனைக் கேட்ட தருமசீலரும் அவரது துணைவியாரும் மட்டற்ற மகிழ்ச்சி பூத்து "நாங்கள், இங்கு எஞ்சிய உணவினை உண்பதற்குமுன் நம்பரடியார் வந்தது எங்களது நற்றவம்" என்று அடியாரை அழைத்துவந்து ஆதனத் திருத்தினர். பிறகு மனைவியாரும் பணிவன்புடன் அமுதளித்தார். தாம் எட்டு நாள் பட்டினி ஆயினும் வந்த அடியவர்க்கு மனமுவந்து உணவிட்டனர். உடனே அடியவருருவில் வந்த ஆண்டவனும் மறைந்து நின்று, "உமது வறுமை நீங்கும் வரையிலும் நம் ஆலயத்தில் நாள்தோறும் ஓர் அழகிய குடத்தில் செந்நெல் வைப்போம். எடுத்துக் கொள்க" என்று கூறினர். இதனைச் செவியுறக் கேட்ட திருத்தொண்டரும் கைகள் தலைமிசையேறக் கண்ணீர் பாய, "எளியேனை ஆளவந்தவன் இறைவன் தானே" என எண்ணித் துதித்தனர்.

பிறகு அந்தணர் ஆலயம் சென்று செந்நெலைக் கொண்டுவந்து அளவில்லாத அடியவர்க்கு அமுதூட்டும் திருத்தொண்டைத் தொடர்ந்து செய்யலானுர். இவ்வாறு

தவருமல் சோறளித்த தருமசீலர் சிவகதி பெற்ருர். தரும சீலர்க்குச் செய்த இவ் வற்புதத்தால் கூவரநாதர்க்குச் '**செந்நெல் வைத்தவர்**' என்ற திருநாமம் வழங்கியது. இத் திருநாமத்தை அன்போடு செபிப்பவர் அழியாச் செல்வமும் நிறைந்த கல்வியும் பெற்றுச் சிவகதியும் சேர்வர்.

நம்பன், **திருக் கயிலையில்** பிரதோஷ நடனமும், **பொற் சபையில்** - ஆனந்த நடனமும், **திரு வாலங்காட்டில்** சண்ட தாண்டவமும், **கூவத்தில்** தருக்கமாதா (வாதிட்டசக்தி) காண இரட்சா நடனமும் செய்தருளுவர். இவரைத் தரிசிப்பவர், இம்மையில் கல்வி, செல்வம் புகழும் பெற்று மறுமையிற் பரகதியும் பெறுவர். இத்தலத்தில் செய்யும் எல்லாத் தருமமும் பலகோடி மடங்கு பலனை யுதவும்" என்று சூதமாமுனிவர் கூறினர்.

மறுவறு தவத்தின் முனிவரர் மிக்க
மகிழ்ச்சியின் மறித்துமச் சூத
னறுமலர்க் கமலத் திருவடி பரவி
நங்களுக் கையவிற் கோலச்
சிறுநுதற் குமரி யிடத்தின்வைத் தவற்குச்
செந்நெல்வைத் தவனெனும் பெயரெம்
முறைமையி னடுத்த துரைத்தியென் றியம்ப
முனிவனன் றெனவது மொழிவான்.

முன்னரக் கூவ புரத்திடைக் காம
முதலிய முக்குறும் பெறிந்தோர்
புன்னெறி படுமைம் புலன்களுந் தடுத்தோர்
பொய்யினை மெய்யினிற் கண்டோர்

சென்னியிற் பிறைகொண் டவன்றனக் கன்பு
செறிந்தமை யடியர்கட் டிகழ்த்து
நன்னிலைத் தரும சீலனு ரெனவோர்
நாமவந் தணருள ரானூர். 2

உருவநல் லறமாக் கறைமிடற் றிறையன்
புயிரென வந்ததே யனையார்
பொருவினன் னெறியின் வரும்பெருஞ் செல்வர்
புரமெரி படுத்தவிற் கோலத்
தொருவன தடிமுப் பொழுதும்வந் தனைசெய்
துறுசுவை யடிசின்மா தவர்க்குப்
பரிவொடு மளித்து மிச்சில்கொண் டெமக்குப்
பயனிது வெனவொழு குறுநாள். 3

வேறு

கோதினந் தரும சீலர் கொடைகண்டு நாணுட் கொண்டோ
மேதகு மவர்தம் மேன்மை விளக்கவோ வறிந்தி லேமா
லோதமுண் முகிலொ டுங்கிற் றெருபுடை யதனுல் யாரும்
பேதுறு பசிநோய் கூரப் பெருமித மிழந்து நைந்தார். 4

வறியவக் காலம் போத மறுவறுந் தரும சீலர்
செறியுமெய்த் தவர்கட் கெல்லாஞ் செழுங்கறி யமுதினேடு
நறியமென் புழுக்க லன்பா னற்சுவை யளித்த ளித்தந்
நெறியினிற் பெறும்பே றென்றே நிற்கநின் றிலது செல்வம்.

பழகுதஞ் செல்வ மெல்லாம் பயன்றரு கதலி யாக
வழகுதம் பெருகு கற்பி னளவலா தளவி லாம
லொழுகுநன மனைவி யார்தம் முரியபொற் றுலி யாதி
முழுதும்விற் றடியார்க்கன்பான் முதிர்சுவை யமுதளித்தார்.

மனையிலுள் ளனவ னைத்து மாண்டிடச் செயலொன் றின்றி
யினியருந் தவர்கட் கந்தோ வென்செய்கே னெனத்து ளங்கி
யனைவர்க் கிரப்புற் றேனு மமுதமிட் டொழிந்த துண்பே
னெனமனந் துணிந்தவ வாறு நெற்பலி யிரந்து செய்தார்.

இத்திற மொழுகு நாளி னின்மைமேன் மேல்வந் தெய்த
வெய்த்திடு பவர்க ளின்றி யெண்பகல் பலிக்கு ழனறே
யுத்தமா் வறிது மீண்டங் குடற்றும்வெம் பசிநோய் கூர
மைத்தடங் கண்மா தோடும் வருந்திமெய் தளர்ந்திருந்தார்.

கொழுநர்தம் மெய்வ ருத்தங் காண்டொறுங் குறைந்து நெஞ்சம்
விழிபொழி வெள்ள மோட வெய்துயிர்த் தென்செய் கோமென்
றெழுதுயர மனத்தி னோங்க வில்லினுக் குரியார் செந்தீ
மெழுகென வுருகி நைந்தார் வினைகொலோ விதுவென் றெண்ணி,

அன்பர்தா முடற ளர்ந்து மகந்தளா் வின்றிச் சென்று
முன்பென நதிநீர் மூழ்கி மொய்ம்மலர் புனல்கொண் டெய்திப்
பொன்புரை திருவிற் கோலப் புனிதனை வழிபட் டேத்திப்
பின்புதன் மனையின் மெல்லப் பெயர்ந்துவந் திருந்தா ரெய்த்தே. 10

இம்முறை யந்த ணாள ரெண்டின முணவொன் றின்றித்
தம்முட றளர்ந்தொன் பானுட் டையல்பா கனைப்பூ சித்தே
யம்மனை வருகு வார்மெய் யயர்ந்துவந் தருகு வீழ்ந்தார்
மைம்மலி குழலி னார்தம் மதிமுகத் தறைந்த ழுங்க. 11

அவ்வமை யத்தி லீச னடியவ ரொருவர் யாண்டுந்
துவ்வரி தாக மேனி துவண்டுகண் ணுள்வி ழுந்து
செவ்விதழ் புலர்ந்து வாடுந் திருமுக மோடு முன்றில்
வெவ்விய பசியின் வந்தேன் வினையிலீ ரென்று சென்றார்.

தொண்டர்வந் துரைத்த மாற்றஞ் சுடுதழற் காய்ந்த வெவ்வேல்
புண்டுளை படப்புக் கென்னச் செவிப்புலம் புக்கு நெஞ்ச
முண்டிட வெழுந்து போகி யுரியநன் மனையா ரோடும்
வண்டவர் தமைவ ணங்கி மனையினுட் கொண்டு புக்கார்.

ஆதனத் திருத்தி மேனி யயர்வுகண் டழுங்கிக் கெட்டேன்
மாதிடத் தவர்தம் மன்பர் வருந்தவிவ் வாறு கண்டே
னேதினிச் செய்வே னென்று வினைவிழி யருவி பாய
மூதழற் படும ரக்கின் மும்மைநெஞ் சுருகி நைந்தார். 14

அன்னைபங் குடையோ னன்ப ரயர்வுகண் டாற்ற லாகா
தின்னுமிந் நகர முற்று மிரந்துகாண் குவன்பு குந்து
செந்நெல்வந் திலதே லாவி தீர்ப்பனென் றில்லிற் கோதித்
தன்னிக ரிலாதா ரன்பு தரும்வலி கொண்டு சென்றார். 15

நனையவி ழிதழி யார்க்கு நல்லவ ரிளைத்தா ரென்ன
வினைவுறு மனத்தோ டங்கங் கிருந்திருந் தெழுந்து மெல்ல
மனைதொறும் பலிக்குப் புக்கா வடிவுறு வருத்தஞ் சற்று
நினைகில ரன்பு பற்றாய் நின்றதந் தணருக் காவி. 16

எம்மையா டிருவிற் கோலத் திறையவன் கருணை தன்னாற்
செம்மையா மனத்தர்க் கெய்தச் செந்நெலங் கிரண்டு நாழி
நம்மையா ளுடைய தொண்டர் நனிபெருஞ் செல்வ முன்னின்
மும்மையா யடைந்த தென்ன முதிர்மகிழ் வுற்று மீண்டார்.

அந்தணர் செல்ல நங்கை யருந்தவ ரயர்வு காணு
வந்தெழுந் துயர மோர்பான் மனத்தெழுந் தலைப்பக்கேள்வர்
தந்தளர் வுண்ணின் றேங்குந் தனிப்பெருந் துயர மோர்பான்
முந்துற வழுமி ரங்கு முலைமுகட் டெற்றி வீழும். 18

இன்னலங் கடலின் மூழ்கி யெழுந்திடா தழுங்கு கின்றூர்
செந்நெல்கொண் டந்தோ நங்க டிருத்தொண்டர் பசித்தா ரென்று
துன்னுறு துயர நூக்கத் துணைவனூர் வருதல் கண்டு
மின்னென வெதிர்வ ணங்கி விரைந்துவாங் கினரச் செந்நெல் 11

வாங்கிய செந்நெற் குத்தி மாதவர் பசிநோய் தீரப்
பாங்கொடு மமுத மாக்கிப் படைத்திட வேண்டு மென்ன
வோங்குறு மனத்தன் பாற்றம் முடற்றளர் வெண்ணு தம்பொற்
பூங்கொடி யனையார் போனம் பொருக்கென வமைத்துப் பின்னர். 20

திருந்திய கொழுநர்க் காயிற் றமுதெனச் செப்பி நம்பா
லருந்துயர் கெடவந் தாரை யமுதுசெய் விப்பீ ரென்ன
விருந்தினர் தமைவ ணங்கி யமுதுசெய் வித்த வேலை
மருந்தெதிர் பவரின் மிக்க மறையவர் மகிழ்ச்சி கொண்டார். 21

மாதவ ரமுது செய்து மகிழ்ச்சிகொண் டெய்தப் பின்போ
யாதர வொடும்வ ணங்கி யவரருள் விடைகொண் டேகித்
தீதக லன்பின் மிக்கார் சேடித்த வமுதுண் பாக்குப்
போதுமவ் வமையந் தன்னிற் புகுந்தவர் பதமு ரைப்பாம்.

## வேறு

அந்த ணாளர்தம் மன்பினை யுலகிடை யலர்த்த
நந்தி லாவருட் கூவநா யகனுள நாடித்
தந்த மாவுரி போர்த்ததன் றனியுரு மறைத்து
முந்து தொண்டர்கள் போலொரு மூப்புரு வெடுத்தான்.

அன்று மேவிய காரைக்கா லம்மையே யம்மை
யென்ற வாசக மெய்பெற வவளுரு வென்னத்
துன்று மேனியிற் றசையொழிந் தென்பெலாந் தோன்ற
மன்று ளாடிய திருவடி மலர்நடை தளர. 24

பொருவி றன்னைவிற் கோலத்த னெனும்பெயர் புதுக்க
வுருவ முள்வளைந் தொருகழைத் தண்டுமுன் னூன்றித்
திருவி றைஞ்சுபொற் பையர வல்குலாள் சிரிப்பத்
தரும சீலர்தம் மனையிடைப் புகுந்தனன் றலைவன். 25

புகுந்தி ளைத்தன மொருபிடி போனக மிடிலோ
மிகுந்த புண்ணிய முமக்கென விளம்பினன் விமலன்
பகர்ந்த வாசகங் கேட்டலும் பதமுண விருந்தா
நுகர்ந்தி டாமுன மடியர்வந் ததுதவ நோன்மை. 26

என்ற கங்களித் தெழுந்துபோ யெம்பிரா னிளைத்து
நின்ற வநிலை கண்டுளம் பொருதுநெக் குருகித்
துன்ற ருந்துயர் கூர்ந்திரு கண்கணீர் சொரியப்
பொன்றி லன்பொடு வணங்கியுட் கொண்டுபுக் கனரால்.

வேறு

ஐயனை யாதனத் திருத்தி யிங்குநா
முய்யவந் தவர்தமக் குள்ள போனகம்
பையர வல்குலாய் படைத்தி யென்னலு
மையலின் மங்கையர் மகிழ்வுற் றிட்டனர். 28

இட்டலு மிறையவ னெண்டி னங்கணீர்
பட்டினி யொடுமிகப் பரிந்து தொண்டுசெய்
திட்டையின் வழுவுரு நுங்க ணெஞ்சிடை
மட்டிலை யன்பென மறைந்து கூறுவான். 29

கலிமிகு சிறுவிலைக் காலஞ் செல்வரை
மெலிவுறு நுமக்குநம் விளங்கு மாலயத்
துலைவற வனுதின மொரும ணிக்குட
மலிவுறு செந்நென்முன் வைத்துங் கொண்மென. 30

அண்ணல்சொற் றிடவதை யந்த ணாளர்கேட்
டுண்ணெகிழ் வொடுகர முச்சி கூப்பியே
கண்ணிணை புனலுகக் கடைய னேனையு
மெண்ணிவந் தருளிய விறைவ னேயென, 31

ஆலயந் தனிலடைந் தன்பு வேண்டுவிற்
கோலவங் கணர்தமைக் குறுகித் தாழ்ந்தெழுங்
காலையி னங்கொரு கடநி ரம்புசெஞ்
சாலிகண் டுவந்தனர் தரும சீலரே. 32

கொண்டுபோய் மனையினக் குடநி ரம்புநெல்
லண்டர்நா யகர்திரு வடிய ரெண்ணிலா
ருண்டிட நல்லமு துதவிச் சேடமுண்
டொண்டொடி யவரொடு முவப்புற் றாரரோ. 33

இத்திற நாடொறு மிறைவ னாலயம்
வைத்தசெந் நெற்கொடு வருந்தொண் டர்க்கெலாந்
துய்த்திட வமுதறு சுவையொ டும்படைத்
துத்தமர் சிவனரும் பதத்தி லொன்றினார். 34

## வேறு

மறையவர் தமக்கிம் முறைமையிற் செந்நெல்
வைத்தலா னரியவிற் கோலத்
திறையவ னுலகிற் செந்நெல்வைத் தவனா
மென்னுமெய்ப் பேரடைந் தனனா
லறையுமப் பெயரை மனம்விழைந் துரைப்போ
ரழிவிலா மிக்கசீர்ச் செல்வ
நிறைபெருங் கல்வி பெருகுவர் பின்னு
நிகரில்பே ரின்பவீ டடைவார். 35

அந்தவிற் கோலத் திறைசெயும் வெள்ளி
யடுக்கலிற் சந்தியா நிருத்த
நந்துபொற் பொதுவி னரியவா னந்த
நடமிலங் குறுவட வனத்தி
லுந்துநற் சண்ட தாண்டவங் கூவத்
துலைவறு தருக்கமா தெனவே
வந்தவச் சத்தி யனுதினங் காண
மகிழ்ந்திரக் காநடம் புரிவன். 36

சாற்றரும் பெருமைக் கூவமா நகரிற்
றருக்கமா தாவெனும் பெயராள்
போற்றுற நடஞ்செய் யெம்பிரா னுமம்
போற்றுறு வளர்சடைக் கூத்தன்
காற்றுணைக் கமல மொருபகற் சென்று
கண்டவ ரளப்பருங் கல்வி
மாற்றருஞ் செல்வம் பெரும்புகழ் படைத்து
மறுமையிற் சிவகதி யடைவார் 37

எம்பிரா னடஞ்செய் கூவமா நகரி
னிருப்பவர்க் கொருதினை யளவு
செம்பொனீ குறிலொண் காசியா திகளாய்ச்
சிறந்திடுந் தலங்களிற் சென்றே
யம்பொனு யிரநான் மறையவர்த் தேடி
யளித்திடு பலனிகர்த் திடுமாற்
றம்பிரா னடியார் கரத்ததை யளிக்குந்
தனிப்பல னுரைப்பதற் கெளிதோ. 38

கூவமா நகரிற் பிடியடங் கடிசில்
கொடுத்திடி னந்தணர் தமக்குத்
தேவர்மூ வருமுண் மகிழ்மக நூறு
செய்பல னக்கணஞ் செறிவ
ரோவின்மா தவருக் கொருபக னிரம்ப
வோதன மத்தலத் திடுவோர்
பூவினேன் றிருமால் பதங்களோ வடைவார்
புராரிதன் பதம்பெறு குவரால். 39

மாதவர்க் கினிய கூவமா புரத்தோர்
மடமமைத் துதவுவோர் தம்பாற்
போதுறு மடம்விட் டின்பவீ டடைவர்
பொன்றுறு பதங்களிற் புகுதா
ராதர வினிலோர் சிவனடி யவருக்
கங்கையின் றுணைவிளை நிலமொன்
றீதல்செய் பவரெக் காலமு மகலா
திருப்பரொண் கயிலைமால் வரையில். 40

அருந்தவர் தமக்குக கூவமா நகரி
லாடையொன் றளித்திடி லதனிற்
றிருந்திழை யொன்றிற் கொருசத கோடி
த்தேவராண் டருஞ்சிவ லோகத்
திருந்துபின் பரமன் றிருவடிக் கமல
மெய்துவர் பெற்றமொன் றுதவிற்
பொருந்துறு பலனிவ் வளவெனக் கணித்துப்
புகன்றிடற் கரிதரி தம்மா. 41

கொன்றையங் கண்ணி மிலேந்தவன் மகிழுங்
கூவமா நகரிடத் தியற்று
மொன்ருெரு தரும மனந்தகோ டிகளா
யுலப்பறு பலன்களே யுதவு
மென்றத னியல்பை முனிவர ருவப்ப
வியம்பினன் புலனெறி கடந்து
சென்றரும் பரமா னந்தவா ரிதியிற்
றிளேத்திடுஞ் சூதனென் பவனே. 42

**குறிப்புரை:—** செய்யுள் (12) துவ்வு - உணவு. (20) போனகம் என்பது போனம் எனத் தொக்கு நின்றது. (29) நிட்டை - உறுதி. (36) இரக்காநடம் - இரக்ஷாநடனம்.

செங்நெல்வைத்த சருக்கம் முற்றிற்று.

ஆகச் செய்யுள்—410

---

## தாருகன் வதைச் சருக்கம்

---

சூத முனிவரிடம் கூவநகர்ச் சிறப்பெலாங் கேட்டு மகிழ்வுற்ற மூனிவர்கள் "ஐய ! நீர் தருக்கமா தென்று கூறியவள் தோற்றமும் கூவத்திற்கு வந்த வரலாறும், விளங்க உரைத்தருளுக" என்றனர். சூதரும் சொல்லுவாராஞர்:

முன்னொரு காலம் தாருகன் என்ற அசுரன் தோன்றினன். அவன் தன்னே எவ்வீரரும் அழிக்கலாகாது என்றும் தன் உடலில் இருந்து சிந்தும் செந்நீர்த் துளிகள் முழுதும் தன்னேப் போல உருக்கொள்ளுமாறும் சிறந்த தவஞ் செய்து வரம்பெற்றுன். திசைக் காவலர்களேயும் கீழ் ஏழுல

கிலும், விண்தலத்திலு முள்ள வேந்தர்களையும் தன் சேனைக் காவலர்களால் கொணர்வித்து நாளும் குற்றேவல் கொண்டான். அரம்பையர், காமதேநு முதலிய யாவருக்கும் துன்பஞ் செய்தான். இவன் கொடுமையால் இறையவருச்சனை, சிறப்பொடு பூசனை யனைத்தும் சிதைந்தன.

ஒருநாள் வெந்துயருக்கு ஆற்றாத விண்ணவர் இந்திரன், அரி, பிரமரும் கயிலை சென்று பரமனிடம் முறையிட்டனர். அவர்களது குறைகேட்ட இறையவன் அவர்களது துன்பம் நீக்கத் திருவுளங் கொண்டு மலைமகள் திருமுகத்தை நோக்கியவாறு தன் மெல்லிய மலர்க் கையைத் தன் கழுத்திலுள்ள ஆலகால விடத்தின்மேல் வைத்தான். உடனே எட்டுத் தோள்களும், பருத்த கொங்கைகளும், செம்பட்டடைக் கூந்தலும், கருங்கண், பிளந்தவாய், கருத்த மேனியும் கொண்டு கையில் சூலந் தாங்கிக் காளி தோன்றினாள். அவளைக் கண்ட மலைமங்கையும் அஞ்சி இறைவனைத் தழுவிக் கொண்டாள். அமரரெல்லாம் அவளது கோர ரூபங்கண்டு ஏங்கிக் கண்ணை மூடிக்கொண்டனர். காளி, மாதேவனையும் மாதுமையாளையும் வணங்கி "என்னைப் படைத்தவர்களே! யான் செய்யத் தக்கது யாதென" வினவலும் பெருமான் கூறுவான். "தேவர்க்குத் துன்பஞ் செய்யும் தாருகனைத் தடியவே உன்னைத் தோற்றுவித்தேன். அந்தத் தாருகனது உடலிலிருந்து ஒரு சொட்டு இரத்தம் விழுந்தாலும் அது கருநிறமுள்ள அவனது உருவங்கொண்டு உயிர் பெற்றெழும். ஆதலின் அவனைச் சூலத்தால் குத்திச் சோரியை நீயே குடித்து விடு. அவன் உடலையும் விழுங்கி விடு" என்றனர். அது கேட்ட காளி களித்துத் தொழுது நின்றாள். ஈசனார் திருவுள்ளப்படி அக் காளியின் உருவினின்று யோகினி வெள்ளங்கள் அநேகம் தோன்றின. காளி எம்பிரானையும் அகில நாயகியையும் வணங்கி விடை கொண்டாள். அதனைக் கண்ட தேவர்கள் அச்சமொழிந்து அரனார்

திருவருளை வியந்தனர்; காளியைத் தனித்தனியாக வந்து வணங்கி மலர் மாரி சொரிந்தனர். பிறகு தேவதச்சனால் ஓர் இரதம் ஆக்கித் தந்தனர். ஓர் யோகினி தேரைச் செலுத்தக் காளி தேரிலேறினாள். விண்ணவர், முனிவர், 'சய சய' எனப் போற்றினர்.

காளியும் தாருகபுரத்தருகே போனாள். இச்செய்தியை ஒற்றர் சென்று தாருகற்குணர்த்தினர். தாருகனும் கோபித்துப் பெருஞ் சேனை வெள்ளத்தோடு தேரேறிக் களம் வந்தான். இருபுறச் சேனைகளும் எதிர்ந்தன. தாருகன் விட்டகணைகளால் யோகினிகள் பலர் சாய்ந்தனர். காளி விட்ட கடுங்கணைகளால் தாருகனுடைய கரி, பரி, காலாட் சேனையும் சுருங்கின. தாருகன் தேர், காளியின் முன்வந்தது. அவன் அவளது பயங்கர வடிவு கண்டு வியந்து "நீயார்? புலியை வெல்ல வந்த மானைப்போல, அயனாதியரை வென்ற என்னோடு போருக்கு வந்ததென்?" என்றான். காளியும் இடி இடித்தாற் போல் வெடிக்கச் சிரித்து "அசுர, கேள்! தேவரை நீ துன்பஞ் செய்ததால், உன்னைக் கொல்வதற்காக என்னை முக்கட் பிரான் அனுப்ப வந்தேன்! உன்னைக் கொன்று விழுங்கினால் என் பசியும் தேவர் துயரும் நீங்கும்" என்றாள். தாருகன், "அம்மையே! நீ சொல்லுவது அகன்ற ஆகாயத்தினைக் கையால் பற்றிக் கவ்வுவேன் என்பது போலாம். நீ பெண் ஆயிற்றே என்று இதுவரை கொல்லாமல் இருந்தேன்" என்றான். காளி, "இழிதொழில் அவுணா! பெண்ணென்று கூறினை. உலகமெல்லாவற்றையும் ஒரு கணத்தில் மாற்றி ஒடுக்குவது கயிலைப் பரனது சத்தி என்பது அறிகிலாயோ?" என்னக் கோபித்த தாருகன் வில்லை வளைத்து நாணேற்றி ஒலி செய்தார்த்தான். அண்டகூடமெல்லாம் வெடித்தன. தேவியும் அவ்வாறே செய்தாள். அவள் செய்த நாணொலி தாருகன் நாணொலியை அடக்கியது. பிறகு இருவரும் பெரும் போர் செய்தனர். பல

அஸ்திர சஸ்திரங்களை விட்டனர். அசுரன் வாயுவாஸ்திரம் விடத் தேவி நாகாஸ்திரத்தா லறுத்தாள். அவனும் நாகக் கணைவிடக் காளி கருடப் படையாலழித்தாள். அவனும் கருடப்படை விட, அம்மை, நந்திப் படையை அபிமந்திரித்து விட்டாள். அவனும் நந்திப்படையை விட இரு படைகளும் சிறிது போர் செய்து விட்டவர்களிடம் சேர்ந்தன. இவ்வாறு விட்ட கணைகளை எல்லாம் அழித்து நிற்கும் காளியைச் சிவன் படையால் அழிப்பேனென்று விட அவளும் அப்படை விட்டனள். அவைகளும் விட்டவர்களை வந்து அடைந்தன. கடைசியாகக் காளி ஓர் சூலப்படையை விட அது தானவன் மேல் பட்டுக் குருதி பொங்கவே, அவன் அயர்ந்து நின்ருன். அவனது இரத்தத் துளிகள் பூமியிற் சிந்தக் கூடாது என்பதைத் தேவி மறந்தாள். ஆகையால் தாருகனது குருதி தோய்ந்த மண்ணிலுள்ள ஒவ்வொரு துளியும் தாருகன் உருக்கொண்டு படைகளேந்தி பதினுன்குலகினும் நிறைந்தது. தேவர்கள் கலங்கினர். அவர்களும் காளியை வளைத்துக் கொண்டனர். உடனே காளி பரமன் கூறியவற்றை நினைவு கூர்ந்து அவ்வுருக் கொண்ட அவுணர்களைத் தானும் தன் பரிவாரங்களோடு கூடி விழுங்கலானுன். இது கண்டு சீறிய தாருகன், மனம் பதைக்க அவளைப் புடைக்க வந்தான். அவனைக் காளி சூலத்தால் மார்பிற் குத்தினுள் ; பாய்ந்த குருதியைக் கபாலத் தேற்றுண்டு, "பூதேவியின் சுமையை இறக்கினேன்" என்று அவுணன் உடலையும் எடுத்து விழுங்கி விட்டாள். தேவர்கள் மனத்துயர் நீங்கினர். ஆடினர்; பாடினர்; மலர்மாரி பெய்தனர். பிறகு காளி தாருகன்சேனைகளால் மாய்ந்த தன் படையினர் உயிர் பெற எழுப்பினள். அவர்களும் அவளைச் சூழ்ந்து போற்றினர்.

அவுணன் உடலையும் குருதியையும் உண்ட குமரி, மதி மயங்கிச் செருக்குற்ருள் ; யாழேந்திப் பாடிச் சமர்க்களத்து

ஆடினாள். அவள் தோழியர்களும் மண்ணும் விண்ணும் துளங்கக் கைகளைக் கொட்டியார்த்தனர். அவளது செயலால் எல்லோரும் மிக்க துன்பமுற்றனர். மாலு மயனும், இந்திரனும், முனிவர்களும் சிவனாரிடம் சென்று "தாருகனால் வந்த துயரைக் காளியின் மூலமாய்க் கருணை கூர்ந்து நீக்கினை. அதனால் செருக்குற்ற காளியால் வருந்துன்பமும் நீக்கியாட் கொள்ளுக" என இரந்தனர். அவளது செருக்கொழிக்க எண்ணிய சிவபெருமான் காளியோடும் தேவர் கணம் புடை சூழத் திருவாலங் காடடைந்தான். அங்கு வந்ததும் அரி யயனறியாத அடிமலர் சிவக்க அரன் ஆடத் தொடங்கினான். உடனே தருக்கிய குமரியும் பிரானை நோக்கி "ஐய! ஏன் வீணே ஆடுகின்றீர்! என்னொடும் இங்கு வாதுக்காடுவீர்" என்றாள்.

தேவதேவன் சடையில் வெண்பிறையைச் சுற்றிக் கொண்டு பாம்பு தொங்கியசைய, வேதச் சிலம்பு பதமலரிலிருந்து ஒலிகாட்டத், திருநடம் புரிந்தான். கண்ட விண்ணோரெல்லாம் மெய்ம்மயிர் பொடிப்ப, உரை குழறி, உள்ள நெக்குருகி, அன்பால் "அரகர" எனக் கைகுவித் திறைஞ்சினர்; நந்தி மத்தளம் கொட்டத் திருநடம் புரிந்தனர். யோகினிக் கூட்டமெல்லாம் கைகொட்டிடக் காளியு மாடினாள். எந்தையான சிவனார் அண்ட கூடமளவும் தம் காலைத்தூக்கி ஆடவும் காளி நாணங்கொண்டு தலைகுனிந்தாள்; மற்ற யோகினிகளும் ஆட்டத்தை நிறுத்தினர். இமையோர் அமலன்மீது முன்னிலும் மும்மடங்கு பூமழை பொழிந்தனர். காளியஞ்சி, "பெரும! உம்மை மதியாது எளியேன் செய்த தீமையைப் பொறுத்தருள்க" என வேண்டினாள். சடைக் கடவுளும் "இந்தத் திருவாலங்காடிற்குத் தென்திசையில் கூவபுரம் உள்ளது. அது கயிலைக்கு ஒப்பானது. அங்கு உலகினை இரட்சிக்க நாம் திருநடம் புரிவோம். அதனைத் தரிசிக்கும் அத்தலத்தோர் நந்தி கணத்தில் ஒருவரெனக்

கருதுவாயாக. நீயும் வெப்பு முதலிய நோய், வறுமை, பேய் விலங்குகளால் வருந்துயரும் நீங்கப்பெறுவாய். என்னோடு நடனமாட வாதுக்கழைத்ததால் உனக்கு ‘ **தருக்கமாதா** ’ என்ற பெயர் வழங்குக நீ தென் திருக்கூவ நகரைக் காவல் செய்து பீடைகளை அழிப்பதால் **பீடாரி** (பிடாரி) என விளங்குக ” என்றார். காளியும் “ என் பிழைநீக்கி யாண்ட பெருமானே ! அவ்வாறே செய்வேன் ” என விடை பெற்றுப் போயினள். பின்பு காளி கூவஞ்சேர்ந்து பெருமான் ஆலயம் புகுந்து ஆலங்காட்டிடை அரனார் வகுத்த வண்ணமே கூவநகர நடனங் கும்பிட்டு அவ்வூர்க் காவலா யமர்ந்தனள்.

இத் தலப் பெருமையை வியாதனார் கூறிய வகையில் யான் அறிந்தபடி சிறிது திருவருள் கொண்டு கூறினேன். இக்கதையை ஒருமுறை கூறச்செய்து கேட்டவர் பிரமனுவர். இரு முறை சொல்லக் கேட்டால் திருமாலாவர், மும்முறை கேட்டால் என்னை யாளும் கயிலைக்கிறையின் சாரூபம் பெறுவர்.

கூவபுராணம் ஓதுவார்க்கும் கேட்போருக்கும் பேய், விலங்கு, கிரகக் கோளாறுகள் உண்டாகா. அகால மரணம், தீக்கனவு, மிடி, பிணி இவை இல்லை. இதனை எழுதுவார் வினையை எமன் கணக்கர் தமது ஏட்டி லெழுத மாட்டார்கள். அன்போடு படிப்பவர்களும் கேட்பவர்களும் மக்கட்பேறும், அழியாவாழ்வும், அட்டமா சித்திகளும், விரும்பியவை யெல்லாமும் அக்கணமே பெறுவர். ஏழுலகிலும் அவர்க்கு அரியதில்லை.

இதனைப் படித்து விரிவுரை கூறும் வித்தகரைத்தொழுது நல்ல வாகனங்களிலேற்றி, பல வாத்தியங்கள் முழங்க, நகர் வலஞ்செய்விக்க வேண்டும். இப்படிச் செய்வோர் கோடி பாவமியற்றியிருந்தாலும் நீங்கி எண்ணிய எண்ணி

யாங்கு எய்தப் பெற்றுத் திருவிற் கோலநாதரருளால் சிவ கதியும் பெறுவர் எனச் சூதர் கூறினர். நைமிச வனத்து மாதவர்களும் விற்கோல நாதனைப் போற்றி ஞானம் பெற்று மல மாசுநீங்கி பரமுத்தி பெற்றனர்.

சுருக்கமி லறிவுடைச் சூத மாதவன்
றிருக்கிளர் கூவமா நகர்ச்சி றப்பெலா
முரைக்கவுண் மகிழ்ந்துகை யுச்சி கூப்பிமா
லிரிக்குநன் முனிவர ரியம்பன் மேயினர். 1

முன்ன நீதருக் கமாதென மொழிந்தவ
டன்னது தோற்றமென் றனிப்பொற் கூவமா
நன்னக ரிடைநட மாட வந்தவா
றென்னகொ லியம்பென விசைத்தன் மேயினன். 2

பேரறங் களுநிலை பெயரக் காமநோ
யாருத லெனநிக ழகிலம் யாவையுங்
கூரிடர் மூழ்குபு குலைய மேலைநாட்
டாருக னெனவொரு தகுவன் றோன்றினன். 3

சேண்டொடு தனதுடற் சிந்து செம்புனற்
காண்டுளி முழுதுந்தற் கடுத்தெ ழுந்திட
வாண்டகை யோர்களா லழிவு றுதுற
மாண்டகு தவத்தினன் வரம்ப டைத்துளான். 4

எண்டிசை யரையரை யெழுபி லத்தினில்
விண்டல மிசையுறு வேந்தர் தங்களை
மண்டிதன் சேனைகா வலர்க ளால்வயங்
கொண்டனு தினமுங்குற் றேவல் கொள்பவன். 5


தறுகண்வெஞ் சினக்கொடுந் தாரு கன்றிசை
யுறுகரி தினந்தொறு மொரோவொன் ருகவே
குறுகிய தூதராற் கொணர்வித் தேறியோர்
மறுகென வுலகெலாம் பவனி வந்துளான். 6

ஒள்ளொளி யிரவிதேர்க் கிள்ளை யொத்தவேழ்
கிள்ளைகண் மீதுமொண் கிண்கி ணிச்சரண்
பிள்ளையேழ் தினத்தினு மேற்றிப் பேரெழின்
ஞெள்ளலி னுலாவரு வித்து நீக்குவான். 7


கொம்மெனப் புறவடி கொண்டொ ரெற்றினுன்
மைம்மலி திரைக்கடல் வறப்ப வெற்றுவான்
செம்மக மேருவி னேடு சிற்சிலம்
பம்மனை யெனவெடுத் தாடு மாற்றலான். 8

வானிதி நந்துதா மரைதன் வாவியிற்
பானிகழ் வளையொடு பதும மாகவே
யானிரை தனிற்பசு வாகத் தேனுவைங்
காநகர் மலர்ப்பொழி லாகக் கண்டுளான். 9


வித்தக விடையினேன் வில்லிற் பொன்கவர்ந்
தத்தனு வளைவுற வசைத்த நாரியின்
மெத்தொளி மணிகொளா வியப்ப வாக்கிய
புத்தணி யவயவம் புனைந்த மாட்சியான். 10

மணங்கமழ் குழலர மகளிர்ப் பற்றிவந்
திணங்குறு தகுவியர்க் கேவல் செய்வியா
வுணங்குறு சிறைபுரிந் துடன்ற ணக்கியே
யணங்கிய ரெனும்பெய ரவனிட் டானரோ. 11

மேயதன் றிகழவை விளங்க ராவிறை
மாயிருந் தலைகளே வனைந்த தம்பமா
மீயிலங் கொளிமணி யிருள்வி ழுங்குறு
மாயிருஞ் சுடர்களா யமர வைத்துளான். 12

ஒல்லையிற் பொழுதுணர்ந் தோலக் கத்துறு
மெல்லையிற் புகுந்திடா திருந்த தேவரைக்
கொல்லுலைக் கனல்விழிக் கொடிய தூதரான்
வல்லியிட் டருஞ்சிறைப் படுத்த வன்மையான். 13

கனவினு மவன்றனைக் காணி னிந்திரன்
மனநடு நடுங்கிவாய் குழறி வல்லையி
னனவினை யடைந்துபின் னடுங்கு நெஞ்சகத்
தினைவுற லொருபக லெலாமொ ழிந்திடான். 14

ஒருங்குல கங்களி னுயிர்க ளுக்கெலாம்
வருங்கொடு நோயென வரும வன்றனு
லருங்கட வுளரருச் சனைய றங்கள்வான்
றருங்கலை நெறிமகந் தவம கன்றதே. 15

அக்கொடுந் தயித்திய னுணை யிற்படா
வுக்குநெஞ் சிடர்ப்படுங் காலத் தோர்பகன்
மிக்கவிண் ணவரரி விரிஞ்ச னிந்திரன்
றெக்கொருங் கொருபுடை துயரொ டண்டினுர். 16

தங்கள்வெந் துயருமத் தகுவ னுவியு
மங்கொருங் கழியுநா ளடுத்த தாதலாற்
சங்கரன் றனையினிச் சரணென் றெய்திடின்
மங்குநந் துயரென மனந்து ணிந்தனர். 17


துணிந்தவர் கயிலையைத் தொழுதங் கெய்துபு
தணிந்தமெய்ம் மனனுடைத் தவத்தர் சென்னிமீ
தணிந்திடு நந்திதா ளரண டைந்துநேர்
பணிந்தன ரினையன பகர்தன் மேயினர். 18

தடுத்தசெங் கோலுடைத் தாரு கன்றனு
லடுத்தவெந் துயருரைத் தகற்ற வந்தனம்
படைத்தெமை யளித்திடும் பராப ரன்முனம்
விடுத்தரு ளையநீ யென்று வேண்டினர். 19

தன்னைநேர் கின்றவன் சைவ தேசிக

னென்னையா ளுடையநந் தீசன் சென்மென
மின்னுலாஞ் சடையினேன் வீற்றி ருந்துழித்
துன்னுவா னவரெலாந் தொழுது போயினர். 20

வருணமா மணியொளிர் மண்ட பத்திடைத்
தருணவா ரணப்பகைத் தவிசின் மீமிசை
யருணகோ டிகடிரண் டமர்ந்த தென்னவாழ்
கருணைவா ரிதிதனைக் கண்டி றைஞ்சினர். 21

விழிப்புன றுளிப்பமெய் விதிர்ப்ப வாளெரி

யுழிப்படு மரக்கினெஞ் சுருகி வெந்துயர்ச்
சுழிப்படு மெனக்கருள் சுரக்கு மீசனை
மொழிப்பயன் பெறத்திரு முன்னின் றேத்துவார். 22

வேறு

வானு திகளாய் நிகழ்வாய் சரண
மறைமா முடியின் பொருளே சரண
முனு ருயிரே சரணஞ் சரண
முணர்வுக் குணர்வே சரணஞ் சரணந்

தேனார் மொழிபங் கினனே சரணஞ்
சிவசங் கரனே சரணஞ் சரண
மானா வமுதே சரணஞ் சரண
மருளா கரனே சரணஞ் சரணம். 23

மருவே மலரே சரணஞ் சரண
மணியே யொளியே சரணஞ் சரணந்
திருவே பொருளே சரணஞ் சரணந்
தேனே யமுதே சரணஞ் சரண
மிரவே பகலே சரணஞ் சரண
மெமையா ளுடையாய் சரணஞ் சரண
மருவே யுருவே சரணஞ் சரண
மருளா கரனே சரணஞ் சரணம். 24

### வேறு

என்றிவை புகன்று போற்றி யிணைமலர்க் கரங்கு வித்து
நின்றவர் தமைமென் கொன்றை நெடுஞ்சடைக் கடவு ணோக்கிப்
பொன்றிகழ் மரைதீப் பட்ட போன்முகம் புலர்ந்த வுங்கட்
கொன்றிநெஞ் சகன்றி டாத துயரமே துரைத்திரென்றான்.

பெருந்தகை யியம்ப மாயோன் பெயர்வின்றிப் பொருள்க டோறு
மிருந்துட னியக்கு கின்ற வெந்தைநீ யெங்க ணெஞ்சி
னருந்துய ரறியாய் போல் வினவிய தடியே முய்யப்
பொருந்திய கருணை யென்று போற்றிநின் றுரைப்ப தானான்.

தாருக னென்ன வெய்ய தயித்திய னொருவன் றோன்றிப்
பாரிடை முன்னை வேதம் பகர்மக மறத்தின் பேதஞ்
சீரிய தவங்க டானஞ் சிதைந்தன துன்ப மெய்தி
யாருயிர் தரித்தி ருந்தா ரமரரா கையினால் விண்ணோர். 27

சற்றுமுட கருணை கொள்ளாத் தாருக னிழைத்த தீமை
யிற்றெனக் கிளக்க வெம்மான் முடிவுறு தெம்பி ரானே!
மற்றினிப் புகல்வ தென்கொல் வலிகெழு மவன்ற னக்குன்
சிற்றடிக் கேவல் செய்யுஞ் செயலெனத் தினமுஞ் செய்தோம். 28

அந்தவே லவுணன் றீமை யாற்றரி தெங்கட் குந்தன்
கந்தவா ரிசப்பொற் றுளே காப்பென வபயம் புக்கே
மெந்தைநீ யெம்மைத் துன்பக் கடலினின் றெடுத்தாட் கோடி
தந்தையே யன்றி வேறுர் தனயர்த மின்ன றீர்ப்பார்? 29

அச்சுத னெனுமென் னுமத் தமரரென் சுரர்க ளுமத்
திச்சக மறிய நின்ற முதலெழுத் திகவா தொன்ற
நச்சினை மிடற்ற டக்கு நாதவந் நஞ்சிற் றீயன்
கைச்செமத் தினமொ றுக்குங் கடுந்திறற் றுரு கன்றுன்.

எம்முயி ரொழியா தென்று மிருந்திடர்ப் படவ ருத்து
மம்மற வனையட் டாட்கொள் ளஃதின்றே லடியே மெல்லா
மிம்மென விமைப்பின் மாள வெமைமுனம் புரக்க வைத்த
வெம்மைகொண் மணிமி டற்றின் விடத்தைவிட் டிடுதி யையா. 31

என்றர வணையிற் றுஞ்சு மெழிலரி யியம்பக் கேட்டுப்
பின்றிகழ் சடிலக் கற்றைப் பெருந்தகை யருண்மீ தூர
வன்றிற லவுணன் றன்னை மாய்த்துவா னவர்க ணெஞ்சந்
துன்றுறு துயர னைத்துந் தொலைத்திட வுளங்கொண் டானல். 32

வன்மனத் தவுணர் கோமான் வரத்தொடு வலியு முள்கிப்
பொன்மலைச் சிலைகு னித்துப் புரமெரி படுத்த வெம்மான்
சின்மயக் கிரிப யந்த தேவிதன் வதன நோக்கி
மென்மலர்க் கரந்த னுது மிடற்றினு லத்து வைத்தான். 33

வைத்தவக் கணத்தி னெண்டோண் மலைபிணைத் தன்ன கொங்கை
மெய்த்தழற் கொழுந்து போலு மென்சிகைகுழைதா வால
மொத்தகட் பேழ்வாய் வாரி யுண்முகில் புரையு மேனிக்
கைத்தலக் கழுமுட் டுங்கக் காளிவந் துதித்தாண் மன்னோ

அண்டகோ ளகையிற் ருக்கி யணிமுடி வளைய மிக்க
வெண்டிசா முகத்தி னெல்லை யெண்புய மளப்பக் கண்கண்
மண்டுதீச் சொரியச் சூலம் வண்கையிற் றிரியவூழிக்
கொண்டலா யிரமு ழங்குங் கொள்கையினதிர்த்தெ ழுந்தாள். 35

செந்தழ றனக்கு வெம்மை யியல்பெனச் சீற்ற மென்று
மந்தமில் குணமா யுள்ளா ளடைந்தவர்க் கருளுஞ் செய்வா
ளிந்தவண் டங்கள் கோடி யியற்றிட வெண்ணு நெஞ்சா
ளுந்துறு மாற்ற லாலெவ் வுலகினு முவகை யில்லாள். 36

மைந்நக நடுவட் சூழ்ந்த மாலையின் செக்கர் போலத்
தன்னரை விரித்து டுத்த தயங்குசெந் துகிலின் பொற்பாள்
கொன்னுனை வடுகன் சூலக் கொடும்படை நிகர்த்த சூல
மன்னிய மலர்க்க ரத்தாண் மணிச்சிலம் பரற்றுந் தாளாள்.

ஞாலத்தி னுயிர்க ளெல்லா நடுங்குறக் கரத்திற் கொண்ட
சூலத்தி னுதியிற் குத்திச் சோரியுண் டிடக்கு றிப்பாள்
வேலைத்திண் டிரையிற் றேன்றி யுலகெலாம் விழுங்க வந்த
வாலத்தி னுதித்தா ளென்ரு லஃதவட் கடுத்த தன்றே. 38

உன்னரு முதிர்சூன் மேக மொத்ததிர்த் தெழுந்த செங்கட்
கன்னியை யுமைகண் டேங்கிக் கைவிர னெரித்துச் சென்று
தன்னிக ரமலன் மார்பிற் பண்டுறு தன்ற ழும்பிற்
பொன்னவிர் சுணங்கு பூத்த முலைபடப் புல்லிக் கொண்டாள்.

அன்னவ ளெழுதல் கண்ட வச்சுத னெம்பி ரான்முன்
பின்னுரை செய்த வாறே பெருவிடத் தினைமா தாக்கி
யிங்கிலை யெமைவ தைப்ப விடுத்தன னென்ன மாழ்கித்
தன்னக மருண்டு நின்றான் சதுர்முக னுடல்கம் பித்தான். 40

இந்திரன் மனந்த ளர்ந்தா னெரியுடல் வெயர்த்தான் கொல்லு
மந்தக னாவு லர்ந்தா னிருதிமெய் யயர்ந்தா னேனைச்
சிந்துமீ னிறைவெ ருண்டான் சமீரணன் றிகைத்தான் மூர்ச்சித்
துன்துறு குபேரன் வீழ்ந்த கனுயங்கி யீசான னின்றான்.

ஏனைய வும்ப ரெல்லா மெழுந்தமா காளி கோர
மேனியை யெதிர்கண் டேங்கி விழிபுதைத் தனரவ் வேலைக்
கூனல்வெண் பிறைமி லைந்த குரிசிலோ டகில மீன்ற
ஞானநா யகியைத் தாழ்ந்து நவிலுமச் சூலி மாதோ. 42

## வேறு

பரம வென்னைப் படைத்தவ நானிவண்
புரியு மேவல் புகன்றரு ளன்னதுன்
னருளி னாற்றுவ னென்ன வரன்சுரர்
வெருவு நெஞ்ச மகிழ விளம்புவான். 43

தேவ ரென்றுஞ் செயத்தக வல்லகுற்
றேவல் செய்ய விடர்புரி தாருக
னாவி கொண்டவர்க் காக்க முதவுவான்
பாவை நின்னைப் படைத்தன மென்றரோ. 44

காரி பட்ட கடுந்தொழிற் றாருகன்
சோரி பட்ட துகளு மனையவன்
மாரி பட்ட வடிவுகொண் டுறறெழு
மூரி பட்ட முகிண்முலைக் காளியே. 45

சூலத் தாற்குத் துபுசொரி சோரிக
பாலத் தேற்றுப் பருகி யவனெடு
நீலத் தாக்கையை நீயே விழுங்குதி
யாலத் தோடுதித் தாயென் றறைந்தனன். 46

குனித்த வார்சிலைக் குன்றினன் றம்மன
நினைத்த வாறு நிகழ்த்தின ளுதலாற்
கனத்த வார்முலைக் காளி மகிழ்வுறீஇ
நுனித்தோர் மாற்ற நுவலுதன் மேயினள். 47

அண்டர் நாத வளியன் றனக்குநீ
யுண்ட லேபணி யாக வுதவினை
தொண்ட ராகநிற் சூழ்ந்திடு வோர்தமுட்
கொண்ட நின்னரு ளென்னிடைக் கூர்ந்ததே. 48

ஐய நீயென் பணித்தனை யன்னதே
செய்ய நான்கட வேனெனச் செப்பியே
கையின் மான்மழுக் கொண்ட கடவுடன்
றுய்ய தாளைத் தொழுதுநின் றுளரோ. 49

அன்ன காலைய னீகம தாகவே
கன்னி யோகினி வெள்ளங் கணிப்பில
மன்னு காளி வடிவி லுதித்தெழ
வென்னை யாளுடை யீச னினைந்தனன. 50

அக்கு மாரி யனைய வடிவொடு
கைக்க பாலங் கழுமுட் டிகழ்தர
மிக்க யோகினி வெள்ள மசனியே
ரெுக்க வார்த்தவண் மெய்ந்நின் றுதித்ததே. 51

ஏந்தை சென்னி யிளம்பிறை யொத்தபல்
கந்த ரத்திற் கடுவை நிகர்த்தமெய்
செந்த ளிர்க்கைச் செழுங்கனல் போன்றகண்
ணுந்து முத்தலை யோகினி கட்கரோ. 52

## வேறு

கண்ணு தற்பர மன்பினர்க் காளியை நோக்கி
யெண்ணி லித்திறல் யோகினி வெள்ளமோ டேகிப்
புண்ணி யப்பகைத் தாருக ளுவியைப் போக்கிப்
பண்ண வர்க்கருள் செய்யென வேவினன் பணித்து. 53

எம்பி ரானையு மகிலநா யகியையு மிறைஞ்சிக்
கும்ப மாமுலைத் தறுகண்யா மளைவிடை கொண்டு
செம்பொ னுலயப் புறத்துவந் தடைந்தனள் செறிந்த
வும்ப ராங்கது கண்டனர் மனப்பய மொழிந்தார். 54

தேறி னர்மன மெம்பிரான் றிருவருட் செயலைக்
கூறி னர்மகிழ்ந் தொருவர்மே லொருவர்தாங் குப்புற்
றேறி னர்கரங் கொட்டினர் பாடினு ரிருகான்
மாறி னர்சுழன் றுடினு ரரன்புடை வந்தார். 55

அந்த ணுவெம தாருயிர் போக்கவன் றதிர்த்து
வந்த காளத்திற் காளியை வருவித்திங் கவளை
யெந்த மாவியை நிறுவிடப் பணித்தனை யின்று
நுந்த மாரருட் பெருமையா ரறிபவர் நுவலின். 56

என்ன வீசன தருடுதித் திறைஞ்சுபு விடைகொண்
டன்னை யாகிய யாமளை புடையின்வந் தடைந்து
மன்னும் வானவ ரனைவருந் தனித்தனி வணங்கித்
துன்னு மாமலர் மழையவண் முடிமிசைச் சொரிந்தார். 57

சொரிந்த விண்ணவர் தங்கள்கம் மியற்கொடு சூல
மிருந்த கையுடை யாமளைக் கேற்றதோ ரிரதம்
விரைந்து நன்குற வாக்குவித் தளித்திதன் மீது
பொருந்தி நண்ணலற் செகுத்திடப் போதுதி யென்று. 58

புகழ்ந்து நிற்பவவ் விரதத்தின் பொலிவினை நோக்கி
மகிழ்ந்து மற்றதைக் கடவவோர் யோகினி மாதைப்
பகர்ந்தி ருத்தியெண் டோளியா யிடையதிற் பாய்ந்தா
ணிகழ்ந்த நன்முனி வராசய சயவென நிகழ்த்த. 59

தலைவி யாகிய யாமளை யிவரவத் தடந்தேர்
வலவி பாரிடைத் தூண்டினள் காற்றென வலிதி
னிலவி மூவிலைப் படைகொடு யோகினி நீத்தஞ்
சுலவி வேலையி னெண்மடங் கார்த்தன சூழ்ந்து. 60

நிலத்தி னேகின வாகனத் தேகின நிமிர்பா
தலத்தி னேகின முகிலிடத் தேகின தடத்த
புலத்தி னேகின கடலகத் தேகின பொருப்புக்
குலத்தி னேகின குமரிதன் பெண்படை குழுமி. 61

துடிய திர்ந்தன பதலைக ளதிர்ந்தன துளைச்சங்
கிடிய திர்ந்தன காகள மதிர்ந்தன விரலை
வெடிய திர்ந்தன முரசதிர்ந் தனபணி வேந்தின்
முடிய திர்ந்தன வதிர்ந்தன தரணியு முழக்கால். 62

மிக்க யோகினிப் படைசெலப் பொடிவிசும் பிவர்த
லிக்கு மேவியெற் காலொடுங் தொடத்தகா தெனவே
புக்கு ருர்முடி யிவர்ந்திமை யவரெனல் போக்கி
மக்கள் போற்புரி கிற்பனென் றேகுதன் மானும். 63

காரம றைத்தன திசைகளை மறைத்தன கதிரின்
றேர்ம றைத்தன குலகிரி மறைத்தன திரைமுந்
நீர்ம றைத்தன வுடுக்கண மறைத்தன நெடுவா
னூர்ம றைத்தன மறைத்தன வுலகெலாம் பூழி. 64

தொடுக்கு மாலையங் குவிமுலைச் சூலிதா ரணியை
யெடுக்கு நாகமெய் நெளித்தல மரவதிர்த் தெழுந்து
நடக்கும் யோகினி வெள்ளமோ டமரர்நன் னதிமட்
டடுக்கு மாமதிற் றருக புரத்தய லடைந்தாள். 65

## வேறு

ஒற்ற ரன்ன துணர்ந்தன ரோடினர்
கொற்ற மன்னன் குருமணிப் பொற்றவி
சுற்ற போவை யுற்று வணங்குபு
முற்றும் வெஞ்சின மூண்டெழக் கூறுவார். 66

ஐய நீவின் னவர்ப்பணி கோடலாற்
கையு லாம்படைக காளி யெனவொரு
தையல் யோகினித் தானைக ளோடமர்
செய்ய விவ்வுழிச் சேர்ந்தன ளென்றனர். 67

அந்த வொற்ற ரறைந்திடு மவ்வுரை
சந்த னப்புயத் தாருகன் சீற்றமா
முந்து முட்கனன் மூண்டெழக் கூறிய
மந்தி ரத்தை நிகர்த்தது வந்தரோ. 68

பன்னு மம்மொழி பாதி செவிபுகு
முன்னந் தீச்சின மூண்ட தவனகந்
துன்னு றும்புகை துண்டத் தெழுந்தன
வன்னி வெம்பொறி வாட்கண் சிதறின. 69

மட்டில் வெஞ்சின வன்னி யறிவினேச்
சுட்ட திவ்வள விற்றுலை கின்றதோ
கிட்டி ஞேரையுங் கேளேயுந் தன்னேயு
மட்டி டுந்துணே யும்ம வியாததே. 70

இதழ துக்கி யெயிறு கறித்தன
னுதன்மி சைச்செல நூக்கு புருவியாய்
மதர ரிக்கண் மலர விழித்தனன்
முதிர்சி னத்தினன் மீசை முறுக்கினுன். 71

பொன்றில் கற்பகப் புட்க ளெழுக்கர
மொன்ருெ டொன்றுறத் தாக்கி யுருமுவீழ்
கின்ற தென்ன நகைத்தனன் கேட்டசொன்
னன்று நன்றெனச சீறி நவிலுவான். 72

அடியொன் ருலுல கியாவு மளந்தமா
னெடியன் ருனுமென் னேவலி னின்றிடும்
படியன் ருற்றுமென பாலமர்க் கென்றுபெண்
கொடியோன் றெய்திலென் கொற்றநன் ருகுமால். 73

இந்தி ராதிக ளியாரையும் வெ றிடு
மந்த மேவரு மாற்றலுண் டென்னிடை
வந்து ளானொரு மாதமர்க் கென்னுமிந்
நிந்தை தானுயிர் நீங்கினு நீங்குமோ. 74

புவனம் யாவினும் போர்த்தொழில் வந்துசெய்
பவரி லாமையிற் ருேட்பய னின்றியே
கவலு நெஞ்சினன் காரிகை யோடமர்
நவிலி லோர்பழி நண்ணின ஞவனுல். 75

என்னை வெல்லவிங் கேந்திழை யெய்தலான்
மின்னை வெல்ல வுரகமு மேவுமான்
மன்னை வெல்ல மலையும் வரும்புலி
தன்னை வெல்ல வுழைகளுஞ் சாருமால். 76

கண்ணன் வேதன் கடவுள ரிந்திர
னண்ணன் மாமுனி வோர்க ளபயமோர்
பெண்ணின் பாற்புகும் பெற்றிமை யாலவர்
நண்ணு மாண்மை நனிசிறந் திட்டதால். 77

வேறு

இந்திரற் பிடித்தெடுத் தெற்றி வீழ்ப்பனோ
வந்தகற் படைத்திட வடித்துக் கொல்வ னோ
சந்திரற் கதிரொடு மெடுத்துத் தங்குபூம்
பந்தெனப் புடைப்பனோ படியிற் பாணியால், 78

கனலியை விழுங்கியேழ் கடலு முண்பனோ
சினமற வமரரைப் பதத்திற் றேய்ப்பனோ
முனிவரர் குலமெலா முடிப்ப னோவென
வினையன பலபகர்ந் தெரியிற் சீறினன். 79

சீறிய தாருகத் தீயன் யாமனை
வீறிய வெனைத்தொழ மேவி னள்கொலோ
மாறமர் புரிந்திட வந்து ளாளகொலோ
கூறுதி ரொற்றினீர் குறிப்பென் னென்றனன். 80

என்றலு மொற்றர்க ளிறைஞ்சி யையகேள்
வன்றிறல் யாமனை மறலி தன்னையும்
வென்றிகொள் படையொடும் பொருதல் வேண்டியே
யொன்றின ளையமின் றுண்மை யுண்மையே. 81

மாதென வுளங்கொளே லவனை மன்னநீ
போதரு மசுரருஞ் சுரரு முட்கமுன்
மோதுறு திரைக்கடன் முகடடெ. ழுந்தவப்
பாதக நஞ்சமே படிவங் கொண்டதால். 82

உம்மென வவளுரப் பொலிகொல் கின்றதீ
வெம்மைகொ ணமனையும் வீட்டு மாயுதங்
கைம்மலை பரித்தவக் கண்ணற் கோர்தலைச்
சும்மைகொள் சுமையவ ளெடுத்த சூலமே. 83

வேறு

இனையன வொற்றர் கூறு மெல்லையிற் கடைநாட் பொங்கிக்
கனைகட் லுடைந்த தென்னக் காளிதன் றனை யார்க்கு
நனிபொலி செவிப்பு லத்து நடந்தது தாரு கன்றன்
சினவெரிக் கிழுது மன்றிச் சமிதையுஞ் சொரிந்த தேபோல். 84

ஆயது காலை தன்னி லழலினெண் மடங்கு சீறிச்
சேயிழை மகளிர்ப் பற்றிச் சிறைபுரிந் திடுவன் றாதீர்
போயென தனிக முறறும் பொருக்கெனத் தருதி ரென்ன
வேயின் னவரு நன்றென் றிறைஞ்சுபு விரைந்து சென்றார். 85

சென்றபி னவுணர் செம்மல் செருத்தொழிற் கோலங் கொள்வான்
கன்றியங் கெழுந்துட் போகிக் கதிரிளம் பரிதி நீலக்
குன்றின்வந் தெழுந்த தென்னக் குருமணி மகுடமொன்று
தன்றலை கவித்தான் யாருஞ் சயசயென் றெடுத்து வாழ்த்த. 86

கல்லென மிழற்றும் வீரக் கழலடித் தலத்தி லார்த்தான்.
மல்லலங் கச்சு வீக்கி மருங்கினிற் சுரிகை சேர்த்தான்.
புல்லுறு மங்கி மேனிப் புறந்தெரி யாது போர்த்தான்
வில்லுமிழ் சரம்பெய் தூணி வெரினிடைத் தூக்கி னுல்.

அங்கையிற் கோதை சேர்த்தா னணிவிரற் புட்டி லிட்டான்
கொங்கலர் தும்பை மாலை குருமணி மவுலி சூழ்ந்தான்
புங்கவப் படைய னந்தம் பூசனை புரிந்தெ டுத்தான்
செங்கையிற் றெழுது மேருச் சிலைநிகர் சிலையுங் கொண்டான். 88

இம்முறை யமரின் கோல மெய்தியொள் ளிலைவேன் மன்னன்
கொம்மெனத் தனதுகோயிற் புறத்தினிற் குறுகு முன்னந்
தெம்முனை முருக்குஞ் சேனை தரமுனஞ் சென்ற தூதர்
தம்மனந் தனில்வி ரைந்து தலைத்தலை பரவிச் சென்றார் 89

சென்றவ ரொட்ட கத்திற் செழுமுர செறிந்து நுங்கட்
கின்றொரு பெரும்போர் வந்து கிடைத்ததிங் கெழுக சேனை
யென்றலு மவுணர் வேழ மிரதமம் புரவி யென்னத்
துன்றுறு மனிக வெள்ளந் தொகையில வெழுந்த மாதோ. 90

போரெனச் செந்நெற் சூட்டுப் பெயரினைப் புகலுற் றலு
மேருறு தடந்தோள் வீங்கி யெங்ஙனென் றெழுந்து துள்ளும்
வீரர்க ளவுணர் தூதர் வெஞ்சமர்க் கெழுமி னென்ன
வாருறு பணைமு ழக்க மகிழ்ச்சிகொள் வதையென் சொல்வாம்.

வீங்கினர் புயங்க ணெஞ்சம் விம்மின ரமரிற் றுன்ப
நீங்கின ரெழுவும் வாளு நேமியு மழுவும் வில்லுந்
தாங்கினர் பகைஞ ரெங்ஙன் சார்ந்தனர் காட்டு மென்ன
வோங்குறு மண்ட கூட முடைந்தென வார்த்துச் சூழ்ந்தார்.

இந்திரன் வயிரந் தன்னாற் சிறகர்முன் னீரப் பட்ட
வந்தமில் கிரிக ளெல்லா மனையவன் பகைஞ னான
நந்துறு மவுணன் றன்பா னட்புற நடந்த வென்னச்
சுந்தரத் திகிரிப் பொற்றேர் திசைதொறுஞ் சூழ்ந்த வம்மா.

சோர்ந்துறு கற்பின் மாதர் துணிவுறு முள்ளம் வேருய்ச்
சேர்ந்திடு கொழுந ரேவற் றிருந்துறச் செய்யு மாபோ
லூர்ந்திடு பாகர் தம்பா லுளத்திடை முனிவு கொண்டு
கூர்ந்தவர் குறித்தல் செய்யுங் கொடுமத மாக்கள் சூழ்ந்த.

நிலத்திடைப் பாயுஞ் சென்று நெடுவிசும் பகட்டிற் பாயும்
பிலத்திடைப் பாயும் பாழிப் பெருங்கடன் முகட்டிற் பாயு
முலத்திடைப் பாயு ஞான வொருநெறி யோங்கு ருமற்
புலத்திடைப் பாயும் புல்லர் மனமெனப் புரவி யீட்டம். 95

ஈண்டிய வனிக நான்கு மெழுந்தன வவுணர் கோமான்
காண்டலு முவகை பூத்துக் கவனவாம் புரவி கோடி
பூண்டுறு மிரத மொன்றிற் பொருக்கென வாவிப் புக்குத்
தூண்டுறு வலவற் பாரா வினையன சொல்வ தானுன். 96

பாகனீ நொடிப்பின் மாதின் படையெதிர் நமது பொற்றே
ரேகுற விடுத்தி யென்ன விறைஞ்சிநின் றைய வென்ன
மாகவாம் பரிக டம்மை மத்திகைத் தொழிலா லுந்திச்
சேகுலா முருளைத் திண்டேர்ச் செலுத்தினன் விரைந்து செல்ல.

அடைப்பைகோ டிகங்க ளாஞ்சி யாலவட் டங்க ளொள்வா
ளொடுப்பவர் பலருஞ் சூழ விழிக்குறி காட்ட வந்து
படைப்புற மொய்க்கு மீக்க ளகற்றுறும் பரிசு போலப்
புடைப்பரி சனங்க ணின்று பொலியும்வெண் கவரி வீச.

தாருக மன்ன னேகுந் தன்மைகண் டனிக வெள்ளம்
வாரிதி யேழு முட்க வல்லிதி ஞர்த்தெ ழுந்து
சீருறு மனந்த ஞமப் பணியிறை சென்னி மாற்றப்
பாரம் போழ்பட் டேங்கப் படர்ந்தன திசைகண் முற்றும்.

படிமக ளசுர நீசப் பரிசனஞ் செய்த பாவ
முடிவுறக் கடவுட் கங்கை மூழ்குவான் படர்த லென்னக்
கொடியவெம் படைக ளார்த்துக் கொம்மென நடக்கு மேல்வைப்
பொடிவிசும் படங்க நுங்கி மீமிசைப் போயிற் றம்மா. 100

விண்ணெழும் பூழி மாலை வெண்குடை யடைந்தப் பாற்போய்க்
கண்ணகன் கதிரின் மேனிக் கவினழி யாத வண்ண
நண்ணுபு தடுத்த வாழி நஞ்சுதா னருந்தி முக்கட்
பண்ணவ னமரர்க் காத்த பேரருட் பான்மை யேபோல்.

நீங்கிய நாணுப் பெற்று நிறையழி கணிகை மாதா
தாங்களோ ருழியிற் கூடித் தத்தமின் மலைத லேபோற்
பூங்கழன் மிழற்றச் செல்லும் பொருநர்கைப் பற்ற விண்ணி
னோங்கியே கொடிக ளொன்றோ டொன்றுதாக் குற்ற வன்றே. 102

தழங்கின முரச மார்த்த தண்ணுமை கலித்த மொந்தை
முழங்கின படக மெல்லா மொய்ம்பினி னியவர் தாக்குஞ்
செழுங்கர விசைகட் கேற்பச் சிலம்பின புவனி மாந்த
ரழுங்குர லோசை யேற்று மடுக்கியன் றெழுத லேபோல்.

இவ்வகை யனிக மென்னு மிருங்கடல் விரைந்து சூழத்
தெவ்வடு குவவுத் திண்டோட் டிருகுளத் தவுணர் கோமான்
கொவ்வையங் கனிவாய்ச் செங்கட் குமரிதன் படைவந் தெய்து
மவ்வழி யெதிர்சென் றேற்று னமரர்க ணடுங்கி யேங்க.

மண்டுறு மவுண வெள்ள மலிந்தெதிர் வந்த தன்மை
கண்டனர் வடவை யேபோற் கனன்றியோ கினிகள் சூலந்
திண்டிற லோடு செங்கை விரல்களாற் றிரித்து மிக்க
வண்டகோ ளகைவெ டிப்ப வார்த்தெதிர் சென்று புக்கார்.

### வேறு

எழுக்களு முசலமு மிலைகொள் வேல்களு
மழுககளும் வளைகளும் வாளும் வாளியுங்
கழுக்களு மலைகளுங் கதையுங் காளிகள்
குழுக்களு மவுணர்மேற் கொதித்து வீசினார். 106

தோமர மொளிறுவாள் சுரிகை முத்தலை
நேமிகள் சிலையுமிழ் நெடுஞ்சி லீமுக
நாமவேன் முதலின நஞ்சிற் றீயவர்
தாமும்யோ கினிகண்மேற் றருக்கி வீசினார். 107

கரங்களின் முசலமுங் கதையு நல்கியே
யுரங்கிளர் சொரிமத வொருத்த லுந்தினார்
மருங்குற வொளிறுகை வாள்வி திர்த்துவன்
றுரங்கரர் சிகடமைத் தூண்டி யீண்டினார். 108

தார்கெழு தடம்புயத் தகுவ ராழியந்
தேர்களை முடுக்கியெண் டிசையுஞ் சூழ்ந்துகொண்
டேர்கிளர் கொடுமர மிமைப்பின் வாங்கிவிண்
கார்களின் மும்மைவெங் கணைகள் சிந்தினார். 109

விழுந்தன தலையுடல் வேறு வேறதா
யழுந்திட வரைகளி னற்றிற் செம்புன
லெழுந்தன விருதிறத் தினுமெண் ணில்லவ
ருழுந்துருள் பொழுதினி லுலந்து போயினார் 110

கண்டன ரவுணர்தங் களிப்பு மாற்றலு
மொண்டழ லெனவுள முருத்துப் பொங்கினு
ரண்டமு மிடிபட வதிர்த்து வல்லையின்
மண்டியோ கினிகடா மலைதன் மேயினார்.

பரியொடு பரிகளும் பனைக்கை மும்மதக்
கரியொடு கரிகளுங் கதிரு லாமணி
யிரதமொ டிரதமு மெடுத்து வீசினர்
சுரருள மகிழ்வொடு துணங்கை யாடவே. 112

சிறந்திடு நெடுமணித் திகிரித் தேர்களை
யுறைந்தவ ரொடுமெடுத் தும்பர் வீசினா
மறந்தரு பெருவலி மாரு தம்பறித்
தெறிந்திடு மேருவின் முடிக ளென்னவே. 113

கொய்யுளை மாவும்வெண் கோட்டு வேழமு
மொய்யென வேயெடுத் துகைக்கின் றேருடன்
மையலில் சூரர மகளிர் வீசினர்
வெய்யவன் றேரொடு விலங்க விண்ணின்மேல். 114

அருகுறு மவுணரை யடர்ந்து பற்றியே
கருகுறு மிடற்றினைக் கடித்துக் கொக்கிடைத்
திருகுறு கனியெனச் சுவைத்துச் செம்புனல்
பருகினர் முனிவொடு பசிசற் றுற்றினர். 115

பிடித்தனர் குருதிநீர் பிலிற்றக கைகளா
லடித்தன ரவுணர்தம் மாகளை யென்பெலா
மொடித்தனர் நகநிரை யுதிரத் தண்டினு
லிடித்தன ருயிரைவிண் ணேற்றி னரரோ. 116

வேறு

வெருட்டின ருதைத்தனர் மிதித்தனர் துகைத்தார்
மருட்டின ரிடித்தனர் வளைத்தனர் செறுத்தார்
புரட்டின ரெடுத்தனர் புடைத்தனர் கறுத்தா
ருருட்டினர் தயித்திய ருயிர்க்கிட ரிழைத்தார். 117

அடுத்தவ சுரக்குழு வெடுத்ததி ருறுங்கா
ரிடத்தினு நகத்தினு நிலத்தினு மெறிந்தார்
நொடித்திடு வரைப்பினு ளொறுக்கின ரனந்தம்
படைத்தலை வரைப்பதை பதைத்திட வறைந்தே. 118

இத்திறமி யோகினிக ளெங்கணு நெருங்கிக்
கொத்தசுர வெள்ளம யுதங்கடிது கொன்று
ரத்திற மனைத்துமொ ரடற்புய வமைச்சன்
னெய்த்தழ லெனக்கனலு நெஞ்சமொடு கண்டான் 119

கண்டவ னிலங்கிரத மங்கெதிர் கடாவி
விண்டுமக மேருவும் வெடித்திட வதிர்த்து
வண்டுபொழி கின்றதனி வார்சிலை வளைத்துக்
கொண்டொரு கணத்தினி லடைந்தடல் குறித்தான். 120

குறித்தவ னதிர்ப்பொடுபெய் கொண்டல்க ணிகர்ப்பப்
பிறைத்தலை நெடுஞ்சர மதிர்ப்பினொடு பெய்து
மறைத்தன னிருந்திசைகள் வஞ்சனிகள் சென்னி
யறுத்தன னுருட்டின னலக்கணுற விண்ணோர். 121

கரத்தினை யறுத்தன கழற்றுணை யறுத்த
புரத்தினை யறுத்தன புயத்தினை யறுத்த
சிரத்தினை யறுத்தன செருக்கினை யறுத்த
வரத்தினை யறுத்தன வமைச்சன்விடு வாளி. 122

வேறு

மண்டு மாரழற் கடவுளை வந்தலைக் கின்ற
சண்ட மாருத மெனப்புகுந் தமைச்சர்க டலைவன்
வண்டு மாமழை பொழிந்தியோ கினிகளை மலையக்
கண்டு தானையந் தலைவியுங் கொருத்தியுட் கனன்றாள்.

அந்த யோகினி யசனியே றுக்கிட வதிர்த்தே
யிந்த நீசன துயிர்குடித் திடுவனென் றிமைப்பின்
வந்து கூடியக் கடுந்திற லமைச்சனே வானத்
துந்து மாழியந் தேரொடு முடனெடுத் தெறிந்தாள். 124

வீர யோகினி யவனது வீரக்கு மகிழ்ந்தே
யேரு லாவுறு துறக்கமே லேவின னென்னத்
தேரொ டேயெடுத் தெறிந்திடத் தினகரன் றிருத்தே
ரூரும் வானெறி கடந்துபோ யொல்லையின் மீண்டான்.

மீண்டு வீழ்பவன் மேலொரு பெருங்கதை விரைந்து
தூண்டி ஞளதிர்த் தவனது வுணர்ந்துதுண் ணெனவோர்
நீண்ட வாளெடுத் ததிர்த்திர தத்தினு னீங்கித்
தாண்டி வாளிடைத் துணித்துவண் டரைதனிற்குதித்தான்.

இரதம் வீழ்ந்துநுண் டுகளதா யிற்றதவ் வேலை
நிருதன் வான்கதை துணித்துமண் குதித்தவ ணிற்பக்
குருதி கால்விழிச் சூர்மகள் கண்டுளங் கொதித்துப்
பரிதி போலொளிர் கின்றவெம் பரிதியொன் றுய்த்தாள்.

உய்த்த வாழியம் மாயவன் னேமிபோ லுருத்து
மெத்து தீயுமிழ்ந் துறுசெயல் கண்டுவில் வளைத்துப்
பத்து நூறெனும் பகழிக டுரந்தது துணித்துத்
தத்து வார்த்திரைக் கடலென வார்த்தனன் றருக்கால். 128

திகிரி மாய்வுறக் கனன்றன டிகிரியொன் றெழியிற்
பகரு மாதியப் பெயர்த்தினை யொல்லையிற் பறித்து
நிகரில் வீரன்மே லெறிந்தன ளஃதவ னீக்கா
னகல வாகுவி லேற்றன ஞர்த்தெதிர் புகுந்து. 129

அந்த வெற்பவ னடற்புயந் தாக்கிமீண் டதிர்ந்து
வந்து பட்டவண் முலைத்தடத் திற்றது வறிதே
முந்து மற்றவர் புயமுலைக் குடைந்திடு முனிவா
லுந்த வுற்றவை யொடும்பொரு திறந்தவா றெப்ப. 130

வெய்ய வொண்கிரி யிற்றலும் விரைந்துவில் வணக்கி
யையி ரண்டுவெம் பகழிக ளவனுத லழுத்திக்
கையில் வன்கதை யொன்றெடுத் திமைப்பினிற் கலந்து
மொய்யி லங்கவன் முடிமிசை மோதினன் முடிந்தான். 131

முன்னர் மெய்யொடும் விசும்பிடை யேற்றிஞெண் முனிந்து
பின்னர் மந்திரக் கிழமையோன் றனையுடல் பிரித்து
மன்னு மும்பரின் மீண்டிடா தேற்றிட மகிழ்ந்து
துன்னு புங்கவர் குரவையாட் டயர்ந்தனர் துள்ளி. 132

ஆன காலையி னமைச்சனங் கிறந்தமை யறிந்து
தான மாகிக ரவுணர்கள் சீறியச் சண்டி
சேனை நாயகி மீதுபல் படைக்கலஞ் சிதறி
மீன வேலைகண் முழக்கமு மழுங்கமிக் கார்த்தார். 133

அன்ன தன்மைகண் டியோகினி கடிதினே ரடல்வாட்
டன்னை யங்கைகொண் டப்படை யனைத்தையுந் தடிந்து
பன்ன லின்குவை பாற்றிடுஞ் சூறைமா ருதம்போன்
மன்னு வெந்தொழி லவுணருட் புகுந்தனண் மலைந்தாள்.

தாடு ணித்தன டலைகளைத் துணித்தனள் சயங்கூர்
தோடு ணித்தனள் கரங்களைத் துணித்தனள் சுடரும்
வாடு ணித்தனள் கொடுமரந் துணித்தனள் வயஞ்சொல்
சூடு ணித்தன ளிமைப்பினிற் கறங்கெனச் சுழன்று. 135

சிலைக ளற்றன வுடம்பிடி யற்றன செழுமு
லைக ளற்றன நெடுங்கர மற்றன வெழிற்றேண்
மலைக ளற்றன துணைப்பத மற்றன வயவர்
தலைக ளற்றன தகுவியர் தாலியு மற்றார். 136

குன்ற மெண்ணில போலவே களேபரங் குவிந்த
துன்று மோங்கலிற் றொடங்கியோ டாறெனச் சோரி
யொன்றி வீழ்பிணக் குவாலினு நின்றிழிந் தொலித்துச்
சென்று வேலைபுக் கனகருங் கடற்பெயர் தீர. 137

படர்ந்த காகமு மெருவையும் வன்சிறைப் பருந்து
மடந்த ஞாளியு மிகலனு மளைக்குறு நரியுங்
குடைந்து மூளையு நிணங்களுந் தின்றுபேய்க் கூத்தாய்க
கிடந்த தெங்குமவ் விறலியோ கினிபொருங் களமே. 138

பிறங்கல் போலுயர் பிணக்குவை யுண்டவெம் பேயின்
றிறங்க ளோர்பெரும் பேயர சென்றுசெங் களத்து
நிறங்கொண் மாமுடி கவித்திடுங் கவிகைக ணிழற்றுங்
கறங்கு பம்பையு மியம்புறுங் கவரிக ளிரட்டும். 139

சோரி வாய்மடுத் துண்டுமென் னிணங்களைச் சுவைத்துப்
பேரி யாதிய களத்துள வதிர்த்துவெம் பேய்கண்
மூரி வேலுடைக் காளியெம் மிடிகளை முடித்தாள்
போரின் மேவியென் றவடனைப் புகழ்ந்துநின் றுடும் 40

நீங்கு போர்வையம் பணையினை நிறுவிவே னிருத
ரோங்கு மூரல்க ளரிசியிற் பெய்துநீ ளுலக்கை
யாங்கு வேழவெண் மருப்புமொண் முசலமு மாகத்
தாங்கி மாவென விடித்தன தருக்குபெண் பேய்கள். 141

மிக்க மென்றசை யிருந்திட வெற்றெலும் பதனைத்
தக்க தென்றுபுன் ஞமலிகள் கறித்தன தளர்ந்து
துக்க மொன்றுமி றம்மனே துறந்துபோய்ப் பிறரில்
புக்கு வெந்துயர்க் கடற்படு மிழுதைகள் போல. 142

இன்ன தன்மைய தாயசெங் களத்திடை யெடுத்த
மின்னல் வாளிஞ லியோகினி யவுணரை வீசிச்
சின்ன பின்னம தாகவே துணிந்திடச் சிலர்தாம்
மென்ன ளித்தன ருயிரினைக் காப்பது விழைந்தார். 143

அதனைத் தாருக மன்னவ னவ்விடைக் கண்டான்
கதுவிப் புக்குலைக் கடுங்கன லாமெனக் கதமுற்
றிதழைக் கவ்விவன் பற்கறித் தெனதிருஞ் சேனே
சிதையக் கொல்பவர் மாதரோ நன்றெனச் சிரித்தான்.

சிரித்த தீயவன் யோகினித் திரட்டினைச் செழுந்தீப்
பருத்தி வான்குவைப் புக்கெனப் படுப்பனென் றெண்ணிக்
கரத்தி லோர்பெருங் கதைகொடு கலினமான் றேர்விட்
டுருத்து மாநில வரைப்பினி லொய்யெனப் பாய்ந்தான்.

பாய்ந்த காலையிற் பெரும்புவி வெடித்தது பணிக
ளோய்ந்த மாதிரக் கடகளி றோடின வெருண்டு
சாய்ந்த மேருமால் வரைமுத லாயின சயில
மேய்ந்த வானவ ரென்கொலோ முடிவதென் றினைந்தார்.

தேரி னின்றுகுப் புற்றவன் செயறனைத் தெரிந்து
போரில் வென்றிகொள் யோகினி காற்றெனப் புகுந்து
தாரின் மல்கிய வசுரர்கோன் றடம்புய மீது
மூரி நல்வசி யோச்சின ளுருமென முழக்கி. 147

துரிய லார்புகழ் விறலினேன் றடம்புயந் தாக்கு
மூரிய வாள்சிறி தேனுமுற் றற்றிடா ததிலே
பெரிய ரோடிக லறிவறு பேதையர் போல
முரிய வாங்கது கண்டனன் ருருக முதல்வன். 148

கண்ட தீயவ னவளுரத் தெடுத்ததோர் கரத்துத்
தண்டி ஞற்புடைத் தானலன் றனதிடக் கரத்தா
லண்ட கூடமே யுடைந்ததென் றயிர்த்திட வடித்தான்
விண்டு மார்பகங் குருதிவாய் சொரிந்திட வீழ்ந்தாள். 149

தலைவி வீழ்தலும் யோகினித் தானைக ளனைத்துஞ்
சூலவி வேன்மழுத் தண்டுவாள் சூலமா திகளாம்
பலவு மோவறத் தாருகப் பதகன்மேற் றூர்த்தார்
சிலவு மாரழன் மீதெறி துரும்புக ணிகர்ப்ப. 150

## வேறு

ஒடிந்தன சிற்சில வுடைந்த சிற்சில
பொடிந்தன சிற்சில போழ்ந்த சிற்சில
மடிந்தன சிற்சில மறிந்து வந்துமண்
படிந்தன சிற்சில படைக்க லங்களே. 151

வீடின படைகளிவ் விதத்தி லாயிடைக்
கூடிய வவுணர்கோன் கொதித்து மாதரு
ளோடின ரொழியவிங் குற்று ளோர்தமைச்
சாடுவ லெனவெதிர் தலைப்பட் டானரோ. 152

அடிகளுங் கரங்களு மறுவை சூழ்தரு
கடிகளும் புயங்களுங் காளி மாதர்தம்
முடிகளுஞ் சிதறிட மோதி ஞன்கருங்
கொடிகளுங் களிப்புறக் கொடியன் றண்டினல். 153

ஆயிர நீலிக ளடியொன் றாலகன்
மாயிரு ஞாலமேன் மறிந்து வீழ்ந்திடப்
போயருங் கதையினாற் புடைத்து வீட்டினான்
றீயுரு மேறெனத் தெழிககு மாப்பினான். 154

சிலவரைக் கதையினாற் சிரங்கள் போக்கினான்
சிலவரைக் கரத்தினாற் செருக்கு நீக்கினான்
சிலவரைப் புயத்தினாற் றிகைப்ப தாக்கினான்
சிலவரைப் பதத்தினாற் சினத்துத் தாக்கினான். 155

உதைத்தனன் சிலவரை யுதிரச் சேற்றிடைப்
புதைத்தனன் சிலவரைப் பொறிக லங்கிடச்
சிதைத்தனன் சிலவரைத் திருகிச் சென்னிகள்
வதைத்தனன் சிலவரை மடங்கல் போன்றுளான். 156

பற்றினன் சிலவரைப் படுக்கும் வானிடைச்
சுற்றினன் சிலவரைத் தொலைக்குங் கால்களாற்
றெற்றினன் சிலவரைச் செறுக்கு மார்பிடைக்
குற்றினன் சிலவரைக் குமைக்குந் தாருகன். 157

பாரினில் வரையினிற் பாத லத்தினிற்
காரினி லுவரியிற் கடத்தின் மாலய
னூரினின் மகபதி யுழியி லாதபன்
றேரினி லுலகினிற் சில்ரை வீசினான். 158

முரிந்தன வென்புகண் முரிந்த பன்னிரை
முரிந்தன பாணிகள் முரிந்த வான்றொடை
முரிந்தன தாளிணை முரிந்த தோட்டுணை
முரிந்தன கந்தர முரிந்த நாசியே. 159

ஓடின குருதியா றெங்கும் வெற்பென
நீடின களேபர நிறைந்த ஞாளிகள்
பாடின கழுதுகள் பறந்த லைக்கணின்
றாடின கவந்தமோ ரயுத மென்பவே. 160

மொழிந்திடு புகழினோன் முருக்க வெல்வகை
யொழிந்திடும் யோகினி மகளி ரோடினார்
வழிந்திடு புனல்விழி வதனத் தெற்றியே
யழிந்திடு முணர்வொடு மமரர் தேம்பினார். 161

கண்டனன் யோகினிக் கணங்கள் சிந்திய
தொண்டிற லவுணர்கோ னுருள்பொற் றேரின்மேற்
றண்டொடு மொய்யெனத் தாவினான் சின
மண்டுறு பெருவலி மடங்க லென்னவே. 162

தானவப் படையெலாந் தருக்கிச் சிந்துபு
போனவப் படைகளைத் தொடர்ந்து போக்கியே
மானவப் படைபுலான் மழுக்கள் வாண்முத
லானவப் படையெலா மார்த்து வீசினார். 163

எஞ்சலி றன்படை யிரிதல் காளிகண
டஞ்சலி ரஞ்சலி ரவுண ரியாரையும்
புஞ்சமென் சிறுபுழுப் போல விவ்விடைச்
செஞ்சிலம் படியினாற் றேய்ப்ப னென்றனள். 164

என்றவள் வலவியை நோக்கி யிம்மெனத்
துன்றுறு மவுணர்தஞ் சூழன் முன்னரே
சென்றுற நமதுதேர்ச் செலுத்துவா யென்றா
ணன்றென வவடொழா நடத்தி னாளரோ. 165

கடங்கவிழ் கவுணெடுங் களிறு வவ்வுறு
மடங்கலின் மிசைவருஞ் சிம்புண் மானவே
விடங்கது வுறுமொழி விமலே தேரொடு
மடஙகல ரெதிர்புகுந தடுகன் மேயினுள். 166

முதிர்ந்திடு சினமொடு மூரி வில்லெடுத்
தெதிர்ந்திடு மவுணர்முன் :பெய்தி மேதினி
யதிர்ந்திட மேருவு மலைய வானமீ
னுதிர்ந்திட வுகிரினு ணெலிக்கொண் டாளரோ. 167

வெருண்டனர் சிற்சிலர் வீழ்ந்து மண்ணின்மேற்
புரண்டனர் சிற்சிலர் செவிகள் பொத்தியே
மருண்டனர் சிற்சிலர் மணிப்பொற் றேரொடு
முருண்டனர் சிற்சில ருலவுந் தானவர். 168

நாணொலி செவிப்புக நடுங்குந் தானவர்
நாணுமிழ் சுடுசர நணுகு முன்னரே
நாணுள முழுவது நழுவி னேடுவா
னுணுரு சிறிதுரு நலிய நின்றனர். 169

நின்றலு மனலுமிழ் நெடிய வாளிகள்
குன்றெனும் வரிசிலே குனித்துச் சென்டுபோற்
பின்றலி லவுணர்மெய் விடாது பெய்தனன்
சென்றுறு குருதியா றுததி செல்லவே. 170

ஆழிமான றேரினு மயங்கண் டுதினுஞ்
சூழிமால் கரியினுஞ் சுடுச ரங்கடா
மூழிமா முகில்களு முடையச் சிந்தியே
பாழிமா நிலமிசைப் படுத்தி னளரோ. 171

உரங்களை யறுத்தன வுடல றுத்தன
வரங்களை யறுத்தன வயின றுத்தன
சிரங்களை யறுத்தன சிலைய றுத்தன
கரங்களை யறுத்தன காளி வாளியே. 172

அறுத்தன கரிகளை யறுத்த தேர்களை
யறுத்தன பரிகளை யவுணர் கோன்புக
ழறுத்தன புரையவே யறுத்த வெண்குடை
யறுத்தன கொடிகளை யாசு கங்களே. 173

சுரங்களி லோடின சுறவு மோதுசா
கரங்களி லோடின கடவு ளோர்கடம்
புரங்களி லோடின புழைக்கை தங்குமா
திரங்களி லோடின சிலீமு கங்களே. 174

அறைதரு கழலொடு மடிக ளோர்திசை
கறைகெழு படையொடுங் கரங்க ளோர்திசை
சிறையளி மலரொடுஞ் சிரங்க ளோர்திசை
பிறைமுக நெடுங்கணை பிடுங்கி வீசுமால். 175

கூற்றுறழ் தனதுகைச் சாபங் கொண்டவர்
சாற்றிடு பழுதில்வாய்ச் சாப மெண்ணில
மாற்றின னெனநொடி வரையிற் றருகன்
போற்றுறு படைகளொன் றில்ல போக்கினான். 176

வரிசிலை யீர்த்தன வாள்க ளீர்த்தன
வெரிவிழி யவுணர்மெய் யீர்த்த தேரொடும்
பரிகளை யீர்த்தன பணைக ளீர்த்தன
கரிகளை யீர்த்தன கறைவெள் ளங்களே. 177

காளிவா ளிகள்விடுங் காலை வீரமில்
கோளரா மவுணர்கள் குலைந்த நெஞ்சராய்த்
தோளுலாம் படைகளைத் துறந்திங் கன்னோ
யாளுவா ரெமையென வறைகின் றார்சிலர். 178

குடையறக் காம்பினைக் குமரி வன்கதைப்
படையெனத் தெறுமெனப் படிவிட் டார்சில
ரடுகளத் திறுகுடை யதனை யீட்டிபிக்
கடைகொளு வுதுமெனக் கைக்கொண் டார்சிலர். 179

பூங்கதிர் வாளிலைப் போக்கி வாம்பரி
நீங்கியங் கதுபிடீஇ நிற்கின் றார்சில
ராங்குறு புரவிவா யடுத்த புல்லினை
வாங்குபு தமதுவாய் வைக்கின் றார்சிலர். 180

வாஙகிய தனுவினாண் பூட்டும் வாளியுந்
தாங்கிய கரமொடுந் தரைப்பட் டார்சில
ரோங்கிய வயவரென் றுணர வீக்கிய
வேங்குறு கழலறுத் தெறிகின் றார்சிலர். 181

அழிந்தவர் தன்மையு மழிவு றாதுயி
ரொழிந்தவ ரிவ்வகை யுயங்குந் தன்மையுங்
கழிந்திடு புகழினோன் கண்டு நாட்கடை
யெழுந்திடு கனலினுஞ் சீற்ற மெய்தினான். 182

எய்திய வவுணர்கோ னிரத மிம்மென
மொய்திகழ் குமரிமுன் முடுக வந்தன
னெய்தென மடங்கன்முன னேனமை யோடிகல்
செய்தொரு களிறெதிர் செய்கை போலவே. 183

வந்தவள் பயங்கர வடிவங் கண்டனன்
சிந்தையின் வியந்திவ டெரிவை யாயினு
மெந்தம தமரினுக் கேற்று ளாளென
நந்திடு மறிவினு னவிறன மேயினன. 184

## வேறு

மாதுநீ யாரை வென்றி மதகரி யினையு மஞ்ச
மோதுமாண் புலியை வெல்வான் முன்னிமா னடைந்த தெ
போதனு தியரை வென்ற வென்னொடு பொரநீ வந்த[ன்னப்
தேதுகா ரணமு ரைத்தி யென்றன னறமி லாதான். 185

அன்னசொற் குமரி கேளா வசனியே றென்ன நகசு
நன்னரிற் பகைவ னுன நவையுறு மசுர சேணமோ
துன்னுமக் கடவு ளர்க்குத் துயரநீ யிழைத்த லாலே
யென்னைநிற் கொல்வான் முக்க ணெம்பிரா னிவண்வி டுத்தான்.

ஆதலான் மதவே ழத்தை யட்டுணப் பிணும டங்கல்
போதுமா றென்ன நின்னைப் புகுந்தொரு கணத்தி னுங்கி
யோதும்வா னவர்க டுன்போ டுடற்றுமென் பசியு நீங்குங்
காதலா லிவண்வந் துற்றேன் காளிநா னெனவு ரைத்தாள்.

உரைத்தலு மவுணர் கோமா னொருகையோ டொருகை தாக்கிச்
சிரித்தெமை நுகர்வ னென்று தெரிவைநீ யுரைத்த மாற்றங்
கரத்தினில் விசும்பு பற்றிக் கவ்வுவ னென்ப தொக்குந்
தரித்தமிவ் வளவு முன்னைத் தையலென் றடாம லென்றான்.

என்றலு மிறைவி கேளா விழிதொழி லவுண வென்னை
வென்றியின் மடந்தை யென்ன விளிம்பினை யுலக மெல்லா
மொன்றொரு கணத்தின் மாற்றி யொடுக்குவ தெமையாள் வெள்ளிக்
குன்றிறை சத்தி யன்றோ குறித்திலை போலு மென்றாள்.

என்றவ ளுரைத்தல் கொள்ளா னிழுதையா தலினற்சீறித்
தன்றனி வரியில் லொன்று தாங்கினா ணொலிக்கொண் டார்த்தான்
மின்றிகழ் முகிலு டைந்து வீழ்ந்தன பணிபு ரண்ட
குன்றமு நிலனு மண்ட கூடமும் வெடித்த வம்மா. 190

தார்மலி வயிரத் தோளான் றனுவிஞ ணொறியக் கண்டு
வார்முலை யிறைவி தானு மம்பினை வழங்கு முன்னங்
கார்முக மதிர்ப்ப தென்னக் கார்முக மதனை வாங்கிக்
கூர்முக வம்பு வீச நாணொலிக் கொண்டு நின்றாள். 191

அம்மைவெஞ் சிலைநா ணோசை யவுணனு ணொலிவி ழுங்கி
இம்மென வெழுந்த தம்மாயாமனை யவனை நுங்க
வெம்மைகொண் டிருந்தா ளென்று லவளது வில்லி னார்ப்புக்
கொம்மையங் குவட்டுத் தோளான் குணவொலி விழுங்கி டாதே.

பின்னரங் கவுணன் றனோர் பெருங்கணை சிலையிற் பூட்டித்
தன்னடி விரன்முன் பின்றேர் தாங்குறச் சானு வாங்கி
முன்னுர முறவ ளைந்து நின்றுமொய் குதைநாண் கையைக்
கன்னம தளவு மீர்த்துக் காளிமேற் செல்ல வெய்தான். 193

விரைந்தட லிறைவி பூட்டி வில்லினோ பகழி தூண்டிப்
பொருந்துறு மதனை மாற்றிப் பொருக்கெனப் பின்னு நூறு
சரந்தெற வெதிர்வி டுத்தா டாருகன் கண்டு மாறுத்
தெரிந்திடுங் கணை கணூறுசெலுத்தியங் கவைய றுத்தான்.

அறுத்தலு மிறைவி சீறி யாயிரஞ் சுடுச ரங்க
டெறித்தவன் கலின மான்றேர்ச் சிந்தினள் பாகனோடுங்
கறுத்துமற் றெருதேர் வாவிக கணைகளோர் பத்து நூறு
குறித்திட வந்து வாளி குமரிமே லுற்ற வன்றே. 195

வாளிக டாக்கி நொய்தி னழிந்திட வலவி நின்ற
காளியங் கதனைக் காணூஉக் கணைகளீ ரேழு சிந்தி
மூளுறு சினத்து வெய்யோன் பற்றுகார் முகந்து ணித்தா
னாளியே றனையான் மற்றோ ரடற்சிலை யெடுத்துக் கொண்டான். 196

அச்சிலை குனித்து வாளி யைம்பது சிதறிச் சூலி
கைச்சிலை துணித்து முப்பான் கணையெதிர் புகவி டுத்தா
னச்சிலை பகழி யெல்லா நாந்தக மொன்றா னூறி
முச்சகம் புகழு மம்மை மூரிவில் லொன்றெ டுத்தாள். 197

எடுத்தவெஞ் சிலைகு னிந்தங் கீருமீராம் பகழி நொய்தின்
விடுத்தன ளவுணன் மார்பின் விசிகமற் றவனு ரத்தி
னடுத்தன வடுத்த லோடு மன்னது விலக்க மற்றுந்
தொடுத்திரு சரங்க ளன்னோன் சுடர்முடி தள்ளி யார்த்தாள் 198

பொறையறுந் தவமு மாட்சிப் பொருளறுங் கவியு மான்ற
மறையறு முணர்வுஞ் செய்ய மகவறும் வாழ்வு நீதி
யிறையறு முலகு மன்போ டியைபறு மறமும் போல
முறையறு மவுணர் கோமான் முடியிழந் தழகொ ழிந்தான். 199

சேகரங் குமரி தள்ளத் தீயவ னுளுட் கொண்டான்
மாகரங் கெழுந்து துள்ளி மலர்க்கர மெறிந்து நக்கார்
சாகரங் கிளர்நஞ் சன்ன தாருகன் கொதித்துச் செங்கே
ழாகரங் கடுக்கு மற்றோ ரணிமுடி முடிக வித்தான். 200

பின்னரவ் வசுரன்மேருப் பிறங்கனோர் சிலைவ ளைத்துத்
துன்னுறு சோனை மாரி தோற்றிடப் பகழி தூர்த்தா
னந்நிலை யமர ரெல்லா மஞ்சின ரிரியல் போனார்
மன்னிரு சுடரு மீனு மறைந்தன விருண்ட வெங்கும். 201

நதித்திரை யென்ன மேன்மே னஞ்சினுங் கொடியன் சாப
நுதித்தலைப் பகழி யீட்ட முமிழ்ந்திட னொறில்ப ரித்தேர்க்
கதிர்த்தின மணிம றைப்பக் கழியிருள் புகலுங் கண்டம்
புதித்திரை யினர்க டாமற் புதத்தொடு மருட்சி கொண்டார்.

பொற்றட மரைகு விந்த பொலிந்தன குவளை புட்க
டெற்றுறு குடம்பை புக்க செய்தவர் திகைத்தா ரின்றுங்
கற்றையஞ் சடிலத் தெந்தை கண்களை யிமய மீன்ற
பொற்றொடிக் கரத்தெம் மன்னை புதைத்தனள் கொல்லோ வென்று.

அதுதனை யிறைவி காணு வசனியே றுட்க நக்குக்
கதுமென நெற்றி நாட்டக் கனலினுற் பகழி முற்றுஞ்
சிதைவுற வடலை செய்தாள் செழுமறைச் சிரத்தி னுடும்
புதுமதி மிலைந்த வணணல் புரம்பொடி படுத்த தேபோல்.

கூர்ங்கணைப் படலை மாயக் குலவுமூழ் விளங்கிற் றெல்லை
யீர்ங்கதிர் புனைந்த வண்ண லருளினு லிரிய மூட
நீங்கரு மறிவி ருந்து நிகழ்வுறுந் தன்மை போல
வாங்கது விழியிற் கண்டா னறமென்ப தறிகி லாதான்.

அன்னது கண்ட வெய்ய ஞயிரப் பத்து வாளி
தன்னிகர் குமரி யெண்டோ டாகுற விடுத்தான் றுக்கப்
பன்னுனி விசிக நீறு பட்டன படலு மூழி
வன்னியிற் கனன்று கோடி வாளியங் கவன்மேற் றூர்த்தாள். 206

அத்துணைப் பகழி தூண்டி யவனவை யறுத்து வீழ்த்தா
னித்திற மிருவர் தாமு மொருவர்மீ தொருவ ரேவும்
வைத்தலைப் பகழி மாற்றி மகிழ்ச்சியுந் துயருங் கொண்டு
மொய்த்துறு மமரர் நோக்க முதிர்சமர்த் தொழில்பு ரிந்தார்.

வானகத் தொடு மேரு வரைமுத லாகி நின்ற
மானகத் தோடுந் துங்க மகரவே லைகளி னோடுங்
கானகத் தோடு மண்ட கடாகத்தி னோடு மானற்
போனகத் தோடு மன்னோர் பொழிந்திடு சுடுசரங்கள். 208

மாதிரத் தேகு நேமி வரையகத் தேகு மான்ற
பாதலத் தேகு முற்றும் பாழியங் கடலி னேகு
மீதலத் தேகு மண்ட முகட்டினி லேகு மீண்டும்
பூதலத் தேகு மன்னோர் போர்செயத் திரங்க ளன்றே. 209

இவ்வகை யமர்செய் கின்ற வேலையிவ் வரிவை தன்னை
வெவ்விய கடவு ளோர்தம் படைகளால் வெல்வ னென்னத்
தெவ்வடு குவவுத் தோளான் சிந்தனை செய்து கூர்ந்த
பவ்வமன் னவன்ற னூது படையெதிர் செல்ல வுய்த்தான்.

பொங்குவா ரிதிக ளேழும் புறப்பெருங் கடலு மொன்று
யிங்குவந் தெழுந்த தென்ன விருநிலம் விசும்பு மெல்லா
துங்கிவன் றிரையெ றிந்து நோன்மைகொண் டார்த்து நண்ண
வங்கியின் படைசெ லுத்தி யழித்தன ளதனைச் சூலி. 211

மற்றது தெரிந்து தீயன் வன்னிமாப் படைவி டுத்தான்
சுற்றுறு முகிலி ரிந்து சூலழிந் திறப்ப வாழி
வற்றுற வமரா னைந்து மருண்டிட வெழுந்து பொங்கி
யுற்றிட வதனைக் காளி யொலிப்படை தந்த ழித்தாள். 212

தீப்படை யழித லோடுஞ் சினமலி யவுணன் வாயு
மாப்படை விடுத்தா னெல்லா வரைகளுஞ் சுழல விண்ணின்
காப்பணை முறிய வீசிக் கலித்தெழு மதனை நாகப்
பூப்படை செலுத்தி மாற்றிப் புணரியு முட்க வார்த்தாள்.

கொடியவ னதுகண் டுள்ளந் தழலெனக்கொதித்து நாகப்
படையினை விடுத்தா னுன்ற ப∴றலைப் படம்வி ரித்துக்
கடுவினை வாய்க டோறுங் கான்றது வருத லோடு
மிடலுறு கலுழ வென்றிப் படையினை விடுத்தொ ழிந்தாள். 214

கண்டக னதுமற் றேவக் கலுழவெம் படைதன் பாங்கர்
மண்டுறு சிறகர்க் காற்று னிறுதிநாண மருத்து முட்கக்
கொண்டலு மிரிய வோங்கு குன்றுகள் பொடிப்ப வங்கி
யொண்டிற லழிய வாயி னுரகமோ டடைந்த தன்றே. 215

அந்தவான் படையி னுற்ற லம்மைகண் டரற்கொப் பாய
நந்திவான் படையெடுத்து நறுமல ராதி கொண்டு
சிந்தையால் வழிபட் டேத்தித் திகழ்படைக் கிறைநீயன்னே
னுந்துமாண் படையின் வன்மை யொழித்தரு ளெனவிடுத்தான். 216

வேறு

விடுக்கவது விடையுருக்கொண் டிமிலண்ட
முகடுரிஞ்ச வியன்ஞா லத்தை
யடிக்குரமொன் றெற்றுறக்கட் டழறூர்ப்ப
வாயினீ ரதனைக் காட்டத்
தொடைக்கிளர்கிண் கிணிக்களத்திற் றடவரவந்
தரமருத்துச் சுடுதீ யண்ட
மடுக்குமணிப் புழைநாசி விழிகாட்ட
வுலகமெலா மயர்ந்து வீழ. 217

வாலடியான் மேருகிரி முதலாய
வரைபெயர்ந்து மறிந்துவீழ
மேலடன்மா மருப்பெறிய வுரியதிலா
மையினிலங்கி மிசையி ருப்ப

மாலொடுவா னவர்கரங்க ளுச்சிகுவித்
திறைஞ்சிநனி வாழ்த்த வெங்கள்
பாலுடையா னுமையாளும் பதமுடையான்
றிருநந்திப் படைபோயிற்றால். 218

நந்தியடற் படைகண்ட வுடன் கழலுப்
படைநடுங்கி நஞ்சு காலுந்
தந்தமணி யரவுதனைக் கண்டதென
வழிந்ததுபின் றலைவ னுகு
மெந்தையிறை விடையவுணன் மேற்செல்ல
வவனுமதை யெதிர்வி டுத்தான்
வந்தனைசெய் தவைதம்மிற் பொருதுவிடுத்
தவரகத்து மறிந்து புக்க. 219

இந்திரன்மா மலரயன்மா லெனுமிவர்கள்
படைகடமை யெடுத்துப் பின்ன
ருந்தினனங் கவுணனவை யவருருக்கொண்
டதிர்ந்துநனி யுருத்தெ ழுந்து
வந்திடலு மவர்படைக டானுமெதிர்
செலவிடுத்து மாற்றி நின்றாள்
கொந்தவிழு மலரிதழிச் சடாமகுடத்
திறைவிடுத்த குமரி மாதோ. 220

## வேறு

இங்கினி யிவனை யெல்லா வுலகமு மிமைப்பின் மாற்றுஞ்
சங்கரன் படைவி டுத்துச் சாடுது மெனத் தீயோ
னங்கதை விரைந்தெ டுத்தே யருச்சனை மனத்தி யற்றி
மங்கைதன் னுயிர்கு டித்து வருதியென் றிறைஞ்சி யுய்த்தான். 221

ஊழியங் கனலி யோர்சா ருருமொடு முகில்களோர்சா
ராழியங் கடல்க ளோர்சா ருலகடு மால மோர்சார்
சூழியங் கரிக ளோர்சார் சுடுசரத் தொகுதி யோர்சார்
பாழியம் புயத்து வென்றிப் பாரிடக் குழுக்க ளோர்சார்.

கடவுளர் படைக ளோர்சார் காரிருட் படலை யோர்சார்
படவர வினங்க ளோர்சார் பாய்புலி யரிமா ஞோர்சா
ருடலுரு பவன மோர்சா ருடலுருத் திரர்க ளோர்சார்
மிடலுறு வடுக ரோர்சா ருக்கிர வீர ரோர்சார். 223

கான்றுவல் விரைந்து முக்கட் கடவுடன் படைமுன் வந்து
தோன்றலுங் குமரி கண்டு துணுக்கெனத் தானு மங்ஙன்
மூன்றெனும் புரமு ருக்கு முதல்வன்வெம் படையைப் பூசை
யான்றதன் மனத்தி னூற்றி யதற்கெதிர் செல்ல வுய்த்தாள்.

உய்த்திட வனைய தவ்வா றுருவுகள் பலவு மாகி
யத்தலை யவுணன் றூண்டு மாற்படை யுடன்சென் றேற்று
மெத்தமர் புரிந்த தம்மா வேலைக டணந்த வண்ட
பித்திகை பிளந்த தம்பொற் பிறங்கலும் வெடித்த வன்றே.

இருவர்தம் படையு மிவ்வா றேற்றமர் புரிந்து மீண்டு
மருவின வவர்பால் வெய்யன் மனமகிழ்ந் தவடன் மீதி
லுரவிய கதையொன் றெல்லை யோச்சின னதனைப் பாந்தட்
பொருவுறு சரமீ ரைந்து போக்கின டுணித்து வீழ்த்தாள்.

பின்னரைம் பதிற்றி ரட்டிப் பிறைமுகக் கணைக டூவி
மன்னவன் றடந்தேர்ச் சாய்ப்ப மற்றொரு திகிரித் திண்டேர்
தன்னிலொண் பணையி னூடு தாவும்வா னரம்போற் பாய்ந்தா
னன்னது மறித்தும் வீழ்த்தா ளடற்கணை நூறு போக்கி.

மற்றது தெரிந்து தீயன் மறுகுறு மனத்த னாகிப்
பிற்றலர் புகழுங் காளி தேரினிற் பாய்ந்தி மைப்பி
னிற்றது புவிகொ லோங்கு மியங்கொ லென்னக் கையா
வெற்றியங் கவடன் மார்பி னிருநிலந் தனிற்குப் புற்றான்.

கண்டன னதனைக் காளி கடையுகக கனலிற் சீற்றங்
கொண்டினி யிவனை யின்னே கொல்வனென் றனந்தற் காண
மண்டலம் வெடிப்ப மன்னர் மன்னவ னுடன்குப் புற்று
விண்டிட வுரத்தெ றிந்தாண் முத்தலை வேலொன் றம்மா.

எறிந்திட வயர்ந்து நின்றான் மனச்சின வெரிபோந் தன்ன
நிறந்தரு குருதி யோங்கி நிலத்திழிந் தோடிற் றீசன்
மறந்தரு மவுணன் சோரி மண்புகா தேற்ற ருந்தென்
றறைந்தருண் மொழிய யர்த்தா னடுத்தவெஞ் சினத்தாற் காளி,

மன்னவன் குருதி தோய்ந்த மண்ணினுண் டுகள னைத்து
மன்னவன் வடிய மாய லவுணரா யால கால
மென்னவெங் கொடிய ராகி யிரும்படைக் கலங்க ளோடுந்
துன்னுறு முகிலு மஞ்ச வார்த்தனா தோனறி னரால்.231

தோன்றிய வவுணத் தீயோர் தொகுத்தொரு பதினன் கென்ன
வான்றிடு முலக னைத்து நிறைந்தன ரனை யோர்க் கண்டு
கான்றிடு முயிர்ப்ப டங்கிக் கைப்பொருள் சோர்ந்தி றந்தோர்
போன்றனர் புலனி ழந்து புலவரென் றுரைக்கப் பட்டோர்.

சூலமு மழுவும் வாளுஞ் சுரிகையு மெழுவும் பிண்டி
பாலமுஞ் சரமும் வீசித் தாருகண் படிவங் கொண்டோ
ராலமு மனலு மன்ன வுடற்பெருங் காளி தன்னைத்
தாலமும் விழுங்கு மாவஞ் சனிப்படை யொடும்வ னைந்தார். 233

மிண்டிய வசுரர் தங்க டோற்றமுஞ் சமர்க்கு மிக்கு
மண்டுறு செயலுங் கண்டு மாதொரு பாகன் சொல்லுட்
கொண்டுதன் படைய னைத்துங் கூவியவ் வசுரர் தம்மை
யுண்டிடு மென்று தாமு மவர்தமை யுண்ப தானுள். 234

முத்தலை யதனு லன்னோர் மொய்ம்பினிற் குத்தி நெய்த்தோர்
கைத்தலத் திருந்த பாழிக் கபாலத்தி னேற்ற ருந்தி
மைத்தட வரைக ளன்ன வளரியாக் கைகளு முண்டா
ளுத்தரந் தனிலு மோங்கு முதரவங் கியினுன் மிக்காள். 235

விரிந்திடு வயிற்றொண் குண்ட மாயிடை மேவு மங்கி
யெரிந்திடு முதவ கன்ரு னெனவசு ரர்கடஞ் சோரி
சொரிந்தவ ருடனி ணங்க டூர்த்தொரு வீர யாகம்
புரிந்தன ளுலக மெல்லாம் புகழ்தருங் குமரி யன்றே. 236

மூர்த்தமொன் றதனி லாண்டு மொய்த்தயோ கினிக ளோடு
மார்த்துவந் தெதிர்த்த தீய வவுணரை யெல்லா முண்டாள்
சீர்த்தியங் குமரி பின்னர்த் தாருகன் றெளிந்து சீறிப்
பார்த்தனன் றனியாய் நெஞ்சம் பதைத்தவட் புடைப்ப வந்தான்.

வந்திட விலைவெஞ் சூல மார்பினின் மீண்டு மோச்சிச்
சிந்திடு குருதி யங்கைச் செழுங்கபா லத்தேற் றுண்ணு
விந்தமண் மகடன் பார மிறக்கின ளென்ன வங்ஙன்
வெந்தொழி லவுணன் மாள யாக்கையும் விழுங்கி னுளால்.

மற்றது கண்டு விண்ணோர் வலியதா ருகனை யன்னை
செற்றன ளுங்கி யிங்ஙன் றேவரென் றுரைக்கு நம்மைப்
பெற்றன னின்றென் ருர்வப் பெருங்கடற் படிந்து நெஞ்ச
முற்றவெந் துயர கன்று பாடினு ரோடி னுரால். 239

வேலையூ டெழுந்த நஞ்சம் விமலனுண் டளித்த செய்கை
போலநீ யம்மா வின்று பொருவிற ருகனை யுண்டு
பாலரா மெமைய ளித்தா யென்றனர் பழிச்சி வானோர்
சூலிமீ திடைவி டாமற் சொரிந்தனர் பூவின் மாரி. 240

ஆயிடை யுளம கிழ்ந்தே யவுணர்கண் மலைப்ப மாய்ந்து
போயின வனிக முற்றும் பொருக்கென வுயிர்பெற் றுய்ய
நாயகி குமரி நின்று நவின்றன ணவின்ற காலை
மேயின துயிலொ ழிந்து விழித்தென வெழுந்து சூழ்ந்தார்.

வேறு

அன்னது காலையி லவுணர் சோரியுந்
துன்னிய வுடல்களுந் துய்த்த தன்மையான்
மன்னிய குமரிதன் மதிம யங்கியே
தன்னிக ரிலையெனத் தருக்கி னளரோ. 242

தருக்கிய வுளத்தினு டாங்கி நல்லியாழ்
திருக்கர விரலினற் றெறித்துப் பாடியே
முருக்கிய புயங்களு முடியுந் தாள்களுங்
கரக்குவை களுஞ்செறி களத்தி னடினள். 243

நடித்திட வவளது நாடிப் பெண்கடாம்
வெடித்திட நிலமுடு வீழ வாவிக
டுடித்திட விமயமுந் துளங்கக் கைகளை
யடித்தன ரதிர்த்தன ராடன் மேயினர். 244

கொட்டுபு கரங்களைக் குலால நேமிபோல்
வட்டணை விரலினில் வருகின் றார்சிலர்
கிட்டிய வலகைகள் கீதம் பாடியே
நட்டம திடவுட னடிக்கின் றார்சிலர். 245

தண்ணுமை தனையடிச் சதிக்கி சைந்தொலி
நண்ணுற முழக்குபு நடிக்கின் றூர்சில
ரண்ணலந் தயித்திய ராக்கைக் குன்றின்மேற்
றுண்ணென விவர்ந்தனர் துவைக்கின் றூர்சிலர். 246

மாகமீ தெறியுமம் மனைகள் பற்பல
வாகவீழ் தலையெடுத் தாடு வார்சிலர்
வாகுவால் விலாவுறத் தாக்கி மெய்வளைந்
தோகையா னடநவின் றுழல்வ ரோர்சிலர். 247

மெலிவுறு மடிகள்வாய் விழிபு ரூரமங்
குலிவிகா ரப்படக் குனிக்கின் றூர்சிலர்
வலியவெண் கவடிக ணிரைத்து வைத்தபோ
லலியெயி றிலகுற நகைக்கின் றூர்சிலர். 248

முத்தலை வேலினன் முடைப்பி ணங்களைக்
குத்துபு தாங்கியே குனிக்கின் றூர்சிலர்
மத்தக ரெனககுடர் மாலை தோளிடா
வத்திக ளெனவதிர்த் தாடு வார்சிலர். 249

இனையன பலவிதத் தெண்ணில் யோகினி
வனிதையர் குருதிநீர் வாயம டுத்திடு
நனிவரு களிப்பினன் மதத நாகமே
யனையவெங் குமரியோ டாடி னாரரோ. 250

ஆடுறு மரவமு மவர்மு ழக்கமுங்
கூடுறு மங்கைகள் கொட்டு மோசையு
நீடுறு முலகெலா நீங்க வந்தெழா
மூடுறு முகிற்கண முழக்கை வென்றவே. 251

போழ்ந்தன புவியெலாம் பொடித்த வெற்பெலாம்
வீழ்ந்தன முகிலெலா மெலிந்து மூர்ச்சையி
ஞழ்ந்தன வுயிரெலா மலைந்த வான்சுடர்
சூழ்ந்தன வுலகெலாந் துயர வேலையே. 252

துப்புறு குமரிக டொகுதி யாடுறச்
செப்பரும் புகழுடைச் சேடன் பாரினை
யப்பரம் பொறுக்கிலா தாயி ரங்கமுங்
கொப்புளங் கொளவுளங் குலைந்து தாங்கினன் 253

மாதவ னயன்மகத் தரசன் வானவர்
மூதறி வுடையமா முனிவர் யாவரும்
பேதுற வந்திளம் பிறைமு டித்தவெம்
மாதியோ டபயமென் றறைதன் மேயினர். 254

எந்தையே தாருக னிழைத்த வெந்துயர்
வந்தமா காளியெங் கட்கு மாற்றியே
யந்தவான் றுயரினு மதிக மாக்கினள்
முந்துகான் முட்பறீஇ முளைய டித்தல்போல். 255

தாருக னல்வருந் துயரந் தன்னை நின்
பேரரு ளாலொரு பெண்ணி னீக்கினை
யாருறு செருக்கின லவள்செய் துன்பமு
நீருறு சடையினாய் நீக்கி யாட்கொணீ. 256

நஞ்சினை யருந்தியுங் கனலை யேந்தியு
மஞ்சிட மதகரி யட்டு மேழையே
முஞ்சிட வருளிய வொருவ காளிதன்
விஞ்சிய செருக்கையும் வீட்டி யாளுவாய். 257

என்றிவ ரனைவரு மியம்பிக் கைதொழா
நின்றிட வெங்கணு நிறைந்த வெம்பிரான்
வென்றியங் குமரிதன் மிகுஞ்செ ருக்கினை
யொன்றொரு சாழலா லொழிக்க வுன்னினன். 258

**வேறு**

உன்னு நாயக னுலகெலா மீன்றவ ளோடுந்
துன்னு வான்கணஞ் சூழ்தரச் சூரர மகளி
ரன்னை யாடிடம் வடவன மாகவா யிடையின்
மன்னு பேரருட் டன்மையா லிமைப்பினில் வந்தான். 259

வந்து காளிமுன் பேருருக் கொண்டுமா மறையு
மந்த நாரணக் கடவுளு மறிவதற் கரிய
கொந்து லாமலர்த் திருவடி சிவந்திடக் குனித்தான்
றந்தை யாகியெவ் வுயிரையு மளித்தரு டலைவன். 260

கோதுக் காகர மாகியே செருக்குறுங் குமரி
மாதுக் கோர்புற மளித்தவன் செயல்கண்டு வணங்கி
யேதுக் காடுகின் றுய்வறி தென்னொடு மீண்டு
வாதுக் காடுதி வருதியென் றுரைத்தனன் மயங்கி. 261

என்ற வாசகங் கேட்டலு மடியவர்க் கெளிய
னன்று காளிநீ தருக்கதாண் டவஞ்செய நவின்றாய்
வென்றி தோல்விகண் டுரைத்திடச் சான்றுநம் விமலை
நின்று தாண்டவம் புரிதியென் றுடின னிமலன். 262

கற்றை வேணியிற் செருகிய கதிரிளம் பிறையைச்
சுற்றி வால்கொடு கட்செவி நான்றிடச் சுருதிப்
பற்ற தாகிய பதமலர்ச் சிலம்பொலி பரப்பப்
பொற்ற மாநக நாயகன் றிருநடம் புரிந்தான். 263

படியும் வானமு நடுங்கிடப் பரவைக ளடங்கக்
கொடிய யோகினிக் குழுவெலாம் பாணிகள் கொட்டி
நடந வின்றிட மயன்மிகு யாமளை நடித்தா
ளடியர் வேண்டிய வேண்டியாங் களிப்பவ னுடனு. 264

திருந்து தென்றிரு வாலங்காட் டருந்தவஞ் செய்யா
விருந்த முஞ்சிக ேனுடுகார்க் கோடக னென்னப்
பரந்த சீர்த்திமா நாகமுஞ் செஞ்சடைப் பகவன்
புரிந்த நாடகங் கண்டருங் கதியிடைப் புகுந்த. 265

வேத ஞரணன் விண்ணவர் முனிவரர் விமலன்
போத நாடகங் காண்டலு மெய்ம்மயிர் பொடிப்ப
வோதும் வாசகந் தளர்ந்துள நெக்குநெக் குருகிக்
காத லாலர கரவெனக் கூப்பினர் கரங்கள். 266

அண்டர் நாயகன் திருநடம் புரிவயி னடுத்துப்
பண்டை நான்மறை யுருவுகொண் டன்பொடு பாடக்
கண்டு நான்முகன் ருளமொத் தினனது காலை
மண்டு மாபுக ழருணந்தி மத்தள மதிர்த்தான். 267

எங்க ளுயக னுலகெலா மாடல்கண் டிருக்கு
மங்கை நாயக னடனமிவ் வாறுசெய் தருள
வங்கு வாதுசெய் துடன்சுழன் ருடுவா ளெய்த்தாள்
பொங்கு மானமுற் றிடுதலாற் பினுநடம் புரிந்தாள். 268

வேறு

நொந்து ளாடனை நோக்குபு வாதினுன்
வந்த நாடக மாற்றவ ருள்கொளா
வந்த வேலையி னண்ட முகடுற
வெந்தை தாளொன் றெடுத்தன னென்பவே. 269

தொண்ட ராகுலந் தீர்க்குந் தொழிலினே
னண்ட கூட மளவு மெடுத்ததா
ஞுண்ட தால முமிழ்நெடு மான்முனங்
கொண்ட பேருருக் கொள்கை நிகர்க்குமால். 270

வேறு

மண்ணிடை யொருதா ளூன்றி மற்றொரு கமலப் பொற்றாள்
விண்ணிடை யெடுத்து மேலோ னடிப்பது வீரி கண்டு
துண்ணென நாணுட் கொண்டு சுடுங்கனற் பட்ட மென்பூ
வண்ணம தெனப்பு லர்ந்து வதனம்வன் றலைகு னித்தாள்.

நாணினுள் முகங்க விழ்ந்து நண்ணிய செருக்கு நீங்கி
யேனுலாங் குமரி நிற்ப வெண்ணில்யோ கினிக ளெல்லாங்
காணுரு நடமொ ழிந்து சூத்திரங் கழல நிற்கு
காணுலாம் பாவை போல வறிதுநின் றனர்க ளன்றே. 272

ஆங்கது கண்டு விண்ணோ ருவகைபூத் தமலன்மீது
தூங்குறு மழையின் மும்மை சொரிந்தனர் பூவின் மாரி
பாங்கரின் வந்து வீழ்ந்து பணிந்தன ரெழுந்து துள்ளி
வாங்குதெண் டிரைக்க டற்கெண் மடங்கொலி யெழத்து தித்தார்.

ஆயகா லையினிற் காளி யஞ்சியா ரணங்க டாமு
மாயனு தியருங் காணு நின்றனை மதித்திடாமற்
பேயனேன் செய்த தீமை பொறுத்தருள் பெரும வென்று
தூயமா ஞானு னந்த சோதியைத் தொழுது நின்றாள். 274

நின்றவ டன்னை நோக்கி நீயுளம் வெருவ லென்றே
தன்றிரு வருள்பு ரிந்து சண்டதாண் டவமி தம்ம
வுன்றனக் கிதனை நோக்க லரிதென வுரைத்துத் தன்று
ளொன்றலை பொறித்த முக்க ணெம்பிரா னியம்பு கின்றான்.

**வேறு**

திகழ்வுறு மிந்த வடவனந் தனக்குத்
தென்றிசை யாகவோர் நகரம்
புகழ்வுறுங் கூவ புரமென வுளதப்
புரிகயி லையங்கிரி தன்னி
னிகழ்வுறு பெருமை பெற்றது நமைப்போ
னிகரிலா வதனிடை யென்று
மகிழ்வொடு முலக மனைத்தையும் புரப்பான்
மதித்திரக் காநடம் புரிதும். 276

அப்பெருங் கூவ புரத்திடை யேகி
யருள்புரி நந்திரு நடனஞ்
செப்பருங் காத லாற்றினங் கண்டு
திகழுமந் நகருளா ரெல்லா
மொப்பரு நமது நந்தியங் கணத்தி
னுள்ளவ ரென்றுநீ கருதி
வெப்பது முதலாம் பிணிமிடி பேய்கள்
விலங்கினுன் வருந்துயர் களைவாய். 277

என்றிவை யிசைத்து நம்மொடு தருக்க
மியம்பிநீ நடநவின் றதனு
லுன்றனக் கொருபேர் தருக்கமா தாவென்
றோங்குக வினையது மன்றித்
தென்றிருக் கூவ நகர்தனைக் காத்துச்
செறிந்திடு பீடைக ளரிப்ப
வென்றிகொள் பெயர்பீ டாரியென் றுலகின்
விளங்குக வென்றனன் விமலன். 278

அன்னசொற் குமரி கேட்டுள மகிழ்வுற்
றன்பினுன் மும்முறை வணங்கி
நின்னரு ளதனு லடியனேன் றீமை
நீத்தெனை யாண்டவா ரமுதே,
யன்னருங் கூவ புரத்திடைச் சென்றுன்
பவுரிகண டங்நகர் காப்பே
னென்னவங் கியம்பி விமலனை விடைகொண்
டெய்தினள் கூவமா நகரின். 279

எய்திய குமரி கூவமா நகரை
யிறைஞ்சியா லயத்தினுட் போகிச்
செய்தவ முடையோர் விழியினி னெளிதிற்
றெரியும்விற் கோலநா யகனைக்
கைத்தொழு தகலா வன்பினுற் பணிந்து
களிப்பொடும் போந்தடி யவர்க்கு
மெய்தரு மருள்சேர் வளர்சடைக் கூத்தன்
விளங்கரு நாடகங் கண்டாள். 280

கண்டலு மனலிறீ படுமெழு கெனவே
கரைந்துள முருகிவாள் விழிநீர்
கொண்டல்கண் மலைமேற் சொரிவது கடுப்பக்
குவிமுலை மீதுவீழ்ந் தொழுக
மண்டல மதனி லைந்துறுப் பணைய
வணங்கியங் கெழுந்தனள் போற்றி
விண்டிட வரிய மெய்ப்பரா னந்த
வெள்ளத்திற் றிளைத்தன ளன்றே. 281

இத்திற மமல னருணடங் காணு
வின்பமுற் றிடுபெருஞ் சூலி
கைத்தல மமர்ந்த மழுவினே னலங்
காட்டினி லருளிய முறையே
மெய்த்தவர் புகழுங் கூவமா புரத்து
விருப்பொடு மிருந்தொரு துயரு
மத்திரு நகரிற் குருவகை யென்று
மன்னைபோற் காத்திருக் கின்ருள். 282

## வேறு

இனையதிருக் கூவபுரப் பெருமையினை
யிவ்வளவென் றியம்ப வல்லோ
ரனையநகர் தனையிடங்கொண் டருடிருவிற்
கோலநா யகரே யல்லாற்
பினையொருவ ருரைத்திடுதற் கெளியதுவே
வியாதனெனப் பெயர்பெற் றுள்ள
முனிவனருள் கொண்டுசிறி ததன்பெருமை
தமியேனு மொழியப் பெற்றேன். 283

அண்ணலருந் தவமுனிவீர் முத்திதரு
சிவஞான மளிக்க வல்ல
கண்ணுதலான் றலங்கடமி லனந்தகோ
டியினினெரு தலத்தை யுன்னித்
துண்ணெனவிங் குரைத்தியெனப் புகன்றனீ
ராதலினுற் சுரர்கள் போற்று
மெண்ணரிய புகழ்க்கூவ மாநகரைக்
குருவருளா லியம்பி னேனுல். 284

இக்காதை தனையொருகாற் புகன்றருள
வினவினவ ரிசைகூர் வண்டு
புக்காரு நளினமலர்ப் புங்கவனு
குவரிருகாற் புகலிற் கேட்பின்
மைக்காரி னிகர்நிறத்த கமலவிழிப்
புவியளந்த மாய னுவர்
முக்காலவ் வகைபுரியி னெனையாளுங்
கயிலைமலை முதல்வ னுவார். 285

பழுதிறிருக் கூவபுரா ணத்தினையோ
திடுபவர்க்கும் பயன்கேட் போர்க்குங்
கழுதுபல விலங்குநவக் கிரகாதி
யாலணையுங் கடிய வின்னன்
முழுதுமிலை யவமரணந் துற்கனவு
மிடிபிணிகண் முற்று மின்று
மெழுதுபவர் வினையனைத்து நமன்கணக்கர்
தமதேட்டி னெழுதி டாரே. 286

இக்கதைதயை யன்பினொடு படிப்பவர்க
ளரும்பயன்கேட் டிடுவோர் மேன்மை
மக்கடமை யுயிர்த்திடுவ ரென்றென்று
மொழியாத வாழ்வு சேர்வர்
மிக்கபெருஞ் சித்திகளோ ரிருநான்கு
மடைவர்மனம் விழைந்த வெல்லா
மக்கணமே பெறுகுவரீ ரேழுலகு
தனினுமவர்க் கரிய தின்றே. 287

தீங்கிறிருச் சினகரமே தவர்மடமே
யறந்திறம்பாத் திகழு மில்லே
யோங்குமலைக் கடமேநன் னதிக்கரையே
யெனுமிவற்று ளொன்றின் மிக்க
பூங்கடிமண் டபமியற்றி யதிலிருந்து
திருக்கூவப் புராணந் தன்னைத்
தேங்கமழு மலர்புகையொண் சுடர்கொடுபூ
சனையியங்கள் சிலம்பச் செய்தே. 288

ஓதிடுக வோதிடுநாட் டொடங்கிநால்
வகையுண்டி யோடு மனன
மாதவருக் கிடுகமுடி வுறுநாளிற்
படித்தவர்கண் மலர்ப்பொற் றுளி
ஞுதரவு கொடுபரம சிவனெனவே
வந்தனைசெய் தறுவை யோடுந்
தீதிலணி விளைநிலம்பாற் பசுவிவைக
ளளித்திடுக சிறக்கப் பின்னர். 289

பொய்யின்மறை புகழ்திருவிற் கோலநா
யகர்ப்புகழும் புராண மோடு
துய்யமன னுடன்படித்துப் பொருள்விரிக்கும்
பெரியோனைத் தொழுது போற்றி
வையமுத லூர்திகளி னிருத்திமிகு
பல்லியம்வான் மழையி னார்ப்பச்
செய்யநக ரலங்கரித்து வலம்வருவித்
திடல்வேண்டுந் திகழு மன்பால். 290

இந்தவகை புரிந்திடுவோர் பாவகோ
டிகளகற்றி யிம்பர் தன்னிற்
புந்திவிழை பொருளனைத்து மீந்துதிரு
விற்கோலப் புனித மூர்த்தி
கந்தமல ரயன்முதலாங் கடவுளர்க்கு
மரியபர கதியு நண்ணத்
தந்தருள்வ னெனவுரைத்தான் சூதமா
முனிவனெனுந் தவத்தர் கோமான். 291

சூதமுனி யுரைத்தமொழி நைமிசமா
வனத்துறையுந் தூய நெஞ்ச
மாதவர்க ளனைவருங்கேட் டுவந்தனையோன்
றனைவழுத்தி வந்து கூவப்
போதநகர் தனினரிய விற்கோல
நாயகனைப் போற்றி மேவி
மூதறிவு வந்ததனுன் மூலவிரு
ளகன்றுபர முத்தி சேர்ந்தார். 292

**குறிப்புரை:—** செய்யுள் (13) கொல் என்பது கொல்லன என்னும் பொருளில் வந்தது. (30) நச்சினை மிடற்றடக்கா வழி, திருமாலும் அயன் முதலிய தேவரும் இறத்தலையுடையராக, அச்சுதன் அமரரென்னும் அவர் நாமங்கள், அகரத்தை யிழந்து முறையே சுதனென நின்று அழிவை யுடையனெனவும், மரரெனநின்று மரித்தலை யுடையவரெனவும், பொருள்பட்டு நிற்குமாகலின், முதலெழுத்திகவா தொன்ற நச்சினை மிடற்றடக்கு நாதன் என்று விதந்தார். (129) திகிரி என்னும் மூன்றெழுத்துள் ஆதியாகிய ஓரெழுத்தொழியில்

பகரப்படும் பெயர் கிரி அப் பெயரையுடையது மலை. (131) மொய் - பொருகளம். (134) பன்னல்- பருத்திப் பஞ்சு. (153) கடி - நிதம்பம். (205) ஊழ் - பழமை. (235) உத்தரம்- ஊழித்தீ. (258) சாழல் - ஓர் விளையாட்டு. (265) சுனந்த முனிவரென்பவர், கைலாயத்திலே தாண்டவ தரிசனந் தந்தருளப் பிரார்த்தித்து, சிவபெருமான் அனுக்கிரகப்படியே திருவாலங்காட்டையடைந்து, நெடுங்காலம் அருந்தவம் புரிந்திருந்துழி, மண்மேடிட்டுத் திருமேனி மறைந்து கேசத் தோடு முஞ்சிப்புல் முளைக்கப்பெற்றமையால், முஞ்சிகேச முனிவரென்னும் திருநாமமுடையரா இருக்க ; கார்க்கோட கர் என்பவரும், கைலாயத்திலே சிவபெருமானுக்குக் கங்கணமாயிருக்குங்கால், அறியாமையால் விடத்தைக் கக்கி) அக்குற்றங் காரணமாக அக் கடவுளருளியவாறு அத் தலத்தை யடைந்து, தவநிலையினின்று தாண்டவ தரிசனம் கிடைக்கப்பெற்று, அம்முனிவரோடு முத்தியடைந்தனர். (278) பீடாரி எனபது - உலகவழக்கில் பிடாரியென மருவிற்று.

தீதிலா இறை செங்கோல் வழங்குக
வேத ஆகம மெய்ந்நெறி ஓங்குக
போத ஞாதிய புண்ணியர் மல்குக
ஓது மூவர்தம் ஒண்தமிழ் வாழ்கவே.

தாருகன் வதைச் சருக்கம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் 703

திருக்கூவப் புராணம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலைய தேசிகர் திருவடிவாழ்க.

---

# பிற்சேர்க்கை

**தலம் :**

1. தொண்டை நாட்டுத் தலங்களில் ஒன்று.
2. திருஞான சம்பந்தப் பெருமான் தேவார முடையது.

**தல விநாயகர் :**

அச்சிறுத்த பிள்ளையார் (கூவரக்கர்)

**சுவாமியின் திருநாமம் :**

திருவிற்கோலநாதர், திரிபுராந்தக நாதர், இரட்சகர், தியாகர், சந்ததாரர் (அடியாரைச் சமுசார பயநீக்கிக் காத்த வர்)—தீர்க்க ஜடா நிருத்தர் (வளர்சடைக் கூத்தர்), சக நாதர் (சர்வகர்த்தர்), அஞ்சநாப கண்டர் (விடத்தால் மைபோலும் ஒளிமிக்க கண்ட முடையவர்) — கிலாநிக்னர் —கலி காலத் துயரைப் போக்கியவர்), புவன நாயகர் —(உலக நாதர்), திரிபுரக்னர் (முப்புர மழித்தவர்), அப்பிர திஷ்டர் (தானே முளைத்த தனி முதல்வர்), கூவ நாதர், நீவாரதர் (செங்நெல் வைத்தவர்), 'ஐயனல்லதிசயன்' முதலியன.

பிற மூர்த்திகள் : அரம்பேசர், கண்ணுவலிங்கம்.

**தேவி :**

பையரவல்குலம்மை, வயிரவாகாரை, திரிபுராந்தக நாயகி.

**காளி :**

தர்க்க மாதா (வாதிட்ட அம்மை), பீடாரி.

**தீர்த்தம் :**

அச்சிறுகேணி.

**பூசித்தோர் :**

காளி, திருமால், பிரமன், தேவர்கள், முனிவர்கள், கண்ணுவர், அரம்பையர், தரும சீலர் முதலியோர்.

# கூவத்தலம் - ஆராய்ச்சிக் குறிப்புகள் சுருக்கம்

---

(K. வைத்தியநாத முதலியார் அவர்கள்)

(முன்னாள் ஆசிரியர்)

குமாரச்சேரி, கூவம் போஸ்டு, திருவள்ளூர் தாலூக்கா,
செங்கற்பட்டு மாவட்டம்

1. கூவம் - திருஞான சம்பந்தர் பதிகம் (1) ஒன்று பெற்றது.

**பெயர் :**

கூவத்திற்கு, 'கூகம்', 'திருவிற்கோலம்' என்ற இரு பெயர்கள் தலத் தேவாரத்தில் வருகின்றன. கூவம் என்ற பெயர் வரவில்லை. கூகம் என்ற பெயர் தேவாரம் தவிர ஏனைய நூல்களிலும் வரவில்லை; வழக்கிலுமில்லை.

திருவிற்கோலம் என்ற பெயர் மட்டும் தேவார காலத்துக்குப்பின் வந்த பெரிய புராணம், அம்மானை, கூவ புராணம் முதலிய நூல்களில் வருகிறது. திருவிற் கோலம் என்பது கூவத் தலத்துக்கும், தலமூர்த்திக்கும் தேவாரத்திலும், ஏனைய நூல்களிலும் பொதுப் பெயராக வருகிறது.

'செருவினன் உறைவிடம் திருவிற்கோலமே' என்பதில் 'செருவினன்'—போர்க் கோலத்துடன் வந்தவன் என்றும், 'சென்றவன் உறைவிடம் திருவிற்கோலமே' என்பதில் அழித்தவன் உறைவிடம் என்றும் பொருள் கொண்டால் முறையே போர்க்கோலமே திருவிற்கோலம் எனவும், அழித்தவன் தங்கிய இடம் திருவிற்கோலம் எனவும் ஆம்.

பெரிய புராணத்திலும் 'திருத்தொண்டர் பலர் சூழத் திருவிற்கோலம் பணிந்து' என்பதால் திருவிற்கோலம் என்ற பெயரே வழங்கியுள்ளது.

**கூகம் என்ற பெயர் :**

"கொந்துலா மலர்ப் பொழில் கூகமேவினன்" என்றும் "வகுத்தவன் வளர்பொழில் கூகமேவினன்" எனவும் "கோடல் வெண் பிறையனைக் கூகமேவிய" என்றும் மூன்று தேவார அடிகளில் மட்டும் வருகின்றன.

"நாலாறு சேரி நடுவே திருவிற்கோலம்
பாலாறு சூழ்ந்த பதியது காணம்மானை"

என அம்மானையிலும் திருவிற்கோலம் என்ற பெயரே வழங்கியுள்ளது.

நாலும் ஆறும் (பத்து) சேரிகள் நடுவில் கூவம் உள்ளது. சேரி—சேர்ந்துள்ள இடம். தலத்திற்கு மேற்கு குமாரச்சேரியும் அதன் சேரியும், வடமேற்கில் இருளஞ் சேரியும் அதன் சேரியும், வடக்கில் கொண்டஞ் சேரியும் அதன் சேரியும். கிழக்கில் கீழச்சேரியும் அதன் சேரியும், தெற்கில் கூவமும் அதன் சேரியும் ஆகப் பத்துச் சேரிகள் என்க. முதல் நான்கு ஊர்களும் 'சேரி' எனச் சேர்க்காமல் வழங்க முடியாமையால் நாலை முதலிலும் ஆறு பின் வைக்கப்பட்டது. நாலாறு (4 × 6) இருபத்தினன்கு என்றால் 24 கோட்டத்தில் (மணவூர்க் கோட்டத்தைச் சேர்ந்த) சேரி என முடியும் குமாரச்சேரி, இருளஞ்சேரி முதலியவற்றின் நடுவிலுள்ள திருவிற்கோலம் என்றுமாம். இவ்வாலயத்தோடு தரும கைங்கரிய வழிபாடு முதலியவற்றில் தொடர்புடைய 24 கிராமங்களுக்கு இடையில் என்றும் கூறலாம். இத் தேவஸ்தானத்தில் பழங்கால முதல் தொடர்புடைய நரசிங்கபுரம், பிச்சிவாக்கம், புதுமாவிலங்கை, பிஞ்சிவாக்கம்,

மப்பேடு, பிள்ளையார் குப்பம் முதலிய ஊர்களைக் கணக்கிட்டாலும் 24 வரும். உச்சிக்கால அபிஷேகத்திற்குப் பாலும், பூவும் தரும் பிஞ்சிவாக்கமும், பிரதோஷத்திற்கு உதவும் புதுமாவிலங்கையும் குறிக்கத் தக்கவை.

கூவத்திற்கு வடக்கே சுமார் 2 மைலில் ஓர் ஆறு உளது. இதுவே சென்னையில் ஓடிக் கடலில் கலக்கும் கூவநதி. இதுவே கூவப் புராணத்தில் பாலாறு எனப்படுகிறது. இதன் ஓரமாயுள்ள குழிகளிலிருந்துதான் திருமஞ்சனநீர் நாலுகால பூசைக்கும் ஆசாரத்துடன் கொண்டுவரப் படுகிறது. இதனால் இக்குழிக்குத் திருமஞ்சனக் குழி எனப் பெயர். இவ் வழக்கம் தொன்றுதொட்டு வருவது எனபதை

> "முன்பென நதிநீர் மூழ்கி, மெய்ம்மலர் புனல்
> கொண்டெய்தி" (செங்நெல் வைத்த சுருக்கம் 10)

கூறுகிறது.

"நாலாறு சேரி நடுப்புகுந் தாராமாயின்
தோலோடு ஆமை தொட்டதுண்டோ அம்மானை,
தொட்டன ரென்றே மறையோர்
தொடாதிருந்தார் அம்மானை"

(சேரிகள் நடுவில் புகுந்தார் எனில் அவர். தோல், ஆமை என்பவற்றைத் தொட்டிருப்பாரோ? தொட்டதனால் தான் மறையவர்களால் அவர் தொடாமல் (தீண்டாத் திரு மேனியாக) இருந்தனர். எனவே, இன்றுவரை பீடத்தை யன்றி இலிங்கத்தைத் தொடாமல் பூசிக்கப்படுவது இதனு லறியலாம்.

ஒப்பிலாமணிப் புலவர், "கூவத்து காரணனைக் கொன் ருயே கற்பகப் பூங்கா வெட்டலாமோ கறிக்கு" என்பதால் கூவத்தில் நாரணன் என்ற வள்ளல் இருந்தமை புலனும். நாரண பிள்ளையார் கோயில் இவ் வள்ளல் பெயராலுள்ளமை

ஆராயத் தக்கது. இரட்டையர் ஒரு சமயம் வீரசம்பு என்பவர் தந்த பரிசை இடக் கையால் வாங்கியதற்குக் காரணம் கூறும்போது "கூவராயன் தியாகங் கொள்வோம் வலக்கை முடி, யாவர் தரினும் இடக்கை கொள்வோம்" என்று கூவராயன் இயல்பைக் கூறிய பாடலினால் கூவத்தில் இருந்த வள்ளல் பெயர் தெரிகிறது, ஆனால் கூவராயன் என்பவர் கூவத்து நாரண வள்ளலோ அல்லது வேறு ஒருவராகவோ இருக்கலாம். எனவே கூவத்தில் கொடை வள்ளல்கள் பலரிருந்தனர் என்பது கூவ புராணத் திருத்தலச் சுருக்கம் 48, 49, 56 பாடல்களிற் காண்க. கோயிலில் தென்மேற்கில் உள்ளவர் அச்சிறுத்த விநாயகர் 'அச்சிறுத்த அடிகளே' (பாயிரம் 2-ம் பாடல்)

"தச்சு விடுத்தலும் தாமடி யிட்டலும்
அச்சு முறிந்தது என்றுந் தீபற' (திருவாசகம்)

"முப்புரமெரி செய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடி செய்த அதிதீரா" (திருப்புகழ்)

கூவரம் - தேர்க்கால் - அதை முறித்தமையால் பிள்ளையாருக்கு, 'கூவரக்னர்' எனவும் அத்தலம் (இடை குறைந்து) கூவம் எனவாயிற்று.

பெருமான் சந்நிதிக்குக் கிழக்கில் இருப்பது 'அச்சிறுகேணி' இக் குளத்தின் கீழ்க் கரையிலுள்ள வன்னி மரத்தில் நவராத்திரியில் அம்பு போடும் காட்சி மிகச் சிறப்பு. இம் மரத்திற்கு நேர் வடக்கே யிருப்பது 'பூங்காவனப் பிள்ளையார் கோவில்'. காலை பூசை இவருடைய பூசை நடந்துதான் முடிவடையும்.

## குமர வட்டம் :

வன்னி மரத்திற்கு நேர்கிழக்கில் உள்ள குமர வட்டத்தில் குமரக் கடவுள் திருவுருவம் உள்ளது. அச்சொடிந்த போது திகைத்தோடிய அமரர்கட்கு 'அஞ்சேல்' என அபய

மீந்து உண்மை உரைத்த இடம் இது. திருவிற் கோலப் பெருமானுக்கருகில் அக்நி மூலையில் உள்ள பிள்ளையார் குப்பத்தில் வீரபத்திரர் ஆலயம் உள்ளது. இங்கு வெற்றிலைக்காப்பு செவ்வாய், வெள்ளி முதலிய நாட்களில் சிறப்பாக நடைபெறும். இவ் விழாவில் உற்சவ மூர்த்தி மட்டும் வீதிவலம் வருவதில்லை. திரிபுர தகனத்தன்று வந்த எல்லாக் கடவுளரும் இத தலத்தைச் சுற்றிக் கோயில் கொண்டனரென்பது (திருத்தல. 53) புராணம். இத் தலத்திற்கு மேற்கே உள்ள பெரியாண்டவன் கோயில் என்ற ஐயனார் கோயில், நாயனார் கோயில் என வழங்குகிறது. 'நாரசிங்கம் தொழும் தேவ சிங்கம்' (சந்தானகிரி, 2) கூறுவது நரசிங் கருள்ள நரசிங்கபுரத்தையும், இருளஞ்சேரி கிராமத்திலுள்ள தேவசிங்க ஆதீனத்தையும் குறிக்குமா என்பது ஆராயத் தக்கது. நரசிங்கபுரத்திற்கும் இருளஞ்சேரிக்கும் ஒரே கிராம அதிகாரி உள்ளார்.

"கூவு நீரை வெள்ளங் கொண்டகலுமோ தான்"

(திருத்தல-57)

"ஓவிலொண் நடுக்கூவம் ஒப்பவே.........
கூவமென்றொரு பெயர் கொண்ட தந்நகர் (திரிபுர. 136)

என்றபடி கூவமும் இதைச் சார்ந்த ஊர்களிலும் கிணறுகள் அதிகம் உள்ளன. கூவம் - கிணறு உள்ள ஊர் கூவம் என்க. இத் தலத்திற்குச் சற்று கிழக்கே 'கண்ணுவர் வழிபட்ட கண்ணுவலிங்கம் உள்ள இடம் கண்ணனூர் என வழங்குவர்.

### சாத்திரக் குறிப்புகள்:

இந் நூலாசிரியர் கூறுவது சைவ சித்தாந்தமே. விநாயகரை வணங்கத் தக்க பக்குவிகளைக் கூறும் வகையில் 'காமத் தழலிப்ப நீர்சடைக் கொண்ட நிமலன்' எனக் குறித்தது காண்க. 'இதயத் தவிசின் வைப்பாம்' என்றது

அந்தரியாகப் பூசையைக் குறிப்பது. திரிபுர தகனச் சருக்கம் 120-ஆம் செய்யுளில் 'அப்பணி செஞ்சடை ஆதிபுராதனன் முப்புரம் சென்றனன் என்பர்கள் மூடர்காள்' என்று திருமந்திரக் கருத்தும் 137-ஆம் செய்யுளில் க[illegible]டோகம் பாவனை, சிவோகம்பாவனை கூறுகிறார். ஆண்கட்குச் சிவ பூசையும் பெண்கட்குக் கற்பும் எல்லாம் தருமென மறை முகமாகக் கூறுகிறார். நைமிசாரணிய சருக்கம் 17-ஆம் பாட்டில் 'ஒன்னார் தெறலும்' என்ற திருக்குறள் கருத்தும் திரிபுர சருக்கம் 24-ல் 'இயல்பாகு நோன்பிற் கொன்றின்மை' என்ற குறளும் 25-ல் 'பகல் வெல்லும் கூகையைக் காக்கை' என்ற குறள் கருத்தும் வந்துள்ளன.

ஆலங்காட்டுக் காளியே இங்குள்ள திருக்க மாதா. இத் தலத்துப் பீடாரி (பீடாரி – பீடையை அழிப்பவள்) என உள்ளாள் என்கிறார். பீடாரி விழா எட்டுநாள் இருளில் முடிந்தபின் சிவனார் விழா நடக்கும்.

---

இந்நூல் கிடைக்குமிடம் :

**K. V. அண்ணாமலை முதலியார்,**

6, இராமகிருஷ்ணன் தெரு, 



இந்நூல் வெளியிட்டோர் :

வெ. சுப்பராய முதலியா

K. V. அண்ணாமலை முதலி

குமாரச்சேரி.